ஸ்ரீ:

பொய்கையாழ்வார் அருளிச்செய்த

# முதல் திருவந்தாதி.



"அம்ருதஸ்வாதினீ" என்னும் உரையுடன்.

திருக்குடந்தை ஸ்ரீ பராங்குச பக்த ஸபையாரால்


கும்பகோணம்

ஸ்ரீ ஸுதர்சன பிரிண்டிங் ஒர்க்ஸ், லிமிடெட்டில்

அச்சிடப்பெற்றது.

தாது-ஆடி

1936

ஸ்ரீ:

பொய்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

பொய்கையாழ்வார் அருளிச்செய்த

# முதல் திருவந்தாதி.

திருக்குடந்தை ஸ்ரீ ஆராவமுதாழ்வான்
ஸந்நிதி வீதி
ப ஸ்ரீநிவாஸ ராகவாசாரியர் (ஜோடனி)
இயற்றிய அம்ருதவர்ஷிணீ என்னும் உரையுடன்,
திருக்குடந்தை ஸ்ரீபராங்குச பக்தஸபையாரால்

கும்பகோணம்
ஸ்ரீ ஜனார்த்தன பிரிண்டிங் ஒர்க்ஸ், லிமிடெட்டில்
அச்சிடுவிக்கப்பட்டது.

தாத்ரு-ஷுப
1936.

    

# முதலாழ்வார்கள் வைபவம்.

ஸ்ரீய:பதியான ஸர்வேச்வரன், அநாதிகர்மவச்யர்களான ஜீவாத்மாக்களை உஜ்ஜீவிக்கச்செய்ய, தம்முடைய தேவீபூஷணாயுத பரிகரங்களை இப்பூமியில் அவதரிக்கச்செய்தான். அப்படி அவதரித்தவர்களுள் மற்ற ஆழ்வார்களுக்கெல்லாம் முன்னம் த்வாபர யுகத்திலேயே அவதரித்ததால் முதலாழ்வார்களென்னும் காரணப் பெயருடைய மூவர் பொய்கை—பூதம்—பேயார் எனப்படுவர். இவர்கள் பகவதநுக்ரஹம் பெற்றபின் ஒருவரைவிட்டு ஒருவர் பிரியாமல் சேர்ந்தே வாழ்ந்திருந்தமையால் கோயில்களிலும், மூவரும் சேர்ந்தே அர்ச்சையாக எழுந்தருளியிருப்பார்கள். ஆதலால் இவர்களுடைய வைபவமும் ஒன்றாகச்சேர்த்து இங்கு எழுதப்படுகிறது. இவர்கள் செய்தருளிய பிரபந்தங்கள், நாலாயிரதிவ்யப்ரபந்தங்களுள் மூன்றாவது ஆயிரமாகிய இயற்பா என்னும் பகுதியில் முதலில் அமைந்திருக்கும்.

## பொய்கையாழ்வார்

“இவ்வாழ்வார் தொண்டைநாட்டில் முத்திதரும் நகரேழில் முக்கியமாம் கச்சி” என்று புகழ்பெற்ற மோக்ஷத்தைத்தரும் நகரங்களில் ஒன்றாகிய காஞ்சீ நகரத்தில் திருவெஃகா என்கிற திவ்ய தேசத்தின் வடதிசையில் மிகவும் அருகாமையிலுள்ள ஓர் பொய்கையில் ஐப்பசி மாதத்தில் திருவோண நக்ஷத்திரத்தில் அவதரித்தார். இவருடைய பெருமைகளை அநுபவித்த ஆசாரியர்கள இவரை, தேவர்களுள் உயர்ந்த புருஷோத்தமனுடைய ஆயுதங்களுள் ஒன்றாகிய பாஞ்சஜன்யம் என்கிற சங்கத்தின் அவதாரமாக நினைத்துள்ளார்கள். இவர் தாமரைப்பூவில் உதித்தபடியால், அயோநிஜர் என்கிற ஏற்றமும் பெற்றிருந்தார். இவர் பொய்கையிலே அவதாரம் செய்தபடியால் பொய்கையாழ்வாரென்றே இவருக்குப் பெயரும் வாய்ந்தது

## பூதத்தாழ்வார்.

இவர் அத் தொண்டைநாட்டிலேயே திருக்கடல்மல்லையென்கிற திவ்யக்ஷேத்திரத்தில் ஒரு குருக்கத்திமலரில் ஐப்பசி மாதத்தில் அவிட்ட நக்ஷத்திரத்தில் அயோநிஜராய் அவதரித்தார். இவரை ஸர்வேச்வரனுடைய ஆயுதங்களில் ஒன்ருகிய கதாயுதத்தின் அவதாரமாக பூர்வாசாரியர்கள் வழங்குவார்கள். இவர் திருமாலுடைய கல்யாணகுணங்களையே அநுபவித்து அதனுலேயே உயிர்தரித்திருந்தமையால் இவருக்கு பூதத்தாழ்வார் என்று பெயர் ஏற்பட்டது. ஸமஸ்கிருதத்தில் ஸூ என்கிற வினைச்சொல்லிலிருந்து பூதம் எனனும் பதம் ஏற்படுகிறது. அதற்கு இருப்பது என்று பொருளாகும். இவர் பகவத்குணங்களாலேயே உயிர்தரித்திருந்தமையால இவர் விஷயத்தில் பூதத்தாழ்வார் என்கிற திருநாமம் பொருளுடன் விளங்கிறது.

## பேயாழ்வார்.

இவர் தொண்டைமண்டலத்தில் திருமயிலேயில் (மயிலாப்பூர்) ஒரு கிணற்றிலே ஒரு செவ்வல்லிமலரில ஐப்பசி மாதம் சதய நக்ஷத்திரத்தில் அவதாரம்செய்தார். இவரை, பஞ்சாயுதங்களில் ஒன்ருகிய நந்தகம் என்கிறவாளின் அம்சமாகச் சொல்வார்கள். இவர் பகவத்குணங்களை அனுபவித்து அதனுலுண்டான ஆநந்தத்தால் அழுதும் தொழுதும் தலையினுடாதகம்தட்டக் குதித்தும ஆடியும் திரிந்துகொண்டு பிறர் பேயெனங் கருதும்படி வாழ்ந்திருந்தமையால் பேயாழ்வாரென்னும் பெயர்படைத்தார. புறமதங்களில் சென்றுகொண்டிருந்த திருமழிசையாழ்வாரைத் திருத்தி திருமாலின் அடியராகச் செய்தருளினூர் என்கிற ஏற்றமும் இவருக்குண்டு.

## இவர்கள் ப்ரபாவம்.

இவர்கள் ஸர்வேச்வரனிடத்தில் மிகுந்த பக்தியுள்ளவர்களாய் அவனையே துதிசெய்துகொண்டு, ஒருநாள் இருந்தவிடத்தில் ஒரு நாள இராமல் ஓடிக்கொண்டு பகவத் குணங்களையே தாரக போஷக போக்யங்களாகக்கொண்டிருந்தார்கள். இவர்கள் பரமனைப்பற்றியே

கவி பாடுவதில் மிக்க திறமையுள்ளவர்களென்று நாடனைத்தும் நன் கறியும். அத்துடன் ஆழ்வார்களுள் தலைவராகிய நம்மாழ்வாரும் "இன் கவிபாடும் பரமகவிகள்" என்றும் "செஞ்சொற்கவிகள்" என்றும் இவர்கள் பாடிய பாசுரங்களைப் புகழ்ந்து பேசியிருக்கிறார். தமிழ் நன் னூல் துறைகள் அஞ்சுக்கிலக்கியமான பாடல்களைப்பணிக்கும் பர காலன் என்கிற திருமங்கையாழ்வாரும் செந்தமிழ் பாடுவார் என்று இவர்களை பாக்கப்பேசியுள்ளார் இஙஙனம் பெருமைவாய்ந்த இவ் வாழ்வார்கள் கூறை சோறிவை வேண்டித்திரியும் ஸம்ஸாரிகளை பேய்களாகக் கருதி, அவர்கள் நடையாடுகிற நகரங்களையும்விட்டு காடுகளிலேயே பகவத்தியானம் செய்துகொண்டு வாசஞ்செய் தார்கள்.

இங்ஙனம் இவர்கள் தனித்தனியே சென்றுகொண்டிருக்கும் பொழுது, பொய்கையாழ்வார் ஒருநாள் மாலையில் பெருமழையால் அடிபட்டு திருக்கோவலூர் என்கிற ஒரு நடுநாட்டுத் திருப்பதியில் ம்ருகண்டுமுனிவரின் வீட்டின் ரேழியில் ஒதுங்கி அங்குள்ள திண் ணையில் சயனித்திருந்தார். பிறகு தற்செயலாக பூதத்தாழ்வாரும் அம்மழைக்கு நடுங்கி அவ்விடமே வந்துசேர பொய்கையாழ்வார் "ஒருவா படுக்குமிடம் இருவா உட்காரலாமென்று விண்ணப்பம் செய்ய இருவருமாய் உட்கார்ந்திருந்தார்கள். உடனே பேயாழ் வாரும் அவ்விடம் வந்துசேர இருவரும் "இருவர் உட்காருமிடம் மூவர் நிற்கலாமென்று" சொல்ல மூவருமாய் நின்றுகொண்டிருந் தார்கள். அப்பொழுது இம்மூவருக்கும் அநுக்ரஹம்செய்து இவர் களால் உலகங்களை உஜ்ஜீவிக்கச்செய்யத் திருவுள்ளம்பற்றிய திரு மால் பெரிய வடிவுடன் அம்மூவரையும் நெருக்க அவர்களும் இது வரையில் இல்லாத நெருக்கத்திற்குக் காரணம் என்னவென்று ஆலோசித்துப்பார்க்க பொய்கையாழ்வார் பூமியாகிய அகலில் ஸமுத்ரஜலத்தை நெய்யாகக்கொண்டு ஸூரியனாகிய தீபத்தை ஏற்றி னார். பூதத்தாழ்வார் அன்பாகிற அகலில் ஆர்வம் என்றும் நெய்யை விட்டு ஞானமாகிற விளக்கை ஏற்றினார். அவ்விரண்டு ஒளிகளைக் கொண்டு பேயாழ்வார் பகவானை ஸாக்ஷாத்கரித்தார். தான் ஸாக்ஷாத்கரித்தமையை "திருக்கண்டேன்" என்ற பாசுரம் முத லாகப் பாடியருளினார்

## முதல் திருவந்தாதி

அவைகளுள் முதல்திருவந்தாதி என்பது பொய்கையாழ்வார் “ வையந்தகளியா ” என்று தொடங்கி பாடியருளின நூறு பாசுரங்களாகும். இவைகள அந்தாதியாகப் பாடப்பட்டபடியால், இப் பிரபந்தத்திற்கு திருவந்தாதியென்றுபெயர், முந்திய பாசுரத்தின் கடைசியிலுள்ள பாதத்தையோ, பதத்தையோ, அசைச்சொல்லையோ, எழுத்தையோ, சீரையோ, மேல் பாசுரத்திற்கு ஆரம்பமாக வைத்துப் பாடியபாடல்களுக்கு அந்தாதியெனப்பெயர். நூறு வெண்பாக்களால் பாடிய பிரபந்தமாதலால் இதற்கு நூற்றந்தாதியெனப்பெயர். ஆழ்வார்கள் பதின்மருள் முந்தியவர்களான மூவருள்ளும் இவர் முதல்வராதலாலும், முதன்மையாக பாசுரங்களைப் பாடியதாலும், இப் பொய்கையாழ்வார் பிரபந்தத்திற்கு முதல் திருவந்தாதியெனப்பெயர்.



ஸ்ரீ:

ஸ்ரீமதே ஸரோயோக்யாசார்ய வாக்ப்ரஹ்மணே நம:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேஶிகாய நம:

# முதல் திருவந்தாதி

## தனியன் வ்யாக்யானம்.



[முதலியாண்டான் அருளிச் செய்தது.]

(இருவிகற்ப நேரிசைவெண்பா)

கைதைசேர் பூம்பொழில்சூழ் கச்சிநகர் வந்துதித்த
பொய்கைப் பிரான் கவிஞர் போரேறு—வையத்
தடியவர்கள் வாழ வருந்தமிழ் நூற்றந்தாதி
படிவிளங்கச் செய்தான் பரிந்து:

பதவுரை

| | | | |
|---|---|---|---|
| கைதை | தாழைகள் | வையத்து | பூமியிலுள்ள |
| சேர | சேர்ந்திருக்கிற | அடியவர்கள் | பக்தர்கள் |
| பூம்பொழில் | அழகான சோலைகளால் | வாழ | உஜ்ஜீவிக்கும்படியாக |
| சூழ் | (சுற்றிலும) சூழப்பட்ட | அருந்தமிழ் | அருமையான தமிழ் சொற்களான |
| கச்சிநகர் | காஞ்சீநகரத்திலே | நூற்றந்தாதி | அந்தாதியான நூறு பாசுரங்களை |
| வந்துதித்த | அவதாரம்செய்த | பரிந்து | கிருபைகூர்ந்து |
| கவிஞர்போரேறு | கவிகளுள் உயர்ந்தவரான | படி | பூமியில் |
| பொய்கைப் பிரான் | உபகாரகரான பொய்கையாழ்வார் | விளங்கச் செய்தான் | பிரகாசிக்கச்செய்தான். |

கைதைசேர:—முதல்பாதத்திலே இவ்வாழ்வாருடைய பிறப்பின்மேன்மை சொல்லப்படுகிறது. நீர்ப்பாங்கான நிலத்தில்விளை

யக்கூடிய தாழைகளால் அமைக்கப்பட்ட வேலிகளால்காவலுள்ள சோலைகள் நிறைந்த காஞ்சீநகரம். "அம்பூம்தேனிளம் சோலையப்பால்" என்று நம்மாழ்வார் உகந்தருளியதேசம். இப்படி சிரமஹரமான தேசத்திலே வேகவதியாற்றின் கரையிலுள்ள பொய்கையில் ஐப்பசி மாதத்திருவோணத்து நாளில் ஸ்ரீய:பதியின் கொப்பூழின் எழுகமலப்பூவுதித்த பிரமனைப்போல் பொற்றாமரைமலரில் அவதரித்தார்.

வந்துதித்த:—வெளியிருளை நீக்க சூரியோதயம்போல் "வருத்தும்புறவிருள்மாய்த்தவெம்பொய்கைப்பிரான்" என்றபடி அக்ஞானமாகிற உள்ளிருளைப்போக்கவுதயமானார்.

கவிஞர்போரேறு:—ஆழ்வார்கள் பதின்மருள்ளும் முதலாழ்வார்கள் முதல்வர்கள்-அம்மூவருள்ளும், இவர் முதல்வராதலால் கவிகளுள் உயர்ந்தவர். மற்றவர்களும் செந்தமிழ் பாடுவாரென்றும் இன்கவிபாடும் பரமகவிகளென்றும் கொண்டாடும்படி இவர் பிரபாவமிருப்பது.

வையத்தடியவர்கள்வாழ:—ஸ்ரீ வைஷ்ணவர்கள் "நின்தாளிணைக்கீழ் வாழ்ச்சி" என்கிறபடி எம்பெருமான் திருவடிகளில் நல்லடிமைசெய்வதாகிற பரமபுருஷார்தத்தைப் பெற்று வாழும்படி உபகரித்தார்.

அருந்தமிழ்:—யாவரும் அப்யஸிக்கக்கூடிய பாஷையில் அமைந்திருப்பினும்-அருமையாயும் அர்த்தங்களை யாலோசிக்கும்பொழுது நுண்ணறிவாலல்லது உணரமுடியாத சீர்மையுடன் கூடியது. எளிதில் கற்கும்படி நூறுபாசுரங்கள் அடங்கியது.

படிவிளங்க:—பகவத்ஞானம் பிறப்பதரிதான இந்த ப்ரக்ருதியிலே, கன்றுக்குச் சுரக்கும் சுரபியைப்போல் தயையினால் தூண்டப்பட்டவராய் நூறுபாசுரங்களைப் பாடினார்-படிவிளங்க-தான் இடைகழியிலே பகவானைக் கண்டனுபவித்தபடியே பாடியருளினாரென்றும் பொருள் கூறுவதுண்டு.

காஞ்சீ என்கிற வடசொல் கச்சி என்றும் கேதகீஎன்னும் சொல் கைதை என்றும் திரிந்தனவாகத் தமிழர் கூறுவார்கள்,

ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் தூப்புல்
திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.

பொய்கையாழ்வார் அருளிச்செய்த-

# முதல் திருவந்தாதி.

---

வையந்தகளியா வார்கடலே நெய்யாக
வெய்யகதிரோன் விளக்காக—செய்ய
சுடராழியானடிக்கே சூட்டினேன் சொன்மாலை
இடராழி நீங்குகவேயென்று. (1)

பதவுரை

| | | | |
|---|---|---|---|
| வையம் | இப்பூமியானது | சுடர் | தேஜஸ்ஸையுடைய |
| தகளியா | அகலாகவும் | | |
| வார் | பெருகிக்கொண்டிருக்கிற | ஆழியான | சக்ராயுதத்தைத் தரித்த ஸ்ரீமந்நாராயணனுடைய |
| கடல் | ஸமுத்திரமானது | | |
| நெய்யாக | நெய்யாகவும் | அடிக்கே | திருவடிகளிலே |
| வெய்ய | உஷ்ணமான | | |
| கதிரோன் | கிரணங்களையுடைய சூரியன் | இடராழி | துக்கங்களாகிற ஸமுத்ரம |
| | | நீங்குக என்று | விலகவேண்டுமென்று (கருதி) |
| விளக்காக | தீபமாகவும் (இங்ஙனம் நினைத்து, | சொன்மாலை | சொற்களாகிற மாலையை |
| செய்ய | சிகப்பு நிறமுள்ள | சூட்டினேன் | அர்ப்பணம செயதேன். |

வ்யாக்யானம்

இப்பொய்கையாழ்வார் திருக்கோவலூரில் ம்ருகண்டு முனிவரின் திருமாளிகையின் இடைகழியில்பூதத்தார் பேயார்என்ற இருவருடன் நின்று கொண்டிருந்தார். அவ்வளவில் நகஸ்ரீஙநாவ

ராஜ்ஞி என்று கோஷித்துக்கொண்டிருக்கிற திருமகளுடன் அவள் குற்றங் கண்டுரைத்தாலும் என்னடியாரது செய்யார் என்கிற ஸர்வேச்வரன் அங்கு வந்து அவர்களைநெருக்க, அவர்களும் ஜ்ஞாநதீபேந ஹாஸ்வதா என்று ஞானக்கண்களால் காண அங்கு நெருக்கிய புருடனை ஸர்வேச்வரனென்று உணர்ந்தார்கள். அப்பரம புருஷனை அநுபவித்து அவனிடமுள்ள பக்தியால் அனைத்துலகும் அவனை அறிந்து வாழும்படி பாசுரங்களை அருளிச்செய்தார்கள். அவர்களுள் இவ்வாழ்வார் "வையந்தகளியா" என்று துடங்கி நூறுபாசுரங்களை யருளிச்செய்தார.

வையந்தகளியா:-இப்பாசுரத்தால்தான் எம்பெருமானைக்கண்ட ப்ரகாரத்தைச் சொல்லுகிறார். இப்பூமியை அகலாகவும் ஸமுத்ரத்தை நெய்யாகவும் ஸூரியனை தீபமாகவும் நினைத்து இப்படி ஒரு விலக்ஷணமான விளக்கேற்றி ஸ்ரீய:பதியான நாராயணனைக் கண்டு கொண்டேனென்கிறார். இப்பூமி ஸூரியன் கடல் இவைகளைக் கொண்டு ஈசனை அநுமானம் என்கிற பிரமாணத்தின்படி யாவரும் அறியலாமென்று பொருள். வேதங்கள், மௌலிவிளங்க வியாசன் விரித்த நன்னூலில் வேதங்களாகிற சாஸ்திரத்தைக்கொண்டு பகவானை அறியவேண்டுமெனறும், அநுமானத்தால் காண்பது பிசகென்றும் அங்ஙனம் காண்கிற நியாய மதஸ்தர்களைத் தூஷித்தும் பேசியிருப்பதால் இங்கு இவர் அநுமானத்தால் கண்டேனென்பது பொருந்துமோவென்னில், ந்யாயாநுக்ருஹீதஸ்ய வாக்யஸ்ய அர்த்த நிர்ணாயகத்வாத் என்றபடி யுக்திகளோடுகூடின வேதவாக்யந்தான்இப்பொருள் இன்னது, இவ்வகைப்பட்டது, என்று தீர்மானம் செய்துகொடுக்கும் எனறு சொல்லியிருப்பதாலும் வேதவாக்யங்களை கைக்கொள்ளாமல் கேவலம் அநுமானத்தால் ஈசனைப் பார்க்கிறார்கள் என்கிற காரணம் பற்றியே நியாய மதஸ்தர்களை தூஷித்திருப்பதாலும் இவர் இங்ஙனம் கண்டதாகச் சொல்வது வேதத்திற்கு உதவியாக அநுமானத்தை கூட்டிக்கொண்டபடியேயல்லது ஸ்வதந்திரமாகக் கைக்கொண்டதல்ல. உலகத்தில் ஒரு வீடு—குடம்—வஸ்திரம் முதலான சில வஸ்துக்களைக் கண்டால் இவை சில அவயவங்களோடு கூடியிருக்கின்றன. ஆதலால் இவை ஒருவனால் செய்யப்

பட்டிருக்கவேணும் என்றறிவதுபோல், இப்பூமி ஸூரியன் கடல் முதலிய வஸ்துக்களைப் பார்த்தால் இவை ஞானசக்திகள வாய்ந்த ஒருவனால் செய்யப்பட்டனவென்றறியலாமெனகிருர். இப்பூமியானது காடுகள்—வீடுகள்—மலைகள் முதலிய விசித்ராவயவங்களுடன் காணப்படுவதால இதைக் கண்டதும் புருஷோத்தமனால் இது ஸிருஷ்டிக்கப் பட்டதேயென்றுணரலாமென்கிருர்.

வார்கடலே நெய்யாக:—எப்பொழுதும் பரிபூர்ணமாயிருக்கும் ஸமுத்திரம் எண்ணற்ற நதிகளால இரவும பகலுமாய் நிரப்பப்பட்டும்—நிரையாததாலும பூமி மட்டத்திற்குமேல் உயர்ந்திருந்தும் பூமியை விழுங்காததாலும், ஒருவனால் செய்யப்பட்டு அவனுடைய ஆக்ஞையில் அமர்ந்திருக்கிறதென்று நன்குவிளங்குகிறது. ஆதலால் கடல என்ற காரணத்தைக்கொண்டு ஈசன் உளனென்று அறியலாம். இவவர்த்தத்தை ஜெவொஉயஸூஹாஸ ஸஙிவஜ திஃ என்கிற சுலோகத்திலும் காணலாம்.

வெய்யகதிரோன் .—ஸூர்யன் ஸ்வதந்திரனாகவிருக்குமபக்ஷத்தில், தன் மார்க்கத்தில் சென்றுகொண்டிருக்கும் நிலைமையில் எக்காலத்திலாவது முப்பதுநாழிகைப் பொழுதில ஒரு நாழிகை ஏறக் குறையச் செலலலாமே. அங்ஙனமின்றி ஒரேவண்ணமாக பகலைச் செயதுகொண்டிருப்பதால் 'ஹீஷொஜெதி ஸூயஃ' என்றபடி ஒருவனிடத்தினின்றும் பயத்தினால் இங்ஙனம் நடந்துகொள்கிருனென்று தோற்றுவதால், ஸூர்யனைக்கொண்டு ஈச்வரனைத் தெரிந்துகொள்ளலாம்.

உலகத்தில் மறைந்திருக்கும் ஒரு பொருளை விளக்கேற்றிக் காண்பதுபோல், ஆழ்வார், பூமியாகிற அகலில் கடலான நெய்யை விட்டு சூரியனாகிற விளக்கேற்றி ஸ்ரீய:பதியாகிற பரம்பொருளைக் கண்டாரென்பது மேம்பாடான பொருள். இப்படி பரமபுருஷனைக் கண்டபின்பு அவனுடைய திருவடிகளில் கைங்கர்யமே நமக்கு உத்தேச்யமென்று பின்னடிகளால் காட்டுகிருர்.

செய்ய சுடர்:—சிவந்த தேஜோநிதியான திருவாழியைக் கையிலேந்தினவன். " சக்கரத்தண்ணலேயென்று தாழ்ந்து " என்றபடி

இவர்கள் முற்பட திவ்யாயுதங்களில் கண்வைப்பர்கள். "ஆழி யான்" என்பதால் "நிர்விசேஷம் ப்ருஹ்ம" அதாவது ஈசன் குண மற்றவன் என்று சொல்லும் வாதிகளை நிரஸிக்கிறார்.

அடிக்கே:—அடிமையானவன் இறங்கும் துறை திருவடிக ளாதலால் அவைகளை அநுபவிக்கிறார்.

சூட்டினேன்:— வாசிகம், காயிகம், மானஸிகம் என்று மூவ கைப்பட்ட கைங்கர்யங்களுள் வாசிககைங்கரியத்தைச் செய்து பி ழைக்கிறேனென்கிறார். "யதோவாசோ நிவர்த்தந்தே" என்று வேதங்கள் கைவாங்கின வஸ்துவைத்தான் பேசத்தொடங்கினார்.

இடராழி:—துன்பக்கடலைத் துலைப்பது பரமப்ரயோஜனமென் கிறார். இன்னாருடைய துக்கங்கள் என்று சொல்லாததால்தான் இவ்வளவுகாலம் பரமனைப் புகழாததால வந்த துன்பம் துலைவதற்கு என்றும் சொல்லலாம். "மருளற்ற தேசிகா வானுகப்பாலிந்தவைய மெல்லாம் இருளற்றிறைவனிணையடி பூணடவெண்ணுதலால் என்பதற்கிணங்க உலகத்தார படும் துயரை விலக்கி இறைவன் அடி களை அவர்கள் அடையவேண்டும், என்று கருத்தையுடையவர்கள் ஆசாரியர்கள என்பதால், நம்போன்ற ஸம்ஸாரிகளுடைய துயரங் களை விலக்கத்தான் பாடினார் என்றும் பொருளாம்.

**என்று கடல் கடைந்த தெவ்வுலகம் நீரேற்றது**
**ஒன்று மதனை யுணரேன் தான்—அன்ற**
**தடைத்துடைத்துக் கண்படுத்தவாழி—இது நீ**
**படைத்திடந்துண்டுமிழ்ந்த பார். (2)**

பதவுரை

| | | | |
|---|---|---|---|
| கடல் | ஸமுத்திரத்தை | நீரேற்றது | (மஹாபலியிட மிருந்து)தீர்த்த த்தைப்பெற்று க்கொண்டது |
| கடைந்தது | (மந்தரபர்வதத் தால்) கடைந்தது | | |
| என்று | என்றைதியனமோ | எவ்வுலகம் | எந்தவுலகத்திற் காகவோ |

| | | | |
|---|---|---|---|
| அதனை | அக்காரியங்களை | கண்படுத்த | நீ உறங்கின |
| | | ஆழி | ஸமுத்திரம் |
| ஒன்றும் | சிறிதுகூட | இது | இப்பூமியோ |
| நான் | யான் | நீ | தேவரீர் |
| உணரேன் | தெரிந்துகொள்ளமாட்டேன் | படைத்து | உண்டுபண்ணி |
| அது | அக்கடல் | | |
| அன்று | அப்பொழுது | இடந்து | (வராஹாவதாரத்திலே) உயரே தூக்கி |
| அடைத்து | (மலைகளால்) அணைகட்டப்பட்டு | உண்டு | அமுதுசெய்து |
| | | உமிழ்ந்த | பிறகுவெளிப்படுத்தின |
| உடைத்து | (ராவணனைக் கொன்று மீண்டு வரும்போது அதை அழித்து | பார | பூமி. |

வ்யா—என்று— பகவத் விஷயத்தை இழந்த கீழ நாளகளுக்கு வருந்துகிறார். கடல் கடைந்தபொழுதும் மஹாபலியினிடம் வாமனனாய் வந்து யாசித்த பொழுதும் நான் எங்கிருந்தேனோ? அவ்விஷயங்கள் ஒன்றையும் அறியமாட்டேன். தன் ஸங்கல்பத்தினாலேயே தேவாகளுக்கு சாவாமலிருப்பதாகிற வரத்தைத் தந்திட வல்லவராயினும், இப்பூமி தன்னுடையதா யிருக்கச் செய்தேயும், கடல் கடைந்ததும் மண் இரந்ததும் ஜீவாசிகளுடைய உஜ்ஜீவநார்த்தமாதலால் அக்காலங்களில் நான் இழந்தேனே என்கிறார். ஈசனை கடலைக் கொண்டும் சூரியனைக்கொண்டும் அநுமானம் செய்து காணவேண்டிய நிர்ப்பந்தமில்லை. இப்பூமியைப்பார்த்தவுடனேயே இப்பூமியே ஈசனைக் காட்டுகிறதே என்கிறார்; "வாமநன் மண்ணிதுவென்று நம்மாழ்வாரும் இவ்வர்த்தத்தை விளக்குகிறார்—அதாவது இப்பூமியைக் கண்டவுடன் அவன் இதை உண்டுபண்ணினதும வராஹாவதாரத்தில் தன் கோரப் பற்களால் தூக்கியதும் பிரளயாபத்தில் சாப்பிட்டதும் பிறகு உமிழ்ந்ததுவும் ஞாபகத்திற்கு வந்து அவ்வீச்வரன் நேரில் தோன்றுவதுபோல் இருக்கிறது. கடலைக் கண்டதும், "ஃபவஸாவ ஸஸஜ-ராதஎ" எனகிறபடி அவன் ஸிருஷ்டி செய்ததுவும் அணை கட்டியதும் அதை அழித்ததுவும் அக்கடலில் அவன் கண்வளருவதும் அறிவிற்கிலக்காகிறது. இச்செய்கைளால்

இவ்வுலகங்களுக்கெல்லாம் உடையவன் ஸ்ரீய: பதியான நாராயண ன்தான் என்று விளங்குகிறது. பூமியானது கண்ணுக்கெதிரே யிருப்பதால் அதை, இது என்கிற பதத்தாலும, கடல் வெகுதூரத்தி லிருப்பதால் அது என்கிற பதத்தாலும் சொல்லுகிறார். கடல் கடைந்த கதையால் அப்பொழுது கைவாங்கின தேவர்களைப்பரதே வதைகளாகக்கருத வேண்டாமென்று உபதேசிக்கிறார்

"படைத்திடந்து" என்கிற பதங்களால் இப்பிரபஞ்சத்திற்கு ஸ்ரீய:பதியே ஸ்வாமி என்கிறார்—அலலாததேவர்கள் இபபிரபஞ்சத் திற்கு உரிய சேஷியாயிருந்தால் கீழ்ச்சொல்லிய காரியஙகளுள் ஏதாவதொன்றைச் செயதிருக்க மாட்டார்களோ? ஆதலால் பூமி யை படைத்ததிலும சத்ருவான ஹிரண்யாக்ஷனிடமிருந்து மீட்டுக் கொண்டதிலும பிரளயகாலத்தில் தனவயிற்றில் வைத்துக் காப்பாற் யதிலும பிறகு வெளிநாடு காணவுமிழ்ந்ததிலும் இதர தேவதைகளுக்கு சிறிதும ஸமபந்தமில்லையே?

எங்ஙனம் அவர்களை நாம் போற்றுவது. ஆதலால் நமக்கு வகுத்த சேஷியான நாரணனையே பாடுவோமென்று—திரண்ட பொருள்

**பாரளவுமோரடி வைத் தோரடியும் பாருடுத்த**
**நீரளவும் செல்ல நிமிர்ந்ததே—சூருருவின்**
**பேயளவு கண்ட பெருமான்? அறிகிலேன்**
**நீயளவு கண்ட நெறி.** (3)

பதவுரை

| | | | |
|---|---|---|---|
| ஓரடி | ஒரு திருவடியானது | நீரளவும் | ஆவரண ஜலபர்யந்தமாக |
| பாரளவும | பூமியடங்கலும | செல்ல | போகும்படி |
| வைத்து | ஊனறி | நிமிாநததே | உயரேவளர்நததே |
| ஓரடியும | மற்றோர் திருவடியும் | | |
| பார | பூமியை | சூர்உருவின் | தெய்வப்பெண்ணென யசோதையின வடிவததைக் கொண்ட |
| உடுத்த | சூழ்நதுகொணடிருககிற | | |

| | | | |
|---|---|---|---|
| பேய் | பேயான பூதனையினுடைய | நீ | தேவரீர் |
| அளவு | ஆயுளின் எல்லையை | அளவுகண்ட | எல்லையாகக் காட்டிய |
| கண்ட | அறிந்த | நெறி | நல்மார்க்கத்தை |
| பெருமான் | ஸ்வாமியே | அறிகிலேன் | (நான்) உணரவில்லை |

வியா:—பகவானுடைய திவ்ய சரித்ரங்கள் பலவற்றுள் உலகளந்த வருத்தாந்தத்திலே ஆழ்வார்கள் மிகுதியாக ஈடுபடுவார்கள். அதிலும் கீழ் பாசுரத்தில் "எவ்வுலகம் நீரேற்றது" என்று திரிவிக்ரமாவதாரத்தை ஸ்மரித்த படியால் அதை மீறிச்செல்லமுடியாமல் அதில் கால்தாழ்கிறார். இப்பாசுரத்தால் வாமனனாகவந்து பூமியை யளந்தது எங்ஙனம் பொருந்துமென்று எம்பெருமானை வினவுகிறார்.

பாரளவும்:—பூமியடங்கலும ஒரு திருவடியைவைத்து மற்றொரு திருவடியால் பூமிக்கு உடையாகச் சொல்லப்படுகிற ஆவரண ஜலத்தளவும் சென்று நீர நடந்தது அளந்ததாகச் சொல்லமுடியுமோ? அதாவது உலகத்தில் ஒருவன் ஒரு வஸ்துவை அளக்க வேணுமென்றால்தான் ஓரிடத்தில் நின்றுகொண்டு நின்றவிடம் நீங்கிய பிரதேசத்தில் மேல் அடிவைத்துச் சென்றால் அளந்தான் என்று வியவஹரிப்பார்கள். நீர் அளந்ததோ வென்றால் ஒரு திருவடியை பூமியிலவைத்து மற்றோர் திருவடியால் ஆவரண ஜலத்தளவும் சென்றமாத்திரமே. ஆகவே நீர நிற்பதற்கே இடம் போதாமலிருந்த நிலையில் இப்பிரபஞ்சங்களை அளந்தீரென்னும் வார்த்தை எங்ஙனே பொருந்தும். இவ்வர்த்தத்தை "கழறலமொன்றே நிலமுழுதாயிற்று, ஒரு கழல்போய் நிழல் தர வெல்லாவிசும்பும் நிறைந்தது, நீண்ட வட்டத்தழறலர் ஞானச்சுடர்விளக்காயுயர்ந்தோரையில்லாவழறலர் தாமரைக் கண்ணன், என்னோவிங்களக்கின்றதே." என்ற நம்மாழ்வார் பாசுரத்திலும் காணலாம். சூர்ஊறும் அணங்கென்றும் தெய்வப்பெண்ணின் பெயர். தெய்வப் பெண்ணாகிற பூதனையை என்றபடி, பேயான பூதனையை தேவஜாதியில் சேர்ப்பதும் பொருந்தும். பலவகைபபட்ட தேவ ஜாதியில் பிசாசத்தையும் ஒன்றாக இணைத்திருப்பது பிரமாணங்களில் நன்கு விளங்கும். அல்

லது "தெய்வ நங்கை யசோதை" என்ற குலசேகரன் வார்த்தைப் படி "சூர்" என்ற பதத்திற்கு அசோதை என்று பொருள் சொல்லி, அவளுடைய சரீரம்போன்ற சரீரத்தை எடுத்துவந்த பூதனை என்றும் சொல்லலாம். அப்பூதனையின் ஆயுளை முடித்தபெருமானே என்று கூப்பிடுகிறார். "பெற்றதாய்போல் வந்த பேய்ச்சி பெருமுலை யூடு உயிரை, வற்ற வாங்கி யுண்டவாயான் வதரிவணங்குதுமே" என்கிறபடி அவள் எண்ணிவந்த மரணம் அவளோடே போகும்படி அவளை முடித்தவனே. பெருமான் என்பது இங்கு ஸம்போதனம். பெருமானேயென்று கூப்பிட்டார் என்று பொருள்.

நீ யளவுகண்ட:—நீ செய்த ஒவ்வொரு செயல்களையும் என்னால்கண்டு அறிய முடியவில்லை. அதாவது உன்னுடைய அவதார காலங்களில் நான் உன் தன்மையை உணராது உன்னை விட்டிருந்தேன். ஆதலால், இப்பூமியில் நீ அடி வைத்ததுபோல் என் தலையில் உன் திருவடிகளை வைத்து, பூதனையைப் போக்கியதுபோல், என் விரோதிகளையும் போக்கவேண்டுமென்று உட்கருத்து. பாரளவும் அளவு என்கிற பதத்தால் ஒரு திருவடியை இப்பூமியில் நீயே நிருத்தினையென்று தோன்றுகிறது. ஒருவன், ஒரு உயர்ந்த குதிரையின்மேல் ஏறிக்கொண்டு வெகு வேகமாகச் செல்லுங்காலத்தில், நடுவில் தற்செயலாக எதிர்ப்பட்ட ஒரு நண்பனோடு பேசுவதானால் தன் குதிரையின் கடிவாளத்தை வெட்டிக் குதிரையை நிறுத்துவது போல, நீண்டு வளருகிற திருவடிகளை எங்களுக்காகப் பாரளவும் நிறுத்தினாய். இது ஆச்ரிதவாத்ஸல்யத்தின் பெருமையாகும்.

**நெறிவாசல் தானேயாய் நின்றானை யைந்து**
**பொறிவாசல் போர்க்கதவஞ் சாத்தி—அறிவானாம்**
**ஆலமர நீழலறம் நால்வர்க்கன் றுரைத்த**
**ஆலமமர் கண்டத் தரன்.**

| | | | |
|---|---|---|---|
| **ஆலமரநீழல்** | ஓர் ஆலமரத்தின் சாயையில் | அன்று | அப்பொழுது |
| | | உரைத்த | உபதேசம் செய்த |
| அறம் | தர்மத்தை | ஆலம் | விஷம் |
| நால்வர்க்கு | நான்குபேர்களுக்கு | அமர் | பொருந்திய |
| | | கண்டத்து | கழுத்தையுடைய |

| | | | |
|---|---|---|---|
| அரன் | பரமசிவன் | சாத்தி | அடைத்து |
| ஐந்து | ஐந்து எண்ணிக்கையுள்ள | நெறிவாசல் தானேயாய் | உபாயோபேயம் இவ்விரண்டுமாக |
| பொறி | இந்திரியங்களினுடைய | நின்றானை | இருக்கிற பரமபுருஷனை |
| வாசல் | மார்க்கத்திலேயுள்ள | அறிவானும் | தெரிந்துகொண்டிருக்கிறானும். |
| போர்க்கதவம் | நம்மோடுயுத்தம்புரிகிற கதவை | | |

அறிகிலேனென்று கீழ்ப்பாசுரத்தில் மொழிந்தார். நீர் அறியாவிடில் ஞானத்தில் உயர்ந்தவனான பரமசிவன் உணர்ந்திலனோ? அவன் மாமுனிவர்களுக்குப் பரம்பொருளை உபதேசிக்கவில்லையோ? என்று சிலர் வினவ, அதற்குப் பதில் உரைக்கிறார். ஈச்வரன், நாங்கள் மழையினால் அடிபட்டு ஒதுங்கின இடத்தில், வந்து நெருக்கி அருளபுரிந்தான், அவன் அருளால் அறிவு பெற்ற நாங்களே உணரவில்லையென்றால், தான் தபசு செய்து தபசினால் பெற்ற ஞானத்தை யுடையவன் எங்ஙனம் உள்ளபடி அறிந்திருப்பன். எவ்வண்ணம் தான் உபதேசிக்கக்கூடும்? இது ஏமாற்றமேயன்றி வேறல்லவென்று பரிஹஸிக்கிறார்.

நெறிவாசல்:—நெறி உபாயமான மார்க்கம். அதாவது மோக்ஷத்தையடைய நாராயணனே ஸாதனமாக இருக்கிறானென்று பொருள். நாம் பக்தி ப்ரபத்திகளைச் செய்தாலும் இது மோக்ஷத்திற்கு விலையாக ஆகாதபடியால், அவன் கிருபையால் நமக்கு முக்தியைத் தருகிறானென்று பொருள. "நெறி"யென்பதற்கு உபாயமென்றும், "வாசல்" என்பதற்கு உபேயமென்றும் அர்த்தம் கொள்க. நம்மை மோக்ஷத்திற்கு அடைவிக்கிறவனும் ஈச்வரன்; அடையப்படுகிறவனும் அவனே. இப்படி, இருவகையான ஈச்வரனே அனுக்ரஹிக்க நான் அறியாவிடில அரன் எங்ஙனம் அறிவான்? முதலில் இந்திரியங்களை அடக்குவதே அவனால் அரிது என்கிறார்.

ஐந்துபொறிவாசல் செவி, வாய், கண், மூக்கு, உடல் என்கிற ஐந்து இந்திரிய வாசல்கள். மிகவும் சிரமப்பட்டு ஒரு வாசற்கதவையடைத்தால், மற்றொரு வாசற்கதவு திறந்துகொள்கிறது. ஐந்து கதவுகளையும் அடைப்பது மிகவும் அரிது. அதுவுமல்லாது, "போர்க்கத

வம்'' கதவுகளை மூட முயலும்பொழுதே அவை நம்மை அறையவரு கின்றன. இவ்விதமான ஐந்து கதவுகளை எப்படிச் சாத்தமுடியும்? கதவுகளையடைப்பதற்கு வேண்டிய கருவியே அரனிடத்தில இல்லை யென்கிறார். ஆலமமாகண்டத்தரன் விஷத்தை உண்டவன். தாமஸ குணத்திற்கு உறுதியான உணவை அருந்தினவன். ஞானத்தா லன்றோ கதவைச் சாத்தவேண்டும். ஸத்வ குணத்தினலன்றோ ஞானம் ஏற்படுமென்று கீதாசாரியன் வார்த்தை. ஸத்வகுணம உண்டாவதற்கு ஆகாரமுமில்லை, செயலுமில்லையென்கிறார். இந்திரி யங்கள் புறம்பே செல்வதை நிறுத்தவேணுமென்றால் ஈச்வரனு டைய குணங்கள் முதலில நன்ருகப்பதிந்தாலன்றி முடியாது. ஆதலால், முதலில் இந்திரிய நிக்ரஹமே செய்யாமல் பிடிவாதமாகிற தபஸைச் செய்து, அதனால வந்த ஞானத்தால் எப்படி அறிவான் என்று பொருள். இப்படித் தன்னளவிலும் நிற்காமல், உபதேசிக் கவும் தொடங்கினன். அதிலும் ஸூக்ஷ்மதரிசிகளான ரிஷிகளுக் கும் உபதேசிக்கத் தொடங்கினன். அதிலும், நாலவர்க்கு உபதே சிக்க ஆரம்பித்தான இது என்ன வீண் பெருமை என்கிறார். ஆலமரநீழல் தனக்கு பகவத் ஸம்பந்தமுண்டாவதற்கு முன்ன மேயே சிஷ்யர்களைத் தேடுகிறார். அதாவது, அந்த ஆலமரநிழல் தான் தபஸ் செய்த இடமேயாகும அங்கிருந்துகொண்டே உப தேசித்தாரென்றால், தான் கண்டு அறிவதற்கு முன்னமேயே சீடர் களைத் தேடினார் என்பதாம். ப்ரஹதாரண்யக உபநிஷத்தில் ஸர்வக்ஞ ஞன அஜாதசத்ரு என்பவனுக்கு ஈச்வரனைப் பற்றிய ஞானமில்லாத பாலாகியென்பவர் உபதேசித்தாற்போல விடிந்தது. ஒரு கால விசேஷத்திலே, ருத்ரன் ஒரு ஆலமரத்தின் கீழே அகஸ்தியர், புலஸ்தியர், மார்க்கண்டேயர், தக்ஷர், என்கிற நால்வர்களுக்கு பிரம்ஹத்தை உபதேசித்தானென்கிற வரலாறு இங்கு அறிய வேண்டியது. அறிவானும் என்பதால் அநாதரவு தோறறுகிறது.

அரன் நாரணன் நாமம் ஆன்விடைபுள்ளூர்தி
உரைநூல் மறையுறையுங் கோயில்—வரைநீர்
கருமமழிப்பளிப்புக் கையதுவேல் நேமி
உருவமெரிகார் மேனி யொன்று.

| | | | |
|---|---|---|---|
| அரன் நாமம் | ஹரன் என்று ஒருவன் பெயர் | உறையும் கோயில் | (மற்றொருவன்) வாசமசெய்யுமிடம் |
| நாரணன் | நாராயணனென்று மற்றொருவனுக்குப் பெயர் | அழிப்பு | ஸம்ஹாரமானது |
| ஆன்விடை | ஞானசூனயமான வ்ருஷபமானது | கருமம் | ஒருவனுகருவேலை |
| ஊர்தி | ஒருவனுகருவாகனம | அளிப்பு | கருபைபுரிவது(அதாவதுகாப்பது) |
| புள் | பக்ஷியானது | கருமம் | மற்றொருவனுடையவேலை |
| ஊர்தி | மற்றொருவன் எறுகிறவாகனம | வேல் | வேலாயுதமானது |
| நூல் | ஆகமம் | கையது | ஒருவன கையில் இருக்குமஆயுதமாமாம |
| உரை | (ஒருவன் விஷயத்தில்)ப்ரமாணமாகிறது | நேமி | ஸுதர்சனுழ்வான |
| மறை | வேதம் | கையது | மற்றொருவன் கையிலிருககுப் படையாம |
| உரை | மற்றொருவனுககு பிரமாணம் | உருவம் | ஒருவனுடைய உடமபு |
| வரை | (கைலாஸமென்கிற) மலையானது | கார | மேகம்போன்றது |
| உரையும் கோயில் | ஒருவன வாசம்செய்யுமிடம | ஒன்று | இவ்விரண்டில் ஒன்று |
| நீர் | ஸமுத்ரமாகிற ஜலமானது | மேனி | ஒருவனுடைய சரீரம். |

இப்படிப் பரமசிவனை இகழ்வது கூடுமோ? அவனையும் ஒரு தேவதையாக எண்ணி உலகத்தார் உபாஸிக்கவில்லையோ? உங்கள் தெய்வத்தைபபோல அவனும் கோயில்கள கொண்டு பலர் அடிவணங்க புகழ்வுடன் வீற்றிருக்கவில்லையோ? இங்ஙனம் நீர் இகழ்வது தகுமோ என்று அரனடியார்கள் கேட்க, உத்தரம் அருளிச்செய்வதுபோல் இப்பாசுரம் தோன்றுகிறது. நீங்கள் எங்களிடம் கோபிக்கவேண்டாம். அரி, அரன் இவர்களுடைய பெயர், வாகனம், இருப்பிடம், வேலைகள், ஆயுதங்கள், நிறம், இவைகளைத்தனித்தனியே உரைக்கிறேன். யார் பரதேவதை யென்று நீங்களே உணர்ந்து கொள்ளலாமே. கீழ்ச்சொன்னவைகளில் ஒவ்

வொரு வஸ்துவே இன்னுர் பரனென்று காட்டுமே. என் வீண்வா தம் என்று சொல்லி ஒவ்வொன்றையும தனிததனியே காட்டுகிறுர். அரன்நாரணன ஒருவனுடைய பெயர் அரன் என்பது. வடமொ ழியில ஹர' என்கிற பதம் அரன் என்று ஆகிறது. ஹரதீதிஹர: ஸம்ஹாரம் செய்கிறவன என்று பொருள. பெயரைச் சொன்ன பொழுதே ஸம்ஹரிபபது எனகிற குணம் தோன்றுகிறது மற் ருெருவன் பெயா நாராயணன் அவனுடைய பெயரின் அர்த்தத்தை ஆலோசிக்குமகால் உபயவிபூதியும் தனக்கு வாஸஸ்தானமாய் அதறகு ஆதாரமாய் இருபபவன் எனகிற பொருள் விளங்குகிறது. ஆக ஸம்ஹரிக்கும் குணமுடையவனிடம் ஆச்ரயிப்பதா, சகல உல கஙகளேயும் தரித்துக்கொண்டிருப்பவனிடம் ஆச்ரயிபபதா ? அந்த ஸம்ஹாரமும் அவன அதிநபலல. திஙகான செயல்களிலேயே மூழ்கியிருக்கும ஜீவராசிகளிடம் கோபம பிறநது, அவைகளே ஒழிதது விடுவோம் என்று நினேவுண்டான ஒருவன, அக்காரியம் செயய தனக்கு மனம் வராமல் கையாளனகக் கொண்ட ஒருவன். அது அஙஙனம் நிற்க அவர்களுடைய வாகனங்களே ஆராய்ந்தால் ஒருவன் வாகனம எருது ஒருவனுக்குப் பக்ஷிவாகனம். உலகத் தில் சிறிதும் அறிவில்லாத ஒருவனே மாடே என்று கூப்பிடுவது வழக்கம அதுபோல ஞானசூன்யமான வ்ருஷபத்தை வாகன மாகக் கொண்டவன். மற்ருெருவன் வாகனமோ கருடன் என்கிற பக்ஷிராஜன். அவரைப்பற்றி, எழுதாமறையிலே வேதமயனென் று புகழப்பட்டிருக்கும் ஆளவந்தாரும, வேதாத்மாவிஹகேச்வர: தத் என்றும் வ்யஜநம் த்ரயீமய:என்றும் கொண்டாடினுர், இவ்வர்த்தை நேத்ரம் ஹாயத்ர உபவேத்ரவ்ருத்திதஸ் ப்ரேங்காஉபயம் யஜ்ஞம்ஷி என்கிற சுலோகத்தால் விசதமாக நம் நிகமாந்ததேசிக னும் காட்டியருளினுர். ஆகவே வாகனங்களுடைய சீர்மையையும் நீங்களே கண்டுகொள்ளலாம். அது கிடக்க இருவரையும் காட்டக் கூடிய ப்ரமாணமான புத்தகங்களே ஆராயந்தால் ஒருவனே ஆகமங் கள் காட்டுகின்றன. ஆகமங்கள் ஒருவனல் செய்யப்பட்டவையா கையால், அவை அவற்றைச் செய்த புருஷனுடைய அஜ்ஞானம், விபரீதஜஞானம், அந்யதாஜஞானம், இவைகளடியாகப் பிறந்திருக் கக்கூடும். ஆக புருஷதோஷ துஷ்டமாகையாலும், பிருப ஹ ஸுத்

ரத்தில் "பத்யுரஸாமஞ்ஜஸ்யாத்" என்கிற ஸூத்ரத்தால் அவைகள் வேதவிருத்தமென்று வியாஸபகவானால் ஓதுக்கப்பட்டிருப்பதாலும் அவை தோஷமுள்ளவையே. இவரைப் பிரதிபாதிக்கிற வேதங்களோ ஒருவனால் செய்யப்படாததென்றும், அநாதியென்றும் உண்மையான அர்த்தங்களையே விளக்குமென்றும் வியாஸர் முதலிய மஹரிஷிகளால் எழுதப்பட்டிருக்கிறது. வசிக்கும் இடத்தை ஆராய்ந்தால், ஒருவனுக்குக் கைலாயமலை இருப்பிடமே அவன் நெஞ்சிலுள்ள காடின்யத்தைக் காட்டுகிறது. மற்றொருவன் இருப்பிடமோ ஜலம் அதாவது ஸமுத்ரம். அவன் நெஞ்சிலுள்ள ஈரத்தைக் காட்டுகிறது. வேலையோ, ஒருவனுக்கு அழிக்கும் தொழில். அழிப்பது என்றால் ஸம்ஹாரத்துடனேயே நிற்கும். வேறு வேலை கிடையாது. ரக்ஷிப்பது என்றால் சிருஷ்டி ஸம்ஹாரம் இரண்டிலும் சம்பந்தமிருக்க வேண்டும் ஏனெனில், விரோதிகளைப் போக்குவதும் அவன் விரும்பிய பதார்த்தங்களை உண்டுபண்ணிக் கொடுப்பதும் ரக்ஷணம் என்பதில் சேர்ந்ததே. ஆகத் தொழிலிலும் மேன்மையிருக்கிறது ஆயுதத்தை அளவிட்டால், ஸம்ஹாரத்திலே இறங்குவதான வேல் ஒருவனது. மற்றொருவன் ஆயுதமோ சக்கரம் என்பதாம், அச்சக்கரம் நித்யஸூரியென்றும், கண்டவர்களெல்லாம் இதைத் தரித்தவனை பரம்பொருளென்று சொல்லக் காரணமாயும், தன் சேஷியினுடைய அளிக்கும் தொழிலுக்கேற்ற க்ருபாஸமுத்ரமான சக்ராயுதம் என்றும் துதிக்கிறார்கள். இவைகளெல்லாம் எங்ஙனம் இருப்பினும், உலகத்தில் ஒரு மனிதனைக் கண்டவுடன் அவனுடைய ரூபமே அவன் பெருமையைச் சொல்லுமென்னும் பழமொழிக் கிணங்க, கீழ்ச் சொன்னவைகளை யெல்லாம் மறந்து அவர்களுடைய ரூபத்தை ஆராய்ந்தால் செந்தீ. ஒருவனதுருவம் அதாவது சிவந்த நிறம் ஸம்ஸாரவெப்பத்தினால் அடிபட்டு அவன் காலில் விழுந்தால் அக்னியைப்போல் மீண்டும் தாபத்தை உண்டாக்குகிற நிறம், மற்றொருவன் நிறமோ, தாபத்தில் அடிபட்டவனை ஒரு பாட்டம் மழைபெய்தாப்போல் குளிரச்செய்யும் நீலநிறம். இது இங்ஙனமிருக்க, இவர்களுள் ஒருவன் ஒருவனுக்கு உடம்பு. அதாவது அரன் உடம்பாயும், நாராயணன் ஆத்மாவாயும் இருக்கிறான். இவ்வர்த்தம் அந்தர்யாமி பிராஹ்மணம் முதலிய வேதபாகங்களில் ஸம்சயம் அற சொல்

லப்பட்டிருக்கிறது. எவ்வகைப்பட்ட ஜீவராசிகளிலும் தான் ஆத்மாவாய் இருந்துகொண்டும், அவைகளுடைய ஸ்வரூபம், நிலை, வேலை, இவைகளுக்குக் காரணமாய் இருந்துகொண்டும், அவைகளால் அறியப்படாமலும், விளங்குகிறானென்று நன்கு தெரியவரும். அவ்வண்ணமே, ருத்ரனும நாராயணனுக்குச் சரீரமாயும். சேஷபூதனும், அவனால் ஏவப்படுகிறவனும், இருக்கிறானென்று கருத்து. இப்பாசுரத்தில், "மேனி ஒன்று" என்று ஒருவன் சரீரமென்று மாத்திரம் சொல்லியிருந்தாலும், மற்றொருவன் ஆத்மாவாயிருக்கிறானென்பது தாத்பர்யத்தினால் கிடைக்கும்பொருள்.

**ஒன்று மறந்தறியே னோதநீர்வண்ணனை நான்**
**இன்று மறப்பனோ வேழைகாள்—அன்று**
**கருவரங்கத் துட்கிடந்து கைதொழுதேன் கண்டேன்**
**திருவரங்க மேயான் திசை. (6)**

| | | | |
|---|---|---|---|
| அன்று | அந்த நாட்களில் | ஒன்றும் | ஒருவிஷயத்தையும் |
| கரு அரங்கத்துள் | கர்ப்பமென்கிற ஓரிடத்தில் | மறந்தறியேன் | மறந்ததாக நினையகில்லேன் |
| கிடந்து | இருந்தபொழுது | | |
| திருவரங்கமேயான் | ஸ்ரீரங்கமென்கிற க்ஷேத்திரத்தில் நித்யவாஸம் செய்கிறபெருமானுடைய | ஏழைகாள் | சேஷியாகிய தநத்தையிழந்தவர்களே |
| | | நான் | அடியேன் |
| | | ஓதநீர் | ஸமுத்திர ஜலம் போன்ற |
| திசை | விஷயங்களை (குணங்களை) | வண்ணனை | நிறத்தை உடையவனை |
| கண்டேன் | நேரில்பார்த்தேன் | | |
| கைதொழுதேன் | அஞ்சலிசெய்தேன் | இன்று | இந்நாட்களில் |
| | | மறப்பனோ | மறப்பேனோ |

கீழ் பாசுரத்தில், ஸ்ரீமந்நாராயணனே சேஷியென்றும், "ஈச்வராத் ஞானம இச்சேத்" என்று எல்லாரும் அறிவு பெறவேண்டிய தலையிடமான ருத்ரனும அவனுக்கு சேஷபூதனென்று சொல்லியிருப்பதைக் கேட்டு, சிலர், ருத்ரனே அவனுக்கு

சேஷபூதனுயிருக்க, நீர் அவருக்கு சேஷபூதரன்றோ? நீர் எப்படி உபதேசிக்கக்கூடும்? என்று வினவ அதற்கு இப்பாட்டால் விடையளிக்கிறார்போலும். அரனுக்கும் தனக்கும் வாசியுண்டு என்கிறார். அரன், தனக்கு ஸத்வகுணம் தலையெடுத்தபோது நாராயணனை மிகுதியாக ஸ்தோத்ரம் செய்வன்; அர்ச்சனையும் செய்வன். பல படியாலும் பரதேவதையாகவே நினைத்திருப்பன். பிறகு, ரஜஸ் தமோ குணங்கள் தலையெடுத்தால் 'நானே பரம்பொருள், என்னையே யாவரும் பூஜிக்க வேண்டும்' என்று சொல்லித் திரிந்துகொண்டு ஸர்வேச்வரனோடு எதிரம்பு கோத்துமிருப்பன். ஆழ்வாரோ, தான் அங்ஙனம் ரஜஸ் தமோகுணங்களால் அவமதிக்கப்படாமல் சுத்த ஸத்வத்திலேயே நிலைநிற்கிறவராய இருப்பதால், தான் உபதேசிக்கக்கூடும் என்கிறார். **ஒன்றும் மறந்தறியேன்** நான் அந்த பரமபுருஷருடைய கல்யாணகுணங்களில், ஒன்றையாவது, ஒரு க்ஷணத்திலாவது மறக்கவில்லை. இனியும் மறக்கமாட்டேன் என்கிறார். அவனை மறப்பது என்னிடம் சம்பவியாது என்பதற்குக் காரணத்தையும் சொல்லுகிறார். **கருவரங்கத்துள்** என்ற பதத்தால், ஜீவன்களெல்லாம் பெரும்பாலும மறக்கக்கூடிய கர்ப்பவாசத்திலேயே நான் அவனை மறவாது நேரில் பார்த்தும், அடிதொழுதும், அனுபவித்தேன். மறக்கக்கூடிய காலத்தில் மறவாது அவனருளால் விவேகம் பெற்ற நான் இக்காலத்தில் மறக்க விரகுண்டோ? இனிமேலும் மறக்கக் காரணம் கிடையாது என்றும் சொலலுகிறார். அடிக்கடி ரஜஸ் தமோகுணங்கள் ஆக்ரமித்து அதனால் தைவத்தை மறக்கும் தன்மையுடைய ருத்ரனைப்போலன்றி, நாட்டாரோடியல்வொழிந்து நாரணனை நண்ணின நான் உபதேசிக்கக்கூடுமென்று பொருள். **இன்று மறப்பனோ** நான் மறந்தாலும் அவன மறக்கவிடான். **ஏழைகாள்** வைப்பாம் மருந்தாம் என்றும் நிதியினை எனறும் "தரம்மதீயம் தவ பாத பங்கஜம்" என்றும் போறறப்படும் பரமபுருஷனென்கிற தனக்குவியலை இழந்திருக்கும் மனிதர்களே? ஸம்ஸாரிகளை எழுப்பி ஆத்மோஜ்ஜீவனமான மார்க்கத்தைத் தேடுங்கோள் என்கிறார். **அன்று கருவரங்கத்துள்** கருவரஙகம என்பதற்கு கர்ப்பப்பையாகிற நடனம் செயகிற விடம் என்று பொருள். அரங்கமென்றால் நடனம் செய்கிறவிடம். இங்கு இடம் என்கிற பொருளையே கொள்ளவேண்டும். இவர் கர்ப்பவாசமில்லாமல் அயோநிஜராய் தாமரைமலரில் அவதா

ரம் செய்திருந்தபோதிலும், கர்ப்பத்தில் இருந்தேனென்று சொல்லிக்கொள்வது, தான் அவதாரம் செய்த தாமரை மலரையே கர்ப்பப்பையாக நினைத்துச் சொல்லும் வார்த்தை. இவ்வாழ்வார்கள், தாங்கள் பகவத்ஞானம் பிறக்கும்பொழுதே பிறந்தவர்களென்றும், மறந்தபொழுதே இறந்தவர்களென்றும் சொல்வது வழக்கம். இவருக்கு பகவத்ஞானம் தாமரைப்பூவில் உதிக்கும்பொழுதே பிறந்தபடியால், பிறப்பதற்கு முந்தியிருக்குமிடம் கர்ப்பப்பையாதலால், தாமரை புஷ்பம் கர்ப்பப்பையாகும். "ஜாயமானம்ஹி புருஷம்" என்கிறபடி, கர்ப்பத்திலிருக்கும்பொழுது மதுஸூதனனுடைய கடாக்ஷம் பெற்றால், அவன் என்றும் ஸாத்விகனாகவே இருப்பன் என்பதற்கிணங்க இவர் தாமரைப்பூவாகிற கருவிலே திருவுடையாராதலால் என்றும் பகவானை மறக்காமல், பாசுரமுகத்தாலே உபதேசம் செய்வது பொருந்தக் கூடியதே. ஓதநீர்வண்ணனை கடல்போல், தாபங்களைப் பார்த்த அளவில் போக்கடிக்கக்கூடிய திருமேனியையுடையவனை. திருவரங்கமேயான் அரங்கமென்பது நர்த்தனஸ்தானமென்றும், யுத்தபூமியென்றும் பொருள் கொடுக்கும். அதாவது ஸர்வேச்வரன் பரமபதத்திலிருந்து லீலார்த்தமாக வந்தவிடமென்றும், ஸம்ஸாரிகளோடு சண்டை செய்து அவர்களைத் தனக்கு அடிமையாக்கிக்கொள்ளும் இடம் என்றும் கருத்தாகும். திசையென்பது கிழக்கு முதலிய திக்குகளைச் சொல்லுகிற பதமாயிருப்பினும் இங்கு விஷயம் என்ற அர்த்தத்தைக் கொடுக்கிறது. ஈச்வரனுடைய ஸ்வரூபஸ்வபாவங்களென்றதாம்.

**திசையும் திசையுறு தெய்வமும், தெய்வத்**
**திசையும் கருமங்களெல்லாம்—அசைவில் சீர்**
**கண்ணன் நெடுமால் கடல்கடைந்த, காரோத**
**வண்ணன் படைத்த மயக்கு. (7)**

| | | | |
|---|---|---|---|
| திசையும் | திக்குகளும் | இசையும் | ஒத்திருக்கிற |
| திசையுறு | அத்திக்குகளில் | கருமங்களெல்லாம் | வேலைகளெல்லாம் |
| உறு | பொருந்தியிருக்கிற | அசைவில் | அழிவில்லாத |
| தெய்வமும் | தேவதைகளும் | சீர் | குணங்களையுடைய |
| தெய்வத்து | அந்தந்த தேவதைகளுக்கு | | |

| | | | |
|---|---|---|---|
| கண்ணன் | கிருஷ்ணனுயவதரித்த | காரோதவண்ணன் | கருமையான ஸமுத்திரஜலம்போன்ற நிறத்தையுடைய ஸ்வாமி |
| நெடு | அளவில்லாத | | |
| மால் | பெருமையையுடைய | படைத்த | ஸ்ருஷ்டி செய்த |
| கடல்கடைந்த | ஸமுத்திரத்தைக் கடைந்த | மயக்கு | மயங்குமபடி செய்கிற வஸ்துககள் |

இதர தேவதைகள் ஈச்வரனுக்கு உடலென்றும், சேஷபூதர்களென்றும், அவன் நியமனப்படி செய்கிறவர்களென்றும், சொல்வது எப்படிப் பொருந்தும்? அவரவர்களும் ஒவ்வொரு தேசங்களுக்கு அதிபதியாய பல கிங்கரர்களால் பணி செய்யப்பட்டவர்களாய், அதிமாநுஷமான செயல்களைச்செய்து தெய்வங்களாய் விளங்கவில்லையா? உதாஹரணமாக, இந்திரன் மூன்று லோகங்களுக்கும் அதிபதியாய், தேவர்களுக்கு நிர்வாஹகனுய், விருத்ராஸுரவதம்முதலிய இதரர்களால் செய்யமுடியாத வேலைகளைச்செய்து, கர்மலோகத்திலுள்ள பிரஜைகளால் காணிக்கையிட்டு பூஜிக்கப்படவில்லையோ? ருத்ரன் கைலாஸநிலையனுய் திக்பாலகனுய் இருந்துகொண்டு திரிபுராஸுரவதம், அந்தக ஸம்ஹாரம், முதலிய அரிய வேலைகளைச்செய்து, தன்னை யடைந்தவர்களுக்கு வேண்டிய பலன்களைக் கொடுத்துக்கொண்டு உயர்தெய்வமாக வீற்றிருக்கவில்லையோ? என்று சிலர் ஆக்ஷேபம் செய்ய, இதெல்லாம் ஈச்வரனுடைய மாயையின் காரியம். அவன் விரோதிகளை ஏமாறும்படி செய்கிற மயக்குகள் என்று பதில் உரைக்கிறுர்.

திசையும்,—திக்குக்களையும், அதாவது திக்குக்களோடு கூடின பூமியென்றபடி. திக்குகள் ஒரு ப்ரதேசமாக இல்லாததாலும், ஒரு ப்ரதேசத்திலுள்ள ப்ரஜைகளுக்குத் தேவர்களாகச் சிலரைச் சொல்லுவதாலும், இங்கு திசையென்பது திக்குக்களாலே காட்டப்பட்ட பூமியென்று பொருளாகும். அதாவது, திசைகளையும் பூமியையும் படைத்து என்றர்த்தம்.

தெய்வமும் —அந்தந்த திசைகளில ஆங்காங்கு திக்பாலகர் என்கிற பெயருடன் விளங்கும் இந்திரன் முதலிய தேவர்களும் கருமங்களெல்லாம் அந்த தேவதைகளுடைய சரீரத்திற்கும் வர்ணத்

திற்கும், ஆயுதங்களுக்கும் தகுந்ததான வேலைகளெல்லாம் கார்முகில்வண்ணன் உண்டாக்கினமாயம். தான், தன்னைப்போல ஒவ்வொரு தேவதைகளையும் ஸ்ருஷ்டி முதலிய அதிகாரங்களுக்கு உரியவர்களாக நியமித்து, அவர்களைப்போல் தானும் ஒரு வேலைக்கு மாத்திரம் அதிகாரிபோல் இருந்துகொண்டு விஷ்ணுஸ்ருஷ்டி ஸ்ரீவதி ஷ்வதிகஷஉஸ்ரீதராணாதராயிகாரீ என்று தன்னை பிறரைப்போல் நினைக்கும்படி செய்து அவர்களை ஆராதிக்கும்படியும் செய்வது தன்பக்கல் பக்தியில்லாத விரோதிகளை ஏமாற்றுவதற்காக. ஜீவனுக்கு சரீரபலத்தையும், அநுபவிக்கக்கூடிய திறமையையும், தன்னையடைவதற்கு வேண்டிய உபாயத்தையடைய புத்தியையும், வேறு விஷயாந்தரங்களை விலக்கவேண்டிய புத்தியையும் கொடுத்திருக்கும்பொழுதும், அவர்கள் இதர தேவதைகளை யடைவது அவர்கள் கெட்டுப்போவதற்காக ஈச்வரன ஸங்கற்பித்தபடி அதற்குக் காரணம், அவர்களுடைய பக்தியில்லாமையும் ஆபிமுக்யம் இல்லாமையும். இவ்வர்த்தம் "தைபவீஹ்ஏஷாகுணமயீ மம மாயாதுரத்யயா" என்று கீதையிலும் சொல்லப்பட்டிருக்கிறது. இப்படி அவனே ருத்ரனைக்கொண்டு பாசுபதம் என்கிற மதத்தை செய்யச்சொல்லி, சிலரை பிரமிக்கும்படியாகச் செய்தான். தான் நேராகவே புத்தனென்று அவதரித்து ஜனங்களை ஏமாற்றினான். ஆதலால், அந்தந்த தேவதைகளுக்கு மேன்மையைக்கொடுத்தும் செய்ய அரிதான வேலைகளைத்தான் செய்யும்படி செய்தும், அவர்களை பரதேவதையென்று கொண்டாடச்செய்வது ஆஸுரப்பிரகிருதிகள் தன்னைஇழப்பதற்காக. இங்ஙனமிருக்கச்செய்தேயும் தன்னுடைய பரத்வஸூசகமான லீலைகளைத்தான் ஒளிப்பதில்லை அவர்களே தங்கள் புத்தியால் கெட்டுப்போகிறார்கள். கடையில் உயர்ந்தவைகளான ரத்நங்களையும் குன்றுமணிகளையும் ஸமமாகப்பரப்பியிருக்க அதிகமான ஜனங்கள் குன்றுமணிகளையே வாங்கிக்கொண்டு போகிறார்களே. எண்ணற்றஜனங்கள் அதை உகக்கிறார்களேயென்று அதை உயர்ந்ததாகச் சொல்லமுடியுமோ? ரத்நத்தை வாங்க அதிகாரம் இல்லாததால் குன்றுமணியில் இறங்குகிறார்கள். ஒரு திண்ணையில் இரண்டு பாத்திரங்களில் தனித்தனியே சந்தனத்தையும் சேற்றையும் வைத்திருந்தால், சேற்றை பலர் வாரிப்பூசிக்கொண்டால்

அது யாருடைய குற்றம்? அதைப் பூசிக்கொள்வதற்குக்காரணம், அவனவன் கர்மத்தினால் வந்த விபரீத அபிமானமாகும். அதுபோல, விவேகமில்லாத ப்ரஜைகள் ஸ்வபாவிக ஆநந்தவிருத்தமாக இதர தேவதைகளைப் பற்றுவதும், அதின் பயனான சிவஸாயுஜ்யம், இந்திர ஸாரூப்யம், ஸத்யலோகப்ராப்தி முதலிய பிரயோஜனங்களையடைவதும், அவர்கள் செய்த எம்பெருமான திருவுள்ளத்திற்கு விரோதமான கர்மமடியாகவந்த பிரமங்கள.

**அசைவில்சீா** அந்த நாராயணனுடைய குணங்களோ அழிவில்லாதவைகள். இவன் குணங்களை மட்டும் அழிவில்லாதவையென்றால் இதர தேவதைகளிடம் உள்ள புத்திஹீனர்கள் விரும்புகிற குணலேசங்களும் சிறிதுகாலமிருந்து பிறகு மறையக்கூடியவையென்றுதெரிகிறது.

**கண்ணன்** தன்னை இடையர்கள் கூட்டத்தில சேர்த்து எண்ணும்படியாகச் செய்துகொள்கிறவன். மிகுந்த ஸௌலப்யமுடையவன் என்பது கருத்து.

**நெடுமால்** செலக்காண்கிற்பார் காணுமளவும் செல்லுங்கீர்த்தியையுடையவன். இத்தால் தேவர்களுக்கு அம்ருதம்கொடுத்த வரலாறுநினைவில் ஏறுகிறது. பொதுவாகக் கடைந்தெடுத்த அமுதத்தை தேவர்களுக்குமட்டும் கொடுத்து, அஸுரர்களுக்குக் கொடாமல் அவர்களையும் அச்சமயம் உகப்பித்ததுபோல், இதர தேவதைகளை உபாஸிக்கிறவர்களை அஸுரர்களை ஏமாற்றியதுபோல் ஏமாற்றி, அந்தந்த சமயங்களில் கிடைக்கும் அல்பபலன்களால் அவர்களை மோஹிக்கச்செய்கிறார் என்பது உட்கருத்து.

**காரோதவண்ணன்** நாம் மறக்கவேணுமென்று நினைத்தாலும் மறக்கவொண்ணாத ஸமுத்ரஜலம்போன்ற சீதளமான நிறத்தை யுடையவன். **படைத்தமயக்கு** ஆக தேவதாந்தரங்களை சிருஷ்டித்தது மயக்குவதற்கு என்று பொருள்படுவதால் அந்தந்த தேவதைகளுடைய சில பெருமைகளைக் கண்டு நாம் மயங்கவேண்டாமென்பது ப்ரதான அர்த்தம். **மயக்கு** மயங்கச்செய்கிற பொருள். விளங்கச்செய்கிற பொருளை விளக்கு என்பதுபோல்.

**மயங்க வலம்புரி வாய்வைத்து வானத்**
**தியங்கு மெறிகதிரோன்றன்னை—முயங்கமருள்**
**தேராழியால் மறைத்த தென்னீ திருமாலே**
**போராழிக்கையால் பொருது.** (8)

| | | | |
|---|---|---|---|
| திருமாலே | பெரிய பிராட்டியாரிடத்தில் பேரன்பு கொணடவரே | வலம்புரி | பாஞ்சஜன்யமென்கிற சங்கத்தை |
| நீ | நீ | வாய்வைத்து | தன் திரு அதரத்திலே வைததுக் கொண்டு |
| முயங்க | (அரசாகள்)நிறைநதிருககிற | வானத்து | ஆகாசததிலே |
| அமருள் | யுதத பூமியில் | இயங்கும் | நடந்துகொண்டிருக்கிற |
| போர் | யுத்ததிற்குக கருவியான | எறிகதிரோன் தன்னை | உஷ்ணமான கிரணங்களையுடைய ஸூர்யனை |
| ஆழி | சகரததைத்தரிதத | தேராழியால் | சககரததால் |
| கையால் | தன்னுடைய கையிஞல் | மறைத்தது | கண்ணுககுத தெரியாமல் மறையும்படி செய்தது |
| பொருது | யுத்தம் செய்து | | |
| மயங்க | அரசாகள் நடுங்கும்படி | என் | எதற்காக. |

அவனுக்குக் கீழே சொல்லிய மயங்கச்செய்யக்கூடிய வியாபாரங்கள் மாத்திரமா? தன்னையும், தன் குணங்களையும், தன் ஈச்வரத்வத்தையும் மாற்றிக்கொண்டுசெய்யும் மயக்குக்களும் பல உண்டு என்று காண்பிக்கிருர் இப்பாட்டில். துர்யோதனுதிகளுக்கும் பாண்டவர்களுக்கும் நடந்த போரில் நீ சங்கத்தை ஊதியது எதற்காக என்கிருர். மயங்க நான் எதிர்ச்சேனையைக் கொல்வதற்குக் கருவிகளான ஆயுதங்களை எடுக்கவில்லையென்று பீஷ்மர் முதலான ஞாநாதிகர்கள் முன்பு ப்ரதிக்ஞைசெய்து, யுத்த ஆரம்பத்திலேயே சங்கத்தை ஊதியது எதற்காக? அந்த சங்கநாதம் கேட்டு பல அரசர்கள், படைகள், பயத்தால் வெருண்டு மாளவில்லையோ? ஸ்வொஷோ யாதராஷ்ட்ராணாம் ஹ்ருதயாநிவ்யதாரயத் என்று

ஸஞ்ஜயரும்ஓதிவைத்தாரே. இது, நான் பொய் சொல்வதில்லையென்றும், என்னிடம் இரண்டு பேச்சுக் கிடையாதென்றும், என் வாக்கியம் வீணுகாதென்றும் சொல்கிற உன் பேச்சுக்கு விருத்தமன்றோ என்று அவனையே வினவுகிருர். இஃதால், தான் சொன்னபடி செய்யாத பொய்யன்போல் காண்பித்து, அத்தால் தன்னை ஈச்வரனென்று சிலர் எண்ணுமல்பண்ணி, இதரர்களிடம் கால்தாழும்படி செய்பவன். இந்த முதலடியால் ஆச்ரிதர்கள் விஷயத்தில் அவனுக்குள்ள வாத்ஸல்யத்தின் மேன்மையை விளக்கியதாகும். பீஷ்மாதிகளும் அவன் சங்கநாதத்தை வெகுகாலமாகக் கேட்க அவாவுடையராய் இருந்தபடியால் அவர்களையும் திருப்தி செய்வித்ததாகவே ஆகும். தன்னை யடைந்தவர்களைக் காப்பாற்றுவதைக்காட்டிலும் மேலான தர்மமாக அவன் ஒன்றைக் கருதமாட்டானென்றும் பொருள்படும். இதைக் கருதியே, ராமாவதாரத்தில் மெய்யும், கிருஷ்ணுவதாரத்தில் பொயயும் ஆச்ரிதர்களுக்குத் தஞ்சம் என்று பூர்வர்களும் எழுதிவைத்தார்கள்.

**வானத்து இயங்கும்**—ஆகாசத்திலிருக்கிற சூரியனை. மறைக்க வேண்டிய வஸ்து ஸமீபத்திலா இருந்தது? வெகு தூரத்திற்கு அப்பாலிருக்கிற வஸ்துவை மறைத்தான். அதிலும் மறைக்கக்கூடிய இடத்திலா இருந்தது? சுவர் முதலிய மறைக்கக்கூடிய பொருள்கள் சிறிதும் தங்குவதற்குக்கூட இடமில்லாத ஒரே வெளிச்சமான ஆகாசத்திலிருந்த சூரியனை மறைத்தான். அப்படி மறைத்ததும் விளக்கை விளக்கால் மறைப்பது எப்படிப் பொருந்தாதோ, அப்படி அந்த சூரியனைக்காட்டிலும் அளவற்றப்ரகாசமுள்ள தன் சக்ராயுதத்தால் மறைத்தான். இங்கு தேராழியென்பது ரதத்தின் சக்கரம் என்பது பொருளல்ல. அவன் கையில் தரித்த சக்ராயுதத்தால் என்று பொருள். சக்ரமானது ஒரு ரதத்திற்கு அங்கமாகக்கூடிய யோக்யதையுள்ள வஸ்துவாதலால், சக்ரத்தை தேராழியென்று வழங்குவர்கள். வடமொழியிலும் இத்தை அநுசரித்து ரதாங்கம் என்று பெயரிட்டிருக்கிருர்கள். இங்கு மஹாபாரதத்தில, பாரதயுத்தப் பிரகரணத்தில் அர்ஜுனனுடைய பிள்ளையான அபிமன்யுவை துர்யோதனனுடைய சகோதரியின் கணவனுன ஜயத்ரதன் என்பவன் கொல்ல, அந்தக் கோபத்திஞல், மறுநாள் மாலை ஆதித்யன் மறைவதற்குள்

டன் வந்தும் ரக்ஷிப்பவன் என்கிறார். பெரிய வடிவத்தை எடுத்துக் கொண்டு திருவடிகளையும் நீட்டி அளக்கவேண்டும்படி அவ்வளவு பெரியதாயிருந்த இப்பூமியானது, நீ வராஹமாய்ப் பூமியைக் கீண்டெடுத்தபொழுது உன்னுடைய வெளுத்த கோரப்பற்களில் மரகதப்பச்சைபோல் விளங்கிற்று. உன்னுடைய கோரப்பற்களே அப்பூமியை அபஹரித்த ஹிரண்யாக்ஷனென்னும் அஸுரனைக் கொல்ல ஆயுதமாய இருந்தது. ஸ்வபாவத்திலேயே வராஹஜாதியானது மிகுந்த பலத்துடன் ஜலத்திற்கும் சேற்றிற்கும் அஞ்சாமல் பூமியை உழுதுகொண்டுதிரியும் அதிலும், பகவான் அந்த ரூபத்துடன் நிற்க அச்செருக்கை அளவிடமுடியாது. புக்கு பிரளயார்ணவத்திலே பிரவேசித்து, அன்றுன் ஒரு கோட்டின்மேல் அவ்வஸுரனைக் கொன்று மீண்டுவரும்பொழுது அப்பூமி உன் பற்களில் சிறிய பச்சை மணி போல் விளங்கிற்று. நீர் எவ்வளவு பெரிய ரூபமாக அன்று இருந்திருக்கவேண்டும்! இத்தால், ஒவ்வொரு நிலையில் மிகப் பெரிய வடிவத்தை எடுத்துக்கொண்டும் ரக்ஷிக்கிறவர் என்பதாயிற்று.

விரிதோட்டசேவடியை:— தோடு என்று இதழ்களுக்கும் கர்ணபூஷணத்திற்கும் பெயர் விரி—மலர்ந்த. மலர்ந்த இதழ்களை உடைய தாமரை போன்ற திருவடிகளை நீட்டினாய் என்று பொருள். அல்லது விரிதோட்ட என்பது விளி. மலர்ந்த ஒளியுள்ள திருக்குண்டலங்களை காதுகளிலணிந்துகொண்டு, வாமனனாய் யாசிக்க வந்தவனே! என்றும் பொருளாம். மஹாபலி அக்குண்டலங்களின் சோபையினாலும் வஞ்சிக்கப்பட்டான் என்றும் தோன்றுகிறது. இப்பூமியிலுள்ளாரும் விண்ணுலகிலுள்ள தேவ ஜாதிகளும் இவ்வண்டம் உடைந்து விடுமோ என்று நடுங்கும்படி நீண்ட உன் திருவடிகளால் அளக்கப்பட்ட இப்பூமி, வராஹாவதாரத்தில மிகச்சிறியதாய் இருந்தது. ஆகவே, சிறிய வடிவைக் கொண்டும் பெரியவடிவைக் கொண்டும் அவஸரங்களில வந்து அளிப்பன் என்று கருத்து.

மண்ணும் மலையும் மறிகடலும் மாருதமும்
விண்ணும் விழுங்கியது மெய்யென்பர்—எண்ணில்
அலகளவுகண்ட சீராழியாய்க்கு, அவுன்றிவ்
வுலகளவு முண்டோ உன்வாய். (10)

| | | | |
|---|---|---|---|
| மண்ணும் | இப்பூமியும | அலகு அளவு கண்ட | எண்ணிக்கைகளு டைய எல்லையைப் பார்த்த (எண்ணமுடியாத) |
| மலேயும | பாவதஙகளும | சீர | கல்யாண குணஙகளையும |
| மறிகடலும் | (அலேகள்) மடங்கும் ஸமுத்ரமும | ஆழியாயககு | சகராயுததையும உடைய |
| மாருதமும் | வாயுவும | உன வாய | உன்னுடையவாயானது |
| விண்ணும் | ஆகாசமும (இவை எலலாவற்றையும) | அன்று | அககாலததில |
| விழுஙகியது | சாபபிட்டது | இ உலகளவும | இப் பிரபஞசததை விழுஙகுவதற்கு ஏடான அளவுடன |
| மெய என்பர் | உண்மை எனறே சொல்கிருர்கள் | உணடோ | இருநததோ? |
| எணணில | இதை யோசிககும பொழுது | | |

இப்பாசுரத்தில் ஈசவரன் அகடிதகடனு ஸமர்த்தன் எனகிருர். ஒரு காலத்தில பஞ்சபூதஙகளடஙகிய இபபிரபஞ்சங்களேயே நீர் விழுஙகிவிட்டீர். அதை யாவரும் உண்மையெனறே சொலலுகிருர்கள. இவவளவு பெரிய பிரபஞசத்தை விழுஙகுமபொழுது உன வாய பிரபஞ்சததளவு விரிந்து பெரியதாக இருநததோ? இல்லாவிடில் எப்படி விழுஙகமுடியும்? என்று கேட்கிருர்.

மண்ணும்:—ஸகலஜீவராசிகளுக்கும ஆதாரமாயும், காடின்ய குணம் உள்ளதுமான பூமியையும், அபபூமியைத்தாங்குகிற மலைகளையும், இப்பூமிக்கு வேலிபோல காப்பான ஸமுத்திரத்தையும, யாவரும் ஜீவித்திருக்கக் காரணமான காற்றையும, இவை எல்லாவற்றிற்கும் இடங்கொடுக்கும ஆகாசத்தையும் நீ அமுது செய்தது ஸத்யமென்று மஹரிஷிகள் சொல்லுகிருர்கள. இந்திரஜால வித்யை போல் பொய்யில்லை.

எண்ணில் அலகளவுகண்ட:—உயர்ந்த எண்ணிக்கைகளேயும் மீறியிருக்கிற கல்யாணகுணங்களுக்கு ஸமுத்ரம்போல இருப்பவன். ஆழியென்பதற்கு ஸமுத்ரம் எனறு பொருளானல் ரத்நஙகள் ஸமுத்திரத்தில் மலிந்து கிடப்பது போல் கல்யாண குணங்கள் நிறைந்திருப்பவன் என்பது கருத்து. ஆழி என்பதற்கு சக்ராயுதம் என்று பொருளானல் "அலகளவு கண்ட சீர" எண்ணிறந்த

கல்யாண குணங்களையும் "ஆழியாய்க்கு" சக்ராயுதத்தையும் உடையவன் என்று பொருள்.

அன்றிவ்வுலகளவு :— அப்பிரளயகாலத்தில அவ்வுலகங்களை அமுது செய்யும் பொழுது உன்வாய மிகவும் பெரியதாய் இருந்ததோ? என்று வினவுகிறார்.

மற்ற தேவர்களிடம் கிடைக்கவரிதான குணங்கள உன்னிடம் ஸ்வாபாவிகங்கள போலவும், மறறவர்கள் கண்ணால் காண்பதற்கும் அஞ்சும்படியான தேஜோநிதியான திருவாழியைக் கையில் ஏந்துவது போலவும், இவ்வுலகத்தை விழுங்கியது உன்னுடைய மிகுந்த சக்தியின் காரியமென்று திரண்ட பொருள. வாய பெரியதோ என்று வினவியிருப்பது வாய பெரியதாய இருந்தால்தான விழுங்கமுடியும் என்ற கருத்தைக்கொண்டு அல்ல. உண்மையில் அப்பொழுது பெரியதாய இருக்கவுமில்லை. உலகை உண்டு ஓர் ஆலிலையில் சிறு குழந்தையாய படுத்திருந்ததுபோல இதுவும் அவனது அகடிதகடனா ஸாமர்த்தியத்தாலென்று அறியவேண்டும்.

**வாயவனையல்லது வாழ்த்தாது, கையுலகம்**
**தாயவனை யல்லது தான் தொழா—பேய்முலைநஞ்**
**சூணாகவுண்டா னுருவொடு பேரல்லால்**
**காணாகண் கேளா செவி. (11)**

| | | | |
|---|---|---|---|
| வாய் | என்னுடையவாயானது | நஞ்சு | விஷத்தை |
| அவனையல்லது | அவ்வீசனைததவிர | ஊணாக | ஆகாரமாக |
| வாழத்தாது | (மற்றொருவனை) துதிசெய்யாது. | உண்டான் | புசித்தவனுடைய |
| கை | கைகள் | உருவல்லால் | திருமேனியைத் தவிர |
| உலகம் தாயவனை யல்லது | உலகததை அளநதவனைததவிர | காணா | மற்றொன்றைப்பார்ககாது |
| தான் தொழா | (மறறவனை) ஸேவிககாது | செவி | காது |
| கண் | கண்கள் | பேரல்லால் | அவன் திருநாமத்தைத தவிர |
| பேய் முலை | பூதனையின் கொங்கைகளிலுள்ள | கேளா | மற்றசப்தங்களைக் கேட்காது. |

இப்படி ஆச்ரித ரக்ஷணத்தில் த்வரையுள்ள ஈச்வரனுடைய குணங்களை பத்துபபாசுரங்களால் அநுஸந்தித்து, இப்பாட்டில் அவன் விஷயத்தில் தன்னுடைய இந்திரியஙகள பொருந்தி அனுப விப்பதைப் பேசுகிறார். "விசிதரா தேஹஸம்பத்திரீச்வராய நிவே திதும்" என்றபடி விசித்திரமான பல இந்திரியங்களோடு கூடின இந்த சரீரம ஸர்வேசவரனை அநுபவிப்பதறகாகவே ஸிருஷ்டிக்கப் பட்டிருப்பதால், அவ்வண்ணமே என கரணஙகளும் அவனிடம ஈடு பட்டு ஸாபல்யமடைந்தனவென்கிறார்.

வாயவனையல்லது:—என்வாய பக்ஷி மிருகங்கள் ஆகிய திரி யக் ஜாதிகளில் பிறப்பதறகீடான வாசிகாபராதங்களான வீண் வார்த்தைகளைப்பேசாமல ஜிஹ்வே கீர்த்தய கேசவம் முராரிபும் என்பதறகிணங்க அபபரமபுருஷனையே ஸ்தோத்ரம் செய கிறது. "மெயய மலையானை சங்கேநதும கையானை கைதொழாக் கையல்ல கண்டாமே" எனறு அவனைத் தொழாத கைகள கைக ளல்லவென்று இவாபோன்றவாகள பாசுரமாதலால இவா கைக ளும் அவனையே அஞ்சலிசெய்து நிற்கினறன. "என அமுதினைக் கண்ட கண்கள மற்றொன்றினைக்காணுவே" என்றபடி கண்கள அவனையே பாாத்துக்கொண்டிருக்கின்றன. அவன சரிதஙகளைக் கேளாத காதுகளை பாமபுகள குடியிருககும் பிலஙகளாகச் சொல்வ தறகிணங்க, அவ்வண்ணமில்லாமல் என் செவிகள் அவன் சரிதங் களையே கேட்டு அதிலேயே திருப்தியடைந்திருக்கின்றன. **[Grantha text] [illegible]** என்று விஷயாந்த ரங்களில் செல்லக்கூடிய ஸ்வப்ாவதேதாடு கூடின இந்திரியங்கள் ஸர்வேச்வரனிடத்திலேயே ஈடுபட்டு அவனையே அநுபவித்துக் கொண்டிருக்கின்றன.

**செவிவாய் கண் மூக்குடலென் றைம்புலனும், செந்தீ**
**புவிகால் நீர் விண்பூத மைந்தும்—அவியாத**
**ஞானமும் வேள்வியும் நல்லறமு மென்பரே**
**ஏனமாய் நின்றார்க் கியல்வு.** (12)

| | | | |
|---|---|---|---|
| செவி | காது | கண் | கண்கள் |
| வாய் | வாகிந்திரியம் | மூக்கு | நாசிகை |

| | | | |
|---|---|---|---|
| உடல் | தவகிந்திரியம் | அவியாத | அணையாத |
| என்று ஐம்புலனும | என்கிற பஞ்சேந்திரியங்களும | ஞானமும | பகதியாகிற ஞானமும |
| செந்தீ | சிவந்த அகநி | வேளவியும | யாகமும |
| புவி | பருதிவீ | நல் | உயாந்ததான |
| கால் | வாயு | அறமும | தர்மமும |
| நீர் | ஜலம | ஏனமாய நின்ரூர்க்கு | வராஹரூபத்துடன வந்த பெருமானுக்கு |
| விண | ஆகாசம | இயல்வு | உபாயம் என்று |
| பூதமைந்தும | இவ்வைந்து பூதங்களும | என்பரே | சொல்லுகிறுர்கள் |

ஸர்வேச்வரனுக்கு உபாயமான பக்தியோகத்தை உபதேசிக்கிறுர். அல்லது பகவானை அநுபவிக்கத் தனனிடமுள்ள பக்தியெனனும் ஸாதனத்தை வெளிக்காட்டுகிறுராகவுமாம.

செவிவாய'—செவி முதலிய இந்திரியஙகளும பஞசபூதங்களடங்கிய சரீரமும், பகதியோகமும, அக்னிஹோத்ரம முதலிய கா்மஙகளும, விவேகம் முதலிய ஆதமகுணஙகளும, வராஹரூபியான பரமனை அடைவதறகு உபாயங்கள என்று பொருள. "ஜஞாநாந் மோக்ஷ:" எனறபடி பக்திதான் பெருமானையடைய நேரானவுபாயம. மறறவைகளை உபாயங்களாகச் சொனனது எப்படிப் பொருந்தும் என்ருல, பக்தியோகம், இநதிரியஙகளுடன் கூடின, பஞ்சபூதங்களால் செய்யபபட்ட சரீரத்தால் செய்யப்படவேண்டுமாதலால் அவற்றையும் உபாயமென்னலாம. ஆக பக்தியோகம் ஸாக்ஷாத்ஸாதனமாகும். அதற்கு உதவியான சரீரம், பரம்பரையாக மோக்ஷஸாதனமென்று கருத்து. இப்படியே வேளவி என்கிற அக்னிஹோத்ரம் முதலிய கர்மங்களும், "யஜ்ஞேந தாநேந தபஸாநாசகேந" ஆப்ரயாணுத் தத்ராபி ஹித்ருஷ்டம், "விஹிதத்வாச்ச ஆச்ரமகர்மாபி," அக்நிஹோத்ராதிது தத்கார்யாயைவ தத்தாசனுத் என்பவைகளுக்கிணங்க, பக்தி யோகம் மனதில தங்குவதறகுக் காரணங்களாகச் சொல்லப்பட்டபடியால் அவைகளும் பரம்பரயா மோக்ஷஸாதனங்கள். இவ்வண்ணமே விவேகம், தயை, ஸத்யம், பொறுமை, முதலிய நற்குணங்களும் பக்தியை வளரச்செயயும் காரணங்களாதலால் அவைகளும் ஸாதனஙகளாகச் சொல்லப்பட்டன. ஆகவே

சரீரத்தால் அநுஷ்டிக்கப்படுமதாயும் அக்னிஹோத்ரம் முதலிய கர்மங்களாலும், விவேகம் முதலிய குணங்களாலும், வளர்க்கப் படுமதான பக்தியோகம் பரமபுருஷனை யடைவதற்கு உபாயம் என்று சொல்லப்பட்டதாயிற்று.

இங்கு என்பரே என்றவிடத்தில் ஏ என்ற சொல்லால் இகழ்ச்சி தோற்றுகிறது என்று சொல்பவருமுண்டு பக்தியை உபாயமாகக்கருதி அநுஷ்டிப்பவர்களை நிந்திக்கிறுரென்று பொருள். அதாவது மோக்ஷத்தை அடைவதற்கு பக்தி, ப்ரபத்தி, இவையி ரண்டும் உபாயங்கள். பக்தியாவது தினந்தோறும் அப்யாஸம் செய்யப்படுமதாயும், தைலதாரைபோல் இடையில் விச்சேதமில்லாத தாயும்,பிரத்யக்ஷம்போல தோன்றுவதாயுமுள்ள பகவானைப்பற்றிய அன்புடன் கூடிய நினைவின் வரிசை. பிரபத்தியாவது கீழ்சொல் லிய பக்தியை என்னுல் அநுஷ்டிக்க முடியவில்லை, நீயே அந்த பக்திஸ்தானத்தில் நின்று எனக்கு அருள் புரியவேணுமென்று ஈச் வரனை கெஞ்சிகேட்டுக் கொள்வதுதான் நாள்தோறும் ஒரு மாத் திரைப்போதும் விடாமல் செய்யவேண்டிய பக்தியோகம் நம் மால் இயலாத செயலாதலால் அதில் இறங்கி ஏன் சிரமப்படவேணு மென்று பக்தியோக நிஷ்டர்களை இகழ்கிறுரென்று பொருள். பிர பத்தியை அநுஷ்டித்து கவலையற்றிருக்கை மேலானதென்கிறுர். பிரபன்னர்களும் மோக்ஷத்திற்காக பக்தியை ஆசைப்படாவிடினும் இங்கு சரீரமுள்ளவரையில் ஸுகரூபமான பக்தியை ஆசைப்படு வார்கள். பக்தி—அவர்களுக்கு பயனுகவிருக்கும்.

பக்தியை ஸாதனமாகச் செய்யாமல் பயனுக அநுஷ்டிப்பது மேலானது என்று விவக்ஷிதம். பிரபத்தியை அநுஷ்டித்து உத்தர காலத்தில் பயனுக பக்தியை செய்து போதுபோக்கும் ஸ்ரீவைஷ்ண வர்கள் சிறந்தவர்களென்று பரமதாத்பர்யம்.

**இயல்வாக வீன் துழாயானடிக்கே செல்ல**
**முயல்வா ரியலமரர் முன்னம்—இயல்வாக**
**நீதியாலோதி நியமங்களாற்பரவ**
**ஆதியாய் நின்முரவர். (13)**

| | |
|---|---|
| முன்னம் | அநாதிகாலமாக |
| இயல் | ஞானசக்திகள்வாய்ந்த |
| அமரர் | நித்யஸூரிகள் |
| இயல்வாக | (தங்களுக்கு) தகுதியானபடி |
| ஈன்துழாயான் | ரமணீயமானதிருத்துழாயை அணிந்த ஸர்வேச்வரனுடைய |
| அடிக்கே | திருவடிகளிலே |
| செல்ல | சென்று நெருங்கும்படி |
| முயல்வார் | முயற்சி செய்பவர்கள் |
| இயல்வாக | (மற்றவர்களுக்கு),தகுதியாக |
| நீதியால் ஓதி | நீதி தவறாமல் அத்யயனம்செய்து |
| நியமங்களால் பரவ | வேதத்தில் சொல்லியவரம்புகளுடன் ஸ்தோத்ரம் செய்யும்படி |
| அவர் | அந்தஸர்வேசவரன் |
| ஆதியாய் நின்றார் | முதன்மையான காரணமாயிருந்தார். |

எம்பெருமானை அடைவதற்கு பக்தியோகம் பரம ஸாதனமென்று சொன்னபிறகு, ஆழ்வார்களுக்கு பகவத்பக்தி அவதரிக்கும் பொழுதே உண்டாகிறபடியால் அவர்கள் பரமனை பலபடியாக அநுபவிக்கிறார்கள். அறிவிலிகளான நமபோல்வார் எங்ஙனம் அவனைக்கண்டு கைங்கரியங்கள் செய்வது? என்று கேள்வி பிறக்க நமக்கு அவனைக்காண விரகுண்டு என்று இப்பாட்டில் பதிலுரைக்கிறார்.

இயல்வாக:—ஸேவிக்குமளவில் கண்களைக் குளிரச்செய்யும் அழகு பொருந்திய திருத்துழாயை மாலையாக அணிந்துகொண்ட புருஷோத்தமனுடைய திருவடிகளில் சேருவதற்குத் தகுதியான திருவாராதனங்கள் செய்து நித்ய ஸூரிகள் மேன்மைபெற்று விளங்குவார்கள் அநாதி காலமாய் அவ்வீசனையே அநுபவிக்கும் உயர்வு அவர்களுக்கு இருக்கட்டும். ஸம்ஸாரிகளான நமக்கும் அவனைக்கண்டு அநுபவிக்க ஸாதனங்களுண்டு என்கிறார் பின்னடிகளால். இயல்வாக நாமும், அவ்வீச்வரனையும் அவனைத்தழுவிக் கிடக்கும் குணங்களையும் குருமுகமாகக்கேட்டு பிறகு மனனம் செய்து, த்யானத்திலும் நிலைபெற்று, அவனிடமுள்ள பேரன்பு உள்ளடங்காமல் அவன திருநாமங்களை வாயினால பாடித்துதித்தால் அவன் கருணைகூர்ந்து தன்னையேயொக்க அருள் செய்வன் என்று கருதது. இப்படி வேதாத்யயனம் செய்து வேதத்தில் சொல்லிய

கருமங்களைச் செய்து அவனையே பாடிக்கொண்டிருப்பது ஞான சக்திகள் இல்லாதவர்களான நம்மால் ஸாதிக்க முடியாத செயலாயிருக்கிறதே? என்று வினவ, நான்காமடியால் பதிலுரைக்கிறார். ஆதியாயநின்றுரவாததாமிபுத்திே ய ா க ம் த ம ே ய ன ம ா மு பயாந்திதே என்கிறபடி அவ்வீசனே நமக்கு கீழ்ச்சொல்லிய வேலைகளைச்செய்ய புத்தியைக் கொடுத்தும் கருவிகளைக் கொடுத்தும் பக்தியை வளரும்படி செய்தும் மோக்ஷமளவான உபகாரங்களைச் செய்து கொடுக்கிறான். நாம் அவனிடம் சிறிது ஆசை வைத்தால மேலுள்ள உபாயங்களுக்கு நாம் வியாஜமேயல்லது ப்ரதானகாரணம் ஸர்வேச்வரன் என்றபடி.

அவரவர் தாந்தாமறிந்தவா றேத்தி
இவரிவ ரெம்பெருமானென்று—சுவர்மிசைச்
சார்த்தியும் வைத்தும் தொழுவர், உலகளந்த
மூர்த்தி யுருவே முதல். (14)

| | | | |
|---|---|---|---|
| அவரவா | ரஜஸ தமோகுணங்கள் நிறைநதவதிகாரிகள் | சுவாமிசை | சுவாகளில் |
| | | சாாததியும | எழுதிவைததும |
| தாம் தாம அறிந்தவாறு | தங்கள் புததிகளால் தெரிந்துகொணடபடி | வைததும் | பிமபஙகளாக பரதிஷ்டைசெயது வைததும் |
| | | தொழுவர் | ஸேவிப்பார்கள் |
| எத்தி | துதிசெய்து | உலகளநதமூர்ததி உருவே | இவ்வுலகையளந்த பெருமானுடையஸ்வரூபமே |
| இவா இவா | இன்னார் இன்னார்தான | | |
| எமபெருமான என்று | நமக்கு ஸவாமியென்று (நிசசயித்து) | முதல் | ஆதிகாரணமாகும். |

இப்படி ஈசனை அடைவதற்குரியவுபாயத்தை அருளிச்செய்த பின் அவ்வீசனை வேண்டாதார் படும்பாட்டை இப்பாசுரத்தில் பேசுகிறார். அல்லது ஸாத்விகர்களான அதிகாரிகளைக் கீழே பேசி ராஜஸதாமஸர்களை இப்பாட்டில் பேசுகிறாராகவுமாம். ரஜஸ் தமோ குணங்கள் வஸ்துக்களை உள்ளபடி காண்பிக்காதென்றும், விபரீதமாயும் காண்பிக்குமென்றும் பகவத்கீதையில் சொல்லியபடி, அக்குணங்கள் நிறைந்தவர்கள் தங்களுடைய புத்திகளைக்கொண்டு கண்ணில் தென்பட்ட சிலரைப்புகழ்ந்து பரதேவதைகளாகக் கருது

கிறார்கள். ஸகரமஹாராஜாவின் பிள்ளைகள் தம் தகப்பனுடைய அச்வமேதக்குதிரையைத் தேடிச்செல்லுங்கால் பாதாள வுலகத்தில் கண்ணைமூடி தோன்றிய கபில முனிவரைப்பார்த்து அவர் தவத்தையும் தர்மங்களையும் மனதில் சிந்தியாமல் அக்குதிரையை அவரே திருடினரென்று தீர்மானித்தார்கள். அவர் ஸமீபத்தில் அக்குதிரை கட்டப்பட்டிருந்ததே அதற்குக் காரணமாகக் கொண்டார்கள். அது போல், ராஜஸதாமஸர்கள் ப்ரஹ்ம ருத்ராதி தேவர்களைக்கண்டு அவர் கள குணங்களையும் ரூபங்களையும சக்தியையும் ஆலோசிக்காமல் இவ் வுலகில கோயில்கொண்டிருக்கும் இருப்பையே காரணமாகக்கொண்டு அவர்களை கடவுள் என்று துதிசெய்கிறார்கள். தங்கள் வீடு களின் சுவர்களிலும் சித்திரங்களாக எழுதிவைத்து பூஜிக்கிறார்கள். சிலர் ப்ரதிமைகளை நிர்மாணம் செய்து ப்ரதிஷ்டைகள் செய்தும் பூஜிக்கிறார்கள். என்னுடைய தீர்மானமோ வென்றால் உலகளந்தவுரு ருவே எல்லா தேவதைகளுக்கும் காரணமென்பதாம்.

ராஜஸ தாமஸர்கள் தேவதாந்தரங்களை வணங்குகிறார்கள் என்று சொல்லி அதன் பயனை இப்பாசுரத்தில் சொல்லாமையினால அப் பூஜைகள் பயனற்றவை என்று கருத்து.

"உலகளந்த மூர்த்தி" என்பதால "நாடிநீர் வணங்கும் தெய் வமும்மையு முனபடைத்தான்" என்பதுபோல் இதர தேவ தைகளை வணங்குகிறவர்கள் தலையிலும், இதரதேவதைகள் தலையி லும் கால்வைத்த நாராயணனே பரதேவதையென்று உபதேசித்த படி.

முதலாவார் மூவரே, அம்மூவருள்ளும்
முதலாவான் மூரிநீர்வண்ணன்—முதலாய
நல்லானருளல்லால் நாமநீர் வையகத்துப்
பல்லா ரருளும் பழுது (15)

| | | | |
|---|---|---|---|
| மூவரே | அரி, அயன், அரன், என்கிற மூவர்களான | மூரி நீர்வண்ணன் | பெருமையுள்ள ஜலம நிறைந்த கடல் போனற நிறமுடையவனே |
| முதல் ஆவார் | பிரதானர்களான தேவர்கள் | முதலாவான் | காரணபூதன் |
| அம்மூவர் உள்ளும் | அம்மூன்றுபேர்களுக்குள்ளே | முதலாய | காரணபூதனையும் |

| | | | |
|---|---|---|---|
| நல்லான | உபகாரகனுமான திருமாலின் | பல்லார் | அவனைத்தவிர பல பேர்களுடைய |
| அருளல்லால் | கிருபையைத்தவிர | அருளும் | கிருபையும் |
| நாமநீர் வையகத்து | அச்சப்படும்படியான ஜலம் சூழ்ந்த இப்பூமியில் | பழுது | வீணாகும் (பிரயோஜனமற்றது.) |

கீழ்ப்பாசுரத்தில் உலகளந்த மூர்த்தி உருவே முதல் என்று நிர்ணயம் செய்தது உம்முடைய அபிமானத்தாலல்லவா என்று வினவ வந்தவர்களுக்கு இப்பாட்டில் விடையளிக்கிறார். தத்வங்களின் உண்மையை பிரித்துக்காட்டி பரதேவதா நிர்ணயம் செய்கிறார்.

முதலாவார்:—இவ்வுலகில் பலதெய்வங்கள பல்லாயிரம் ஜனங்களால் வணங்கப்பட்டிருந்த போதிலும், பிரமன் விஷ்ணு சிவன் என்கிற மூவர்தான் பிரதான தெய்வங்கள. இவர்கள் முறையே ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைச் செய்கிறவர்கள், இம்மூவருள்ளும் விஷ்ணுவே மற்றவர்களுக்கும் காரணமாயிருப்பவர் பிரமன் சிவன் இவர்களுக்கு அந்தர்யாமியாக விருந்து ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களை நடத்தி ஸ்வரூபேண ரக்ஷணம் செய்கிறவர். ஆதலால் கடல வண்ணன்தான் பரம்பொருள். அவனுடைய அருளைத்தவிர மற்றவர்களுடைய அருள் வீண்தான் என்கிறார். பல பிராணிகள் பல தெய்வங்களைத்தொழுது பல பிரயோஜனங்களை அடைந்து ஸுகமாய வாழ்ந்திருப்பதை நாம் நேரில் கண்டிருக்க, ஆழ்வார் இதர தெய்வங்களுடைய அனுக்ரஹம் பயனற்றது என்பதற்குக் கருத்து யாதெனில் “யாந்தி தேவவ்ரதா தேவாந்” பித்ரூந் யாந்தி பித்ருவ்ரதா: என்று இதர தேவதைகளை ஸேவிப்பவர்கள் அத்தேவர்களுக்கு ஸமமான ஸ்தானத்தை அடைந்து ஸுகித்திருந்தாலும “ஆப்ரஹ்ம புவனால்லோகா: புநராவர்த்திநோ ஈஜுந” என்றபடி மீளவும் திரும்பி இப்பவக் குழியில் வீழ்ந்து துயரப்பட வேண்டியதாயிருப்பதால், “யம் ப்ராப்ய நநிவர்த்தந்தே தத்தாம பரமம் மம” என்றபடி மீளவும் துக்கச் சுழலையில அகப்படாதபடி காத்து பரமாநந்தத்தையும் அடைவதற்கு மற்றதேவர்களுடைய அனுக்ரஹம் வீணாகும் என்றபடி

முதலாய நல்லான் என்பதால் பெறறெடுத்த தாய்போலும் குணங்களாலும் பரிபூர்ணன் என்பது பொருள்.

பல்லார் என்பதால் அயன் அரன் இந்திரன் முதலாத் தெய்வங்கள் தனித்தனியாகவோ, திரளாகச் சேர்ந்தோ அருள் புரிந்தாலும் நாம் விரும்பிய முக்தியைப் பெற விரகில்லை என்கிறார். மிகவும் ஹிதமாயும் பத்யமாயும் உள்ள தாய் முலைப்பாலிருக்க விஷபானம் பண்ண முயல்வது தகுமா? என்பது திரண்டபொருள்.

**பழுதே பலபகலும் போயின வென்று, அஞ்சி**
**அழுதே னரவணைமேல் கண்டு—தொழுதேன்**
**கடலோதம் காலலைப்பக் கண்வளரும், செங்கண்**
**அடலோத வண்ணரடி. (16)**

| | | | |
|---|---|---|---|
| கடல் | ஸமுத்திரத்தினுடைய | வண்ணர் | திருவடிவையுடையவருமான பரமபுருஷனுடைய |
| ஓதம் | அலைகள் | அடி | திருப்பாதங்களை |
| கால் | திருவடிகளை | அரவு அணை மேல் | ஆதிசேஷனாகிய சயனத்தின்மேல் |
| அலைப்ப | பிடிப்பதுபோல்வீச | கண்டு | பார்த்து |
| கண்வளரும் | நித்திரைசெய்கிறவனும் | தொழுதேன் | ஸேவித்தேன் |
| செம்கண் | சிவந்த திருக்கண்களையுடையவனும் | பலபகலும் | சென்றநாளெல்லாம் |
| அடல் | மேல்விழுகிற | பழுதே | வீணாகவே |
| ஓதம் | (லாவண்யமாகிற) அலைகளுடன் கூடின | போயின என்று | சென்றுவிட்டதே என்று |
| | | அஞ்சி | பயப்பட்டு |
| | | அழுதேன் | வருந்திஅழுகிறேன் |

ஸ்ரீய: பதியின் அருளே மோக்ஷஸாதநம் என்று சொல்லிய பின் அவன் அருள் பெறாமல் கீழ்நாட்களை வீணாகக்கழித்து விட்டேனே என்று வருந்துகிறார்.

பழுதே பலபகலும்:—கடலில் ஓயாது கிளர்பும் அலைகள் கால் பிடிப்பதுபோல் தோன்ற பாம்பணைமேல் பள்ளிகொண்ட வாத்ஸல்யத்தால் சிவந்த கண்களையுடைய கடல் போன்ற நிறத்தனான் திருவடிகளை ஸாக்ஷாத்கரித்து ஸேவித்தேன். இப்படி அப்பகவானைக்

கண்டு தொழுது பாசுரங்கள் பாடாது சென்றகாலங்களில் வாளாவிருந்து விட்டேனே. போனகாலமெல்லாம் தேவதாந்தரங்களையும் விஷயாந்தரங்களையும் பற்றிக்கிடந்து உய்வதோர் வழியின்றி வீணாக்கினேன் என்று பரிதபிக்கிறார்.

பலபகலும்:—இந்திரியங்களின் வேலைகளையெல்லாம் அடக்கி நித்திரையால் இரவை அறிவின்றிப் பழுதாக்குவது பிரஜைகளுக்கு இயல்பேயாகும். ஆதலால் இரவைப்பற்றி துக்கப்பட நியாயமில்லையேயாகிலும் பகலை பழுதே போககினது வருந்துவதற்குக் காரணமாயிற்று. திருமங்கையாழ்வாரும் "பாவியேனுணராது எத்தனை பகலும் பழுதுபோயொழிந்தன நாட்கள்" என்றார். சென்ற காலம் அநாதியாதலால் அவ்வளவுகாலத்தையும் வீணாக்கழித்தேனே என்று அழுகிறார்.

அஞ்சி அழுதேன்:—இனி வரப்போகிற நாட்களும் பகவத்த்யானத்தோடு செல்லவேண்டுமே! கீழ நாட்கள்போல அறிவின்றி வீணாகுமோ என்று அஞ்சுகிறார். "ஒன்று மறந்தறியேன" என்ற பாசுரத்தில் கர்ப்பவாசத்திலேயே ஈசனை மறவாத நான் இனி மறக்க ப்ரஸக்தி உண்டோ என்று இவர் தாமே சொல்லியிருக்க, இங்கு அஞ்சுவதற்குக் காரணம் யாதெனில பஞ்சேந்திரியங்கள் விண்ணுளார் பெருமாற்கும் அடிமை செய்வாரையும் இந்நிலத்தில நலியுமென்று சொல்லியிருப்பதால அவ்விந்திரியங்கள் தனக்கு விஷயங்களில் ஆசையைப் பிறப்பித்து பரமாத்மாவை மறக்கச்செய்தால் நாம் என்ன செய்யமுடியும்? என்று விரோதிகளை நினைத்து.

அரவணைமேல:—குளிர்த்தி, மணம், மார்தவம், இக்குணங்களால் உயர்ந்த திருவனந்தாழ்வானுகிற படுக்கையில மேன்மை தோன்ற பள்ளிகொண்ட செங்கண்மால்.

கடலோதம்:—திருப்பாற்கடலில் அலைகளகால் பிடிக்கக்கிடந்தப்ரகாரத்தை அல்லது "உவர்க்கும் கருங்கடல் நீருள்ளான்" என்று உப்புக்கடலிலும் பகவான் வஸிப்பதாக பரமாணங்கள் சொல்லுகிற படியால லவண ஸமுத்திரத்தில் கிடந்த பிரகாரத்தையாகவுமாம.

அடலோத வண்ணர்:—ஸௌந்தர்யங்களால ஸேவிக்கிறவர்களை கள்ளும்படியான திருவடிவையுடையவர்.

**அடியும்படி கடப்பத் தோள் திசைமேற் செல்ல**
**முடியும் விசும்பளந்த தென்பர்—வடியுகிரா**
**லீர்ந்தான் இரணியனதாகம், இருஞ்சிறைப்புள்**
**ளூர்ந்தான் உலகளந்த நான்று,** (17)

| | | | |
|---|---|---|---|
| வடி | கூர்மையான | அடியும் | ஒருபாதம் |
| உகிரால் | நகத்தினுல் | படிகடப்ப | பூமியை அளக்க |
| இரணியனது | ஹிரணயகசிபுவினுடைய | தோள் | திருப்புஜங்கள் |
| ஆகம் | சரீரத்தை | திசைமேல் செல்ல | திக்குகளின் மேல நிறையும்படி போக |
| ஈர்ந்தான் | பிளந்தவனும் | முடியும் | கிரீடமும் |
| இருசிறை | விசாலமான சிறகுகளையுடைய | விசும்பு | ஆகாசத்தை (மேலுலகங்களை) |
| புள் | பெரியதிருவடியை | அளந்தது | அளவிட்டது |
| ஊர்ந்தான் | நடத்துகிறவனுமான ஈசவரன் | என்பர் | என்று நவில்வார்கள். |
| உலகு அளந்த நான்று | உலகங்களை அளக்கும் தருணத்தில | | |

கீழநாள்கள் எவ்விதம பழுதாகச் சென்றன என்பதை விவரித்துக் காட்டுகிருர் இப்பாட்டால்.

அடியும்படிகடப்ப:—இவ்வுலகில அவனீசன் செய்தருளிய அவதாரங்கள் பலவற்றையும் காணுது இருந்து விட்டேன். ஆற்றில வெள்ளம் கரைபுரண்டுவரும்பொழுது வெறுமனே இருந்துவிட்டு, வெறுமணலாயிருக்கும்பொழுது கரையில சென்று நின்று ஜலத்திறகு மனமுருடுவதுபோல், அவன வெள்ளமிடும்படி செய்த அவதாரங்களில, அவவமயங்களில நினைவின்றி இருந்துவிட்டேன். அந்நாட்கள வீணானவையல்லவா? இக்காலங்களில் அவனுடைய சரிதங்களைக் கேட்பதறகு, அதிகாரியாய இருப்பதா பெரிது? நேரில் ஸேவிக்காத பிறவி எதற்காக என்று வருந்துகிருர்.

அடியும்படிகடப்ப—நாம் பெருந்தவத்தாலும காண்பதற்கரிய திருவடிகளை பூமியடங்கலும் நிரம்பவைத்தும, பிராட்டிமார்களை யணையும் திருக்கைகளை திசைகளின் எல்லையளவும் நீட்டியும் கிரீடம் அண்டபித்தியளவும் செல்லும்படிக்கு உயாத்தியும் திரிவிக்ரமனானபொழுது நான் அவன் திருவடிகளை அடையாதிருந்துவிட்டேனே!

வடியுகிறால்:—பரமபக்திமானை ப்ரஹ்லாதனுக்காக நரசிங்க ரூபத்துடன் வந்து அவன் தாதையின் உடலை நகங்களால் கிழித்துப் பொகட்டு வீரலக்ஷ்மியுடன் விளங்குகின்ற திருமேனியையும் ஸேவிக்கப் பெறறிலேனே!

இரும் சிறை:—புஷ்பங்களைப்பறிக்கச் சென்று பொய்கையில் முதலைவாயில் அகப்பட்ட யானையின் துயரம்தீரப் பெரியதிருவடியின் பேரில் ஏறி எழுந்தருளியபோதும் காணுதிருந்துவிட்டேனே. இப்படி அநாதியாக நான் ஸம்ஸரித்த காலத்தில் அவன்பல அவதாரங்களைச்செய்திருப்பினும் அச்சமயங்களில நான் எங்கிருந்தேனோ என்று புலம்புகிறார்.

நான்ற முலைத்தலை நஞ்சுண்டு, உறிவெண்ணெய்
தோன்ற வுண்டான் வென்றி சூழ்களிற்றை,--ஊன்றிப்
பொருதுடைவு கண்டானும் புள்ளின்வாய் கீண்டானும்
மருதிடை போய் மண்ணளந்தமால் (18)

| | | | |
|---|---|---|---|
| நான்ற | தொங்குகிற | ஊன்றி | பொருந்திநின்று |
| முலைத்தலை | கொங்கைகளிலுள்ள | பொருது | போர்புரிந்து |
| நஞ்சு | விஷத்தை | உடைவு | அதன் நாசத்தை |
| உண்டு | புசித்து | கண்டானும் | செய்தவனும் |
| உறி | உறிகளில் வைத்திருக்கும் | புள்ளின்வாய் | கொக்கின் வடிவுடன் வந்த அஸுரனுடைய வாயை |
| வெண்ணெய் | நவநீதத்தை | கீண்டானும் | கிழித்தவனும் |
| தோன்ற | களவு பிரஸித்தமாகும்படி | மருது இடை போய் | இரண்டு மருதமரங்களின் நடுவேதவழ்ந்துபோன |
| உண்டான் | அமுதுசெய்தவனும் | மண்ணளந்த மால் | உலகளந்தருளின திருமாலேயாவன். |
| வென்றிசூழ் | ஜயத்துடன் கூடின பகைவர்களை ஆக்ரமிக்கவல்ல | | |
| களிற்றை | (குவலயாபீடமென்கிற) யானையை | | |

இப்பாசுரத்தில் ஸௌசீல்யம், ஸௌலப்யம், முதலிய கல்யாண குணங்கள் கரைபுரண்டு ஓடின. அறியாத இடைச்சியரும அறி

யும் வண்ணம அவதரித்த கிருஷ்ணனையும் நேரில் ஸேவிக்கப்பெறநி லேனே என்று வருந்துகிருர்.

நான்ற:—தாயபோல் வடிவெடுத்துவந்த பூதனையின் விடங் கலந்த முலையுண்டு, ஆய்ச்சியரும் அரசர்களும வெண்ணெயுண்டா னென்றுபரி ஹஸிக்குயபடி வெண்ணெயைக் களவால வாரிவிழுங்கி யும், குவலயாபீடமெனனும் யானையின் கொமபினைபபிடுங்கி அதனை நசித்துப்பொகட்டும், கம்ஸனுல ஏவப்பட்டுவந்த பகாஸுரனை வாயைக்கிழித்து ஸமஹரித்தும். மருதமரங்களை சாயத்தும், இப படிப்பல விசித்திர சேஷ்டிதஙகளைச் செய்த கிருஷ்ணன் ஆச்ரிதர் களோடு முறைபறப் பரிமாறிய பொழுதும நான் வாளாவிருநது காலத்தைப்பழுதாககினேன்.

## கண்ணன் பேய்ச்சி முலையுண்ட கதைச்சுருககம்.

கம்ஸனுல் தூண்டபபட்ட பூதனையென்பாள ஒரு பேய்ச்சி ஓர் இடைச்சியின் வடிவெடுத்துக்கொண்டு வீடுகள் தோறும சென்று, கண்ணனுகிற குழவியைத்தேடி வருகையில நந்தகோப னுடைய இல்லத்தில் சென்று அக்குழநதையைப்பார்த்து அதைக் கொல்ல எண்ணங்கொண்டு மிகுந்த பரிவுள்ளவள் போல் அக்குழந் தையை வாரியெடுத்து விஷமேற்றிய முலையைக்கொடுக்க, குழந்தை வடிவான அக்கண்ணனும் அவளெண்ணத்தையறிநது அவள் விரும் பியபடியே முலையுண்பதுபோல் அம்முலைவழியே அவள் உயி ரையும உண்டார் என்பது.

## குவலயாபீடமென்கிற யானையைக் கோன்ற வரலாறு.

கிருஷ்ணனை வதைசெய்ய எண்ணங்கொண்ட கம்ஸன் தநுர் யாகமென்று ஓர் வியாஜத்தையிட்டு, அக்ரூரர் என்கிற பாகவதோத் தமரைக்கொண்டு ஸ்ரீகிருஷ்ணனையும் பலராமனையும் தன் நகரத் திற்கு அழைத்தான். அவ்விருவர்களும் அவ்வண்ணமே அங்கு சென்று கம்ஸனுடைய அரண்மனைக்குச் செல்லும்பொழுது, அவ் வரண்மனைவாசலில் கிருஷ்ணனைக்கொல்வதற்காக நிறுத்தப்பட்டி ருந்த குவலயாபீடமென்கிற யானை அதன் பாகனுல் தூண்டப்பட்டு யுத்தம் செய்யவருங்கால், ஸ்ரீகருஷ்ணனும் அக்களிற்றின்

கொம்பைப்பிடுங்கி அக்கொம்பினாலேயே அந்தயானையை அடித்துக் கொன்றான்.

பகாஸுரனைக் கொன்ற கதைச் சுருக்கம்.

கம்ஸனால் ஏவப்பட்ட ஓர் அஸுரன் கொக்கின் உருவத்தை எடுத்துக்கொண்டுவந்து யமுனா நதிக்கரையின் அருகே சென்று அங்கு விளையாடிக்கொண்டிருக்கும் கண்ணனைத் தன் அலகுகளால் எடுத்துவாயில் விழுங்க, கண்ணனும் அச்சமயம் அவன் நெஞ்சில் செல்லும்பொழுது தீபோல் எரிக்க, அதற்கஞ்சி அவ்வஸுரனும் அக்கண்ணனை வெளியே கக்கிவிட்டு தன் அலகுகளாலேயே உடம்பைக் குத்திக்கொல்லவதற்கு முயற்சிக்க, அக்கண்ணனும் மிகுந்த சினங்கொண்டு தன் இருகைகளாலும் அதன் அலகுகளைப் பிடித்துக்கொண்டு அதன் வாயைக் கிழித்தெறிந்தான்.

கண்ணன் மருதிடைபோன வரலாறு.

கண்ணன் குழந்தையாயிருக்கும் தருணத்தில் தாயாருக்குத் துயரத்தை உண்டுபண்ணுகிற பலவிளையாடல்களைச் செய்துகொண்டு வந்தான். ஒருநாள் யசோதை மிகுந்த சிரமத்துடன் கடைந்தெடுத்துச் சேமித்துவைத்த வெண்ணெயை, கண்ணன் களவு செய்து உண்பதைக்கண்ட யசோதை மிகுதியான கோபத்துடன் அக்கண்ணனைப் பிடித்து ஓர் குறுங்கயிற்றால் உரலில் கட்டிவைத்தாள். கிருஷ்ணனும் அவ்வுரலையும் இழுத்துக்கொண்டு தவழ்ந்து செல்லுகையில் வழியில் இருந்த இரண்டு மருதமரங்களின் இடையே சென்றார். அவரால் இழுக்கப்பட்ட உரலும் இரண்டு மரங்களின் இடையில் தடைபட்டு நின்றது. உடனே அதை வேகத்துடன் இழுக்க அம்மரங்கள் முறிந்து இருபுறமாய்ச் சாய்ந்து விழுந்தன. கம்ஸனால் ஏவப்பட்டு கிருஷ்ணனைக் கொல்லத் தகுந்த ஸமயத்தை எதிர்பார்த்து அம்மரங்களில் வாஸம் செய்துவந்த இரண்டு அஸுரர்களும் அம்மரங்கள் விழுந்தபோது அடிபட்டு மாண்டனர்கள், என்பதாம்.

**மாலுங் கருங்கடலே என்நோற்றாய்? வையகமுண்**
**டாலினிலைத்துயின்ற வாழியான்—கோலக்**
**கருமேனிச் செங்கண்மால் கண்படையுள், என்றும்**
**திருமேனி நீ தீண்டப்பெற்று. (19)**

| | | | |
|---|---|---|---|
| வையகம் | உலகங்களை | கண்படையுள் | கண்வளரும் காலத்தில் |
| உண்டு | அமுதுசெய்து | என்றும் | எப்பொழுதும் |
| ஆலினிலை | வடபத்ரத்தில் | திருமேனி | அவனுடைய திருவுடம்பை |
| துயின்ற | உறங்கின | தீண்டப்பெற்று | தொட்டநுபவிக்கப் பெற்று |
| ஆழியான் | சக்ராயுதத்தையுடையவனும் | மாலும் | (அதனால்) மயக்கங் கொண்ட |
| கோல | அழகியதான | கருங்கடலே | கருப்பு நிறமுள்ள கடலே |
| கருமேனி | கருப்பான வடிவத்தையுடையவனும் | நீ என் நோற்றாய் | நீஎன்ன தவம் செய்தாயோ? |
| செங்கண் | சிவந்தகண்களையுடையவனுமான | | |
| மால் | ஸர்வஸ்வாமியானவன் | | |

பகவான் அவதரித்த காலங்களில் அவனைஸேவிக்கப்பெறவில்லையேயென்று கீழ் மூன்று பாசுரங்களால் வருந்தினார். இப்பொழுது, அவதாரகாலங்களில் ஸேவிப்பதை ஆசைப்படுவதைக் காட்டிலும் அவனுடைய நித்ய ஸம்பந்தத்தை விரும்புவதுதான் மேலானது, ஏனெனில் அவதாரங்கள் சிறிது காலங்களில் தோன்றி மறையக்கூடியவைகள். அவைகளை ஆசைப்பட்டால் தோன்றிய காலங்களில் பகவானை அநுபவித்துப் பிறகு இழக்கவேண்டியதாய் வரும். என்று யோசித்து பெருமாளோடு நித்ய ஸம்பந்தத்தைப்பெற ஆலோசனை செய்தார். அதற்கு உபாயத்தைத்தேடுமளவில் பெருமானுடன் அவ்வித ஸம்பந்தத்தை அடைந்தவர்களைக்கேட்டால் தெரியவருமென்று நினைத்து திருப்பாற்கடலைக் கூப்பிட்டு நீ எவ்வுபாயத்தால் பெருமாளை தீண்டப்பெற்றாயென்று இப்பாட்டில் வினவுகிறார். ஸர்வேச்வரனுடைய நித்யஸம்பந்தம் பெற்றுஅதனால் மதங்கொண்ட பாற்கடலே! ஒரு காலத்தில் இவ்வுலகங்களை அமுது செய்து ஆலிலையில் பள்ளிகொண்ட சக்ராயுதனுடைய அழகிய கருத்த திருமேனியை அலைகளாகிற கைகளால் எப்பொழுதும் ஸ்பர்சித்துக்கொண்டு இருக்கிறாயே! என்ன தவம் செய்தா அவனைத் தொடும்படியான பாக்யத்தைப் பெற்றாய என்கிறார்.

மாலும்:—பெருமாள் சிலகாலங்களில் பிராட்டியைப்பிரிந்தும் இருக்கிறார். உன்னைவிட்டுப் பிரியும் ஸமயமோ நேர்ந்ததே இல்லை. அதனால் மதங்கொண்டிருக்கிற கடலே! என்கிறார். கருங்கடலே

திருப்பாற்கடல் வெளுப்பு நிறமாயிருக்க கருங்கடலேயென்று வினவியதற்குக் காரணம் யாதெனில், அதில் பள்ளிகொண்ட திருமாலின் திருமேனியின் நிறத்தால் கருத்திருந்தபடியை நினைத்து. அல்லது பகவத்ஸாம்யம் பெற்றவர்கள் பெருமாளுடைய நிறத்தையும் பெற்றிருக்கவேண்டும் என்பதை நினைத்து. அல்லது நான் அவன் பிரிவால் வெளுத்து ஏங்கியிருக்க நீ அவனுடைய ஸம்பந்தத்தையடைந்து கறுத்த மாமைபெற்று விளங்குகிறாயே என்கிற இரக்கத்தைக்கொண்டு ஆகவுமாம்

பெற்றார் தளைகழலப்போந்தோர் குறளுருவாய்ச்
செற்றார் படி கடந்த செங்கண்மால்—நற்றா
மரை மலர்ச் சேவடியை வானவர்கை கூப்பி
நிரை மலர் கொண்டேத்துவரால் நின்று. (20)

| | | | |
|---|---|---|---|
| பெற்றார் | தேவகி—வஸுதேவன் என்னும் தாய் தகப்பன்மாரின் | செங்கண்மால் | செந்தாமரைக்கண்ணனான ஸர்வேச்வரனுடைய |
| தளை | கால்விலங்குகள் | நல் | நன்மைபொருந்திய |
| கழல | அவிழ்ந்துபோம்படியாக | தாமரைமலர் | தாமரைப்பூபோன்ற |
| போந்து | க்ஷீராப்திபிலிருந்து கிளம்பி (கண்ணனாய் பிறந்து) | சேவடியை | சிவந்த அடிகளை |
| ஓர் குறள் உருவாய் | விலக்ஷணமான வாமநரூபத்தையுடையவனாய் | வானவர் | தேவர்கள் |
| செற்றார் | விரோதியானமஹாபலியால் ஆக்ரமிக்கப்பட்ட | கைகூப்பி | கைகளால் அஞ்சலிசெய்து |
| படி | பூமியை | நிரை மலர் கொண்டு | இதழ்கள் நிறைந்த புஷ்பங்களைக் கொண்டு |
| கடந்த | அளந்துகொண்டவனாய | ஏத்துவர் | துதிசெய்வர்கள் |
| | | ஆல் | ஆச்சரியம் (அல்லது வருத்தத்தைக்காட்டுகிறது) |

திருப்பாற்கடல் பகவத்ஸம்பந்தம் பெற்ற விஷயத்தில் அதிசயமில்லை. க்ஷுத்ரப்ரயோஜனங்களை விரும்பும் இந்திரன் முதலிய தேவர்களே அவனை ஸேவிக்கப்பெற்றார்களே, இப்பொழுது இப்புவியிலுள்ளாரும் நானும் பெறவில்லையேயென்று சோகிக்கிறார்.

பெற்றூர்—தன்னை மகனாகப்பெற்ற தேவகி வஸுதேவர்களுடைய விலங்குகள கழன்றுபோம்படி ஸ்ரீ வைகுண்டத்தை விட்டுப் புறப்பட்டு கிருஷ்ணனாய் அவதரித்தவனும், மகாபலியால் தனக்கு ஸ்வாதீனமாக்கிக்கொண்ட பூமியை வாமனனாய் வந்து அளந்து கொண்டவனுமான செங்கணமாலின் தாமரை போன்ற திருவடிகளை தேவர்கள வாஸனை நிறைந்த புஷ்பங்களால் அர்ச்சித்து ஏத்தினார்கள. ஆல் என்ன ஆச்சரியம்.

பெற்றூர் தளைகழல "தந்தைகாலில பெருவிலங்கு தாளவிழ" என்றபடி கண்ணன அவதரித்தவுடன தேவகி வஸுதேவர்களுடைய விலங்குகள் கழன்றன என்பதைப பற்றியது. அல்லது திருவாய்ப்பாடியில் "முந்தை நன்முறை அன்புடைமகளிர முறை முறை தந்தம் குறங்கிடையிருத்தி" என்றபடி அக்கண்ணனை எடுக்கப்பெற்றவர்களெல்லாம ஸம்ஸார விலங்கைக் கழற்றினார்கள். என்பதைப் பற்றியதாம. அல்லது கிருஷ்ணனை பிள்ளை யென றெண்ணியவர்களின் விலங்குகள நீங்கினவென்றால,அவனை ஸ்வாமி யென்றேத்தும் நமமுடைய வினைகள் நீங்குவதில் ஐயமில்லை, என பதை காண்பிப்பதற்காகவுமாம.

செற்றூர்படிகடந்த விரோதியான மகாபலி தனக்குச் சேஷ மென்று நினைத்த பூமியை அளந்து தன் சேஷித்வத்தைக் காண்பித்தான்.

நற்றாமரை மலா குளிர்த்தி மணம் அழகு மார்த்தவம், இவைகள் எப்பொழுதும் குன்றாத தாமரை புஷ்பம்போன்ற திருவடிகள்.

வானவர் பிரயோஜநாந்தரபார்களான தேவர்கள். தேவர்களே மண்ணளந்தபொழுது அவன் திருவடியை ஏற்றப்பெற்றார்களே என்கிற ஆச்சர்யம் "ஆல்" என்னும அசைச்சொலலால காண்பிக்கப்படுகிறது. அல்லது தேவர்களுக்குக் கிடைத்த திருவடிகள் நமக்குக் கிடைக்கவில்லையே யென்கிற அபாயத்தைக் காண்பிக்கிறதாகவுமாம்.

நிரை என்பது வானவருக்கு அடைமொழியாகக்கொள்ளில், தேவர்கள் திரள திரளாகவந்து ஸேவித்தார்களென்று பொருள்

படும். மலருக்கு அடைமொழியாகக்கொள்ளில் இதழ்கள் நிறைந்த புஷ்பங்களால் அர்ச்சித்தார்களென்பதாம்.

## தேவகி வஸுதேவர்களுடைய விலங்குகள் கழன்ற கதைச் சுருக்கம்.

மதுராபுரியில் உக்ரஸேநன் என்றொரு அரசன் அரசாட்சி செய்துவந்தான். அவனுக்கு கம்ஸன் என்பானொரு புதல்வனுண்டு. அக்கம்ஸன் ஸாதுக்களான பெரியோர்களுக்குத் துன்பங்களையும் துஷ்டர்களுக்கு நன்மைகளையும் செய்துகொண்டு மிகவும் அதர்மம் நிறைந்த அஸுரனாய் விளங்கினான். அவன் தனது வலிமையினால் தனது தந்தையான உக்ரஸேநனையும் சிங்காசனத்திலிருந்து விலக்கி தானே அரசு புரிந்து வந்தான். பிறகு தனது ஸகோதரியான தேவகி விவாஹத்துக்குரிய வயதுள்ளவளாக, அவளை வஸுதேவருக்கு விவாஹம் செய்து கொடுத்து விவாஹம் முடிந்தபின் வஸுதேவரின் அரண்மனைக்கு தம்பதிகளை அழைத்துச் செல்ல விரும்பி சதுரங்க ஸேனைகள் பின்செல்ல உயர்ந்த ரதத்தில் அவர்களை அமர்த்தி தானே ஸாரதியாயமர்ந்து தேரை நடத்துங்கால், ஆகாயத்தில் பின்வருமாறு ஓர் அசரீரி வாக்கு உதித்தது. அதாவது "ஓ மூடனே! எவளிடத்தில் மிகுந்த அன்பினால் நீ இத்தேரை நடத்திச் செல்கிறாயோ அத்தேவகியின் எட்டாவது குழந்தை உன்னைக் கொல்லப்போகிறது" என்பதாம். அதைக் கேட்டு கம்ஸன் மிகுந்த கோபத்துடன், "எனது ஸகோதரி உயிர் தரித்தாலன்றோ இவள் பெற்ற மகன் என்னைக் கொல்லலாம்? இவளையே கொன்று விடுகிறேன்" என்று கத்தியை யுருவிச் செல்ல, வஸுதேவர் பல ஹிதோபதேசங்களைச் செய்து, கடைசியாக "இவளுக்குப் பிறந்த பிள்ளைகளை பிறந்தவுடனேயே உன்னிடம் கொணர்ந்து கொடுக்கிறேன். அவைகளைக் கொன்றுவிட்டால் உனக்கு பயமில்லை, இப்போது இவளை விட்டுவிடு" என்று சொல்லித் தனது பத்னியை மீட்டுக்கொண்டார். பிறகு கம்ஸன் தன் ஸஹோதரியான தேவகியையும் வஸுதேவரையும் சிறையிலடைத்து விலங்கிட்டு வைத்தான். வஸுதேவரும் பிறந்த குழந்தைகளை கம்ஸனிடம் கொடுத்து விட்டார். அவனும் அவைகளை பாறையில் மோதிக் கொன்று

விட்டான். இங்ஙனம் ஆறு குழந்தைகளைக் கொன்றான். பிறகு தேவகி ஏழாவது கர்ப்பம் தரிக்க, ஸ்ரீய: பதியான ஸர்வேச்வரன் தனது மாயையை ஏவி அத்தேவகியின் ஆறுமாத கர்ப்பத்தை இழுக்கும்படி செய்து வஸுதேவரின் மற்றொரு பத்னியான ரோஹிணீதேவியின் வயிற்றில் வைக்கும்படி செய்தான். ரோஹிணீ தேவியும் பிறகு ஆறுமாதம் அக்கருவைத் தாங்கி பலராமன் என்கிற குழந்தையை ஈன்றாள். தேவகியின் ஏழாவது கர்ப்பம் மறைந்து விட்டது என்றே கம்ஸனும் மற்றவர்களும் நினைத்தார்கள். பிறகு பகவான் தானே "பன்னிருதிங்கள் வயிற்றில் கொண்ட" என்றபடி தேவகி வயிற்றில் பனிரண்டு மாஸம் வஸித்து க்ருஷ்ணன் என்ற பெயருடன் அவதரித்தான். அப்பகவான் அவர்களுக்குப் புதல்வனாய்த் தோன்றியதும் கம்ஸனால் கட்டப்பட்ட விலங்குகள் அவர்கள் கால்களினின்றும் கழன்று விழுந்தன.)

நின்று நிலமங்கை நீரேற்று மூவடியால்
சென்று திசையளந்த செங்கண் மாற்கு—என்றும்
படையாழி புள்ளூர்தி பாம்பணையான் பாதம்
அடையாழி நெஞ்சே! யறி. (21)

| | | | |
|---|---|---|---|
| சென்று நின்று | (மாவலியின் வேள்வியில்) போய்நின்று | படை | ஆயுதம் |
| | | ஆழி | சக்கரம் |
| அம் கை | அழகான கையால் | ஊர்தி | வாஹனம் |
| நிலம் நீரேற்று | பூதான ஜலத்தைப் பெற்று | புள் | கருடன். |
| | | ஆழி | கம்பீரமான |
| மூவடியால் | மூன்று அடிகளால் | நெஞ்சே | மனமே! |
| திசையளந்த | உலகங்களை தன்னதாக்கிக்கொண்ட | அறி | இதை, தெரிந்து கொள் |
| செம் கண் மாற்கு | சிவந்த கண்களையுடைய ஸ்வாமிக்கு | பாம்பணையான் பாதம் | நாகணையான் திருவடியை |
| என்றும் | எப்போதும் | அடை | அடைந்திடுவாய் |

இப்படி எம்பெருமானுடைய ஸௌசீல்யம் ஸௌலப்யம், முதலிய குணங்களைச் சொல்லியபின், தன் உள்ளத்தை நோக்கி அவ்விஷயத்தை அநுபவிக்கப்பார், என்று ஏவுகிறார்.

நின்று நிலமங்கை உண்மையில் யாசிப்பவன்போல் வந்து மாவலியின்முன் நின்று தான ஜலத்தைப் பெற்று மூன்றடிகளால்

திசைகளிற்சென்று சிறிதிடமும் விடாமல் அளந்து, அதனால ஸந்தோஷித்து, அந்த ஸந்தோஷத்தால் சிவந்து மலர்ந்த கண்களையுடைய ஸ்வாமி யாரெனில் எப்பொழுதும் ஸுதர்சனாழ்வானைப் படையாகக் கொண்டவனும், பெரிய திருவடியை (கருடனை) வாஹனமாகக் கொண்டவனும் திருவனந்தாழ்வானைப் படுக்கையாகக் கொண்டவனுமான நாராயணன் தான். என் மனமே அவனுடைய திருவடிகளையே உபாயமாகக் கருதுவாய. என்று உபதேசிக்கிறார்.

ஆழிநெஞ்சே,கம்பீரமான மனமே. நான் சொலவதை நீயும் ஆலோசித்து அவனே பரமனென்று தேறித்தொழுவாய். நீ அவனிடம் சென்ற பின்னே தான் நான் நாவினால் அவன் திருநாமங்களைச் சொல்லி பிழைக்கவேண்டும். நீ முற்படச் சென்று தொழுவாய என்பதாம்.

அறியு முலகெல்லாம் யானேயுமல்லேன்
பொறிகொள் சிறையுவண மூர்ந்தாய்—வெறிகமழும்
காம்பேய் மென்றோளி கடைவெண்ணெயுண்டாயை
தாம்பே கொண்டார்த்த தழும்பு. (22)

| | | | |
|---|---|---|---|
| பொறிகொள் சிறை | பல வர்ணங்களையுடைய பக்ஷங்களையுடைய | உண்டாயை | களவினால் புசித்த உன்னை |
| உவணம் | கருடனை | தாம்பே கொண்டு | கயிற்றைக் கொண்டு |
| ஊர்ந்தாய் | நடத்துகிற ஸ்வாமியே | ஆர்த்த | கட்டியதால் உண்டான |
| காம்பு ஏய் | மூங்கிலுக்கொப்பான | தழும்பு | காய்ந்த வ்ரணத்தை |
| மென்றோளி | ம்ருதுவான தோள்களையுடைய யசோதை | யானேயும் அல்லேன் | நான் ஒருவன் மாத்திரம் அல்ல |
| கடை | கடைந்த | உலகெல்லாம் | உலகிலுள்ளாரனைவரும் |
| வெறிகமழும் | நறுமணம் வீசுகிற | அறியும் | அறிந்திருக்கிறார்கள் |
| வெண்ணெய் | வெண்ணெயை | | |

இப்பாட்டில் ஸர்வேச்வரன் தன்னையடைந்தவர்களுக்கு எளியனாகிறதுமன்றி நாடெங்குமறிய விதேயனாகவுமிருக்கிறான் என்கிறார்.

அறியும், பலநிறங்களுள்ள அழகியசிறகுகளையுடைய பக்ஷிராஜனை நடத்துகிறவனே! மூங்கில்போல பசுமைதங்கிய தோள்களையுடைய யசோதைப்பிராட்டி தன் கைகளின் மார்த்தவத்தையும் பாராமல் மிகுதியான சிரமத்துடன் கடைந்தெடுத்த வெண்ணெயை நீ களவால் வாரி விழுங்கியதைக்கண்டு குறுங்கயிற்றால் உன்னை உரலோடு கட்டினபெற்றிமையை உலகெல்லாம் அறிந்துகொண்டிருக்கிறதே! உன்னருளாலறிவு பெற்ற வெனக்குமாத்திரம் தானோ தெரியும்? உன்னுடைய பவ்யதையை விரோதிகளுமகப்பட வனைத்துலகுமறியாதோ! அப்பொழுது கட்டியதால் நேர்ந்த தழும்பு இன்னும் உன் திருவுதரத்தில் தோன்றுகிறதே! என்று அவனுடைய ஸௌலப்யத்தை விளக்கினார்.

நம் துயரங்களைத் தீர்க்கக்கருதி ஒருவனை அடைய விரும்பினால் அடையப்படுமவனுக்கு பரத்வமும் ஸௌலப்யமும் தேவையானவை. பரத்வமின்றி ஸௌலப்யமோ, அல்லது ஸௌலப்யமின்றி பரத்வமோ நமக்குப் பயன்படாது. இரண்டுமுள்ள புருஷனைத் தான் நாமடையவேண்டும். அவ்விரண்டு குணங்களும் திருமாலினிடம் பொதிந்து கிடக்கின்றனவென்கிறார். "நிறையுவண மூர்ந்தாய" என்பதால் பரத்வமும், "தாம்பேகொண்டார்த்த" என்பதால் ஸௌலப்யமும் விளக்கப்பட்டதாகும்.

**தழும்பிருந்த சார்ங்க நாண் தோய்ந்தவா மங்கை**
**தழும்பிருந்த தாள்சகடம் சாடி—தழும்பிருந்த**
**பூங்கோதையாள் வெருவப் பொன்பெயரோன் மார்பி**
**வீங்கோதவண்ணர் விரல். (23) [டந்த**

| | | | |
|---|---|---|---|
| வீங்கு ஓதம் வண்ணர் | பெருகுகிற அலைகளையுடைய கடல்போல நிறமுடைய பெருமானுடைய | தோய்ந்த | படிந்த |
| அம் கை | அழகிய கைகள் | தழும்பு | காய்ப்புடன் |
| சார்ங்கம் | சார்ங்கமென்னும் வில்லின் | இருந்த ஆம் | கூடியிருந்தது |
| நாண் | நாண்கயிறு | தாள் | திருவடி |
| | | சகடம் சாடி | சகடாஸுரனை உதைத்து |
| | | தழும்பிருந்த | (அதனால்) தழும்புடனிருந்த |

| | | | |
|---|---|---|---|
| விரல | கைவிரல்கள் | பொன்பெய ரோன் | இரணயாஸுரனு டைய |
| பூங்கோதை யாள் | அழகான கேசபாச த்தையுடைய பிரா ட்டி | மாாபு இடநத | மாாவை பிளநதத னுடைய |
| வெருவ | பயபபடுமபடியான (கோபததுடன) | தழுமபிருநத | தழுமபையுடைய வைகளாயிருநதன. |

ஓரவதாரத்தில் ஒரு சமயத்தில் நோந்த ஒரு செய்கையினுல் ஸர்வேச்வரன் ஸுலபனா என்று நிாணயம செயயலாகுமோ? என்று வினவ, பல அவதாரங்களில் பல தடவைகளில நேர்ந்த தழு மபுகளால் அவன் ஸௌலபயததைப பாக்கப் பேசுகிருா.

தழும்பிருநத—எமபெருமான் ஸ்ரீராமனுய அவதரித்து அர க்காகளை அழிககத் தன் சாாங்கமென்னும் வில்லில அமபுகளைத் தொடுத்துப போா புரியுங்கால் அச்சாாங்கவில்லின் நாண்கயிறருல் அடிபட்டு கைகள் தழுமபுடன் காணபபடுகினறன. பெரிய பிராட் டியாரை யணைக்குங்கைகள தழுமபால விளங்குகினறன. இதை யடியொறறியே ஸ்ரீ தேசிகனும் "ஆஜாநுலம்பிபிரலங்கிருத ஹேதி ஜாலை ஜ்யாகாதராஜிருசிரை ஜிதபாரிஜாதை: | என றும் காந்தோதாரைரய மிஹ புஜை: கங்கண ஜ்யாகிணங்கை | என்றும ஸ்தோத்திரங்களில் அருளிச் செய்தாா. கிருஷ்ணுவதாரத் தில் சகடாஸுானை வதைத்ததால் நோந்த காயம் திருவடிகளில விளங்குகிறது. நரஸிஹ்மனுய வந்து இறையுமகலகில்லாத் திருமக ளும் கூசும்படி ஹிரண்யகசிபுவுடன் போர் செய்கையில் நேர்ந்த வ்ரணங்கள் உன் கைவிரல்களில் தென்படுகின்றன. இபபடி அவதா ரங்கள தோறும் செய்த ரக்ஷண வியாபாரத்தால் அவன் திருவுட மபு முழுவதும் தழும்புகளுடன் தோன்றுவதால் அவன ஆச்ரிதப வ்யன் என்பதை அவ்வீசனுலும ஆக்ஷேபம செய்ய முடியாதென் கிருர்.

## சகட முதைத்த கதை.

நந்தகோபனுடைய இல்லத்தில் பகவான் கண்ணனென்னும் குழந்தையாய் வளருங்கால் ஒரு நாள யசோதை தனது கிருஹத் தில் ஒரு வண்டியின் கீழே தொட்டிலிட்டு அத்தொட்டிலில் கண் ணனை உறங்கும்படி செயது தான ஸ்நாநம் செயயச் சென்றவள

யில, கம்ஸனால் தூண்டப்பட்ட அஸுரன் ஒருவன் அவ்வண்டியில் பிரவேசித்து கண்ணன் உடம்பில் விழுந்து கொல்ல வேணுமென்று நினைக்க, அதை யறிந்த கண்ணன் குழந்தைகள் பாலுக்கு அழுவது போல் அழுது தன் காலகளை உதைத்துக்கொண்டார். அந்தவுதை அவ்வண்டியில் படவே அவவண்டி கீழேவிழ அதில் அநுப்ரவேசித்தவஸுரனும் கீழே விழுந்து மாணடான் என்பதாம்.

**விரலோடு வாய் தோய்ந்த வெண்ணெய் கண்டு, ஆய்ச்சி**
**உரலோடு றப்பிணித்த நான்று—குரலோவா**
**தேங்கி நினைந்தயலார் காண விருந்திலையே ?**
**ஓங்கோதவண்ணா ! வுரை.** (24)

| | | | |
|---|---|---|---|
| விரலோடு | கைவிரலகளோடு | நினைந்து | (மீணடும) அவ்வெணணெயையே நினைததுககொணடு |
| வாய | திருவதரததிலும | | |
| தோயநத | படிநதிருநத | | |
| வெணணெய | வெணணெயை | அயலாரகாண | பிறரெல்லாரும பாாககுமபடி |
| ஆயசசிகணடு | யசோதைபாாதது | இருநதிலையே | இருநதாயல்லவா' |
| உரலோடு உற | உரலோடு இறுககி | | |
| பிணிதத நான்று | கடடின ஸமயததில | ஓஙகு ஓதம வணணா | பெருகிககிடககிற கடலபோனற நிறம கொணடவனே |
| குரல | அழுகை | உரை' | உண்மையாகச சொல்லு. |
| ஓவாது | ஓயாமல | | |
| ஏங்கி | வருநதி | | |

இப்படி ஸர்வேச்வரனுடைய திருமேனியில் பக்தாகளுககு பவயனாய் இருக்கும் தன்மையை காண்பிக்கிற பல தழும்புகள காணப்படுகின்றன என்று சொல்லியபின், அவ்வீசன் அத்தழும்புகளை மறைக்க நினைத்த வளவில், அவனைக் கூப்பிட்டு நீ எவைகளை மறைத்தாலும யசோதையால் கட்டுண்டு கிடந்ததனால் உண்டான தழும்பை உன்னாலும் மறைக்க முடியாது, என்று சொல்லுகிறார் இபபாட்டில்.

விரலோடு-கடல போன்ற திருமேனியையுடைய கண்ணனே! யசோதைப் பிராட்டி நெடுங்காலம் கடைந்து எடுத்த வெண்ணையை களவு செய்து அமுது செயத உன்னை நேரில் பார்த்திருந்து உடனே உரலோடு சேர்த்துக் கட்டிய காலத்தில், ஓயாமல் அழுதுகொ

ண்டு ஏங்கி, மீண்டும வெண்ணையை எவவண்ணம் திருடுவதென்று நினைத்துக்கொண்டிருந்த உனது நிலைமையை, ஊரிலுள்ளாரெல்லாரும காணவிலலையா ; நீ உண்மையாகச் சொல்லு. இதை உனனால் மறைக்க முடியுமோ ? மறைத்தாயாகில நீ உரலை இழுத்துச் சென்று இரண்டு மருதமரங்களைச் சாயத்த உனது வீரச்செயல் எங்ஙனம் உண்மையாகும் ?

விரலோடு :—களவு செயத வெண்ணெய கையில சிறிதாகிலும தங்கியிருந்தால் யசோதை அறிந்துகொள்வளோ ! என்று அஞ்சி கைவிரல்களையும் தனது வாயில் பொகட்டுக்கொண்டு கையில சிறிதும் ஒட்டாதபடி வெண்ணெயை அமுது செயதான்.

உரலோடுற,—உரல வேறு கண்ணன் வேறு எனறு காணமுடியாதபடி பிணைத்துக் கட்டினுள்.

குரல் ஓவாது:—உடனே அக்குழநதை ஓயாமல் அழுதுகொண்டிருந்தது.

ஏங்கி :—அதன் பின் யசோதை இதோ இக்கோலைப் பார்த்தாயா ? அழுதால் மீளவும அடிப்பேன் எனறு சொலல அதறகு பயப்பட்டது போல ஏஙகியிருநதான

நினைந்து :—அந்த நிலைமையிலும மறுபடியும வெண்ணெயைத திருடும் மார்க்கத்தையே சிந்தித்திருந்தான்.

அயலாா காண:—இதற்கு முன் கிருஷ்ணன் எவர்களுக்கு துயரங்களை உண்டுபண்ணி யிருக்கிறுனே அவர்களெல்லோரும் யசோதை இவனை சிக்ஷிததது தகுதிதான் என்று மகிழ்ந்து வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தாரகள.

உரை:—இப்படி நீ ஒரு பெண்மணியால கட்டுண்டு அழுதது ஸர்வசக்தனுன உனக்குக் குறையாகாதோ சொல்லு ? என்கிறுர். இப்படி வினவியதால் அவனுடைய எளிமை நமக்கு விளக்கியதாயிறறு.

உரைமேற் கொண்டென் னுள்ள மோவாது, எப்போதும்
வரைமேல் மரதகமே போல—திரைமேல்
கிடந்தானைக் கீண்டானைக் கேழலாய்ப் பூமி
யிடந்தானை யேத்தி யெழும் (25)

| | | | |
|---|---|---|---|
| வரைமேல் | ஒரு மலையின்மேல் | பூமி இடந்தானை | பூமியைத் தூக்கினவனுமான பரமனை |
| மரதகமே போல | மரதகப் பச்சைமணிபோல | என உள்ளம | என்னுடைய மனஸானது |
| திரைமேல் | திருப்பாற்கடலின் மேல | ஓவாது | ஓயாமல் |
| கிடந்தானை | சயனித்தவனும | எப்போதும | எந்த சமயத்திலும |
| கீண்டானை | (ஹிரண்யாஸுரனை) பிளந்தவனும | மேல உரை கொண்டு | உயர்ந்த வாசகங்கள் கொண்டு |
| கேழலாய | வராஹமாய | ஏத்தி | துதிசெய்து |
| | | எழும. | உஜ்ஜீவிக்கும |

கீழ்ப்பாசுரத்தில் யசோதை கட்டிய ஸமயத்திலும் அவன் வெண்ணெயையே நினைத்துக் கொண்டிருந்தானென்பதை, தான் அநுஸந்தித்து, அவன் எப்படி பக்தர்களுடைய ஸம்பந்தம் பெற்ற வஸ்துவில் ஆசையுடனிருக்கிறானோ! அவ்வண்ணமே நாமும் அடைய வேண்டியவனான பரம புருஷனையே தியானிக்க வேண்டும் என்று நினைத்து, இப்பாட்டில் தன் அநுபவத்தை வெளியிடுகிறார்.

உரை மேல்:—ஒரு வெண்மையான மலையின் சிகரத்தில் மரகத மணி விளங்குவது போல் திருப்பாற்கடலில் பள்ளி கொண்டவனும், நரசிங்க உருவுடன் வந்து இரணியனைக் கிழித்தெறிந்தவனும், வராஹமாய் வந்து பூமியைக் கீண்டெடுத்தவனுமான நாராயணனை என்து மனம் உயர்ந்த சொற்களைக் கொண்டு துதி செய்து அதனால் நன்மையை யடைகிறது. இவ்வுலகில் மற்றெருவர் இவ்வரிய பாக்யத்தைப் பெற்றார்களோ? என்கிறார்.

உரைமேல் கொண்டு:—மனம் ஸர்வேச்வரனைச் சொல்லக் கூடிய திருநாமங்களை உதவியாகவைத்துக்கொண்டு அவனை ஸ்தோத்திரம் செய்கிறது என்றபடி. மேல்உரை கொண்டு என்று அந்வயமாகில் "பாலேய் தமிழர் இசைகாரர் பத்தர் பரவும் ஆயிரம்" என்பது போல் செந்தமிழ்க் கவிகளாலும் கான ரஸிகர்களாலும் பக்திமான்களாலும் கொண்டாடத் தகுந்த பெருமை வாய்ந்த கவிகளைக் கொண்டு ஸ்தோத்திரம் செய்கிறது என்றபடி.

கீண்டானை:—பிளந்தானை என்று பொருள். "தழும்பிருந்த"

என்கிற கீழ்ப்பாசுரத்தில் நரசிங்கனைச் சொல்லியிருப்பதால் இங்கு இரணியனைப்பிளந்தானென்று பொருள்கொள்க.

“கிடந்தானைக் கண்டானே” என்கிற இரண்டு பதங்களையும் சேர்த்துப் பார்த்தால், “திருப்பாற்கடலில் பள்ளிகொண்டு உறங்குங் காலத்திலும் பக்தர்களுடைய விரோதிகளை ஸம்ஹரிப்பதில் சிந்தை யுடனேயே இருக்கிற” என்கிற பொருள் கிடைக்கும். “திருவனந் தாழ்வானென்கிற படுக்கை படுக்கையாவதும் ஆர்த்தநாதம் செவிப்படு மளவில்” என்கிற ஸ்ரீ ஸூக்திகளால் இவ்வர்த்தம் தோன்றுகிறது.

கேழலாய் பூமியிடந்த கதை

ஹிரண்யாக்ஷனென்பானொரு கொடிய அஸுரன் தனது பராக்ரமத்தால் பூமியைப் பாயாகச் சுருட்டிக்கொண்டுபோய் பாதாளலோகத்தில் ஒளித்து வைத்தான். அப்பொழுது தேவர்களும் ருஷிகளும் எம்பெருமானிடம் சென்று அவ்வஸுரனுடைய கொடிய செயலால் வருந்தியதை விண்ணப்பஞ் செய்ய, பகவானும் பன்றியின் உருவத்தை எடுத்துக்கொண்டு மிகுந்த வேகத்துடன் கடலில் புகுந்துசென்று பாதாள லோகத்தை யடைந்து, ஹிரண்யகசிபுவின் ஸஹோதரனான அவ்வஸுரனை தனது கோரப்பற்களால் குத்திக்கொன்று விட்டு, அப்பூமியைத் தனது பற்களில் வைத்துக்கொண்டு கிளம்பி மறுபடியும் பூமியை முன்போல வைத்தருளினான்.

எழுவார் விடைகொள்வா ரீன்றுழாயானை
வழுவா வகை நினைந்து வைகல்—தொழுவார்
வினைச்சுடரை நந்துவிக்கும் வேங்கடமே, வானோர்
மனச் சுடரைத் தூண்டும் மலை. (26)

| | | | |
|---|---|---|---|
| எழுவார் | ஆசைப்பட்ட பொருள்கள் கிட்டியதும் பெருமானை விட்டுப்போகும் ஐச்வரியகாமர்கள் | ஈன் துழாயானை | அழகிய திருத்துழாயை யுடையவனை |
| | | வழுவாவகை நினைந்து | (ஒருசமயமும்) விடமுடியாத மார்க்கத்தை சிந்தித்து |
| விடை கொள்வார் | கைவல்யம் கிடைத்தபின்பு அநுமதி பெற்றுப் போகிற கேவலர்கள் | வைகல் | தினந்தோறும் |
| | | தொழுவார் | (ஸேவிக்கிற பகவத் காமர்கள் (இம்மூவர்களுடைய) |

| | | | |
|---|---|---|---|
| வினைச்சுடரை | பாபங்களாகிற அக்நியை | மனச்சுடரை | மனமென்கிற விளக்கை |
| நந்துவிக்கும | அணையும்படி செய்கிற | தூண்டும | தூண்டுகிற (ஜ்வலிக்கும்படி செய்கிற) |
| வேங்கடமே | திருவேங்கடமென்கிற மலையே | மலை. | பர்வதம |
| வானோர் | நித்யஸூரிகளுடைய | | |

கீழே பல அவதாரங்களைப் புகழ்ந்து பேசினார். இனி அவ்வவதாரங்களைப் பேசுவதைக் காட்டிலும் நமக்கு அநுபவிக்கும்படியான அவதாரத்தையே நாம் தேடுவோமென்று நினைத்தார். அவ்வவதாரம் அர்ச்சாவதாரமென்றே நினைத்து அவைகளுள் யாவருக்கும் அருள்புரிந்து நிற்கும் திருவேங்கடநாதனை இப்பாசுரத்தில் பேசுகிறார்.

எழுவார்.—மேன்மேலும் ஆசைப்படுகிறவர்கள் என்று பொருள். எழுந்து போகிறவர்கள் என்றும் பொருள் கொள்ளலாம். இவ்விருவகையாலும் ஐசுவர்யத்திற்காக பெருமாளைத் தொழுது அது கிடைத்தபின் பெருமாளை விட்டுச் செல்லுகிற ஐச்வர்யகாமர்கள் சொல்லப்பட்டார்கள்.

விடை கொள்வார்:—உத்தரவு பெற்றுக்கொண்டு போகிறவர்கள் என்று பொருள். பெருமாளைக் குறித்து நீ வேண்டாம் நாங்கள் ஜீவாத்மாவை அநுபவிக்க வேண்டும்; என்கிற எண்ணத்துடன் வணங்கி அவ்வநுபவம் கிடைத்த பின் பெருமாளிடம் உத்தரவு பெற்றுப் போகிற கைவல்ய காமர்கள் சொல்லப்பட்டார்கள்.

நன்றுழாயனை + தொழுவார்:—வேறு ஒரு பொருளையும் வேண்டாமல் பகவானையே வணங்குகிற மோக்ஷகாமர்கள் சொல்லப்பட்டார்கள்.

ஆகவே ஐச்வர்யத்தை விரும்புகிறவர்களுக்கும் கைவல்யார்த்திகளுக்கும் மோக்ஷத்தை விரும்புகிறவர்களுக்கும் பாபத்தை விலக்கி அநுக்ரஹம் செய்துகொண்டு ஈசன் நித்யவாஸம்செய்யும் திருவேங்கடமலையே, நித்ய ஸூரிகளுக்கு வியப்பை உண்டாக்குகிறது.

வினைச்சுடரை:—பாபங்களாகிற நெருப்பை அணைக்கிற திருவேங்கடம். ஐச்வர்யத்தை விரும்புகிறவர்களுக்கு ஐச்வர்யம் வரு

வதற்கு இடையூறாக இருக்கிற பாபங்களை நாசம் செய்கிறது. கைவல்யார்த்திகளுக்கு ஜீவாத்மாவை அனுபவிக்க இடையூறாக இருக்கும் பாபங்களைப் போக்குகிறது மோக்ஷத்தை விரும்புகிறவர்களுக்கு மோக்ஷவிரோதியான பாபங்களை போக்குகிறது என்கிறார். இந்த அதிகாரிகளுடைய பாபங்களைப் போக்குவதற்கு திருவேங்கடமென்கிற மலையே போதும். அதில் வாசம் செய்யும் பகவானுடைய உதவியும் வேண்டாமென்பது பொருள். இத்தால் ஸர்வேச்வரனைக் காட்டிலும் அவனுக்குப் பிரியமான வஸ்துக்களே நமக்குப் ப்ராப்யம் என்பதாயிற்று.

பாபங்களாகிற விளக்கை அணைக்கும் திருவேங்கடம் நித்ய ஸூரிகளுடைய மனமாகிற விளக்கை தூண்டி எரியச்செய்கிறது. நித்ய ஸூரிகளும் திருவேங்கடத்தில் பகவானை ஸேவித்து இங்குள்ள சீர்மையை நினைத்து மிகுந்த ஆச்சர்யத்தை அடைகிறார்கள் என்பது தீர்ந்தபொருள்.

**மலையால் குடைகவித்து மாவாய் பிளந்து**
**சிலையால் மராமரமேழ் செற்று—கொலையானைப்**
**போர்க்கோ டொசித்தனவும் பூங்குருந்தம்சாய்த்தனவும்**
**கார்க்கோடு பற்றி யான் கை. (27)**

| | |
|---|---|
| மலையால் | கோவர்த்தன பர்வதத்தை |
| குடைகவித்து | குடையாகத்தரித்தும் |
| மாவாய்பிளந்து | குதிரைவடிவுடன் வந்தகேசியினுடைய வாயைக்கிழித்தும் |
| சிலையால் | வில்லால் |
| மராமரம் ஏழ் செற்று | ஏழு ஸாலமரங்களை நசித்துப் பொகட்டும் |
| கொலையானை | அயலாரைக்கொலை செய்கிற குவலயாபீடமென்னும் யானையின் |
| போர் | சண்டைக்கு கருவியான |
| கோடு | தந்தங்களை |
| ஒசித்தனவும் | முறித்தனவும் |
| பூ குருந்தம் | புஷ்பித்த குருக்கத்தி மரத்தை |
| சாய்த்தனவும் | கீழே விழும்படி செய்தனவும் (எவையெனில்) |
| கார்கோடு | மேகம்போல சப்தத்தையுடைய சங்கை |
| பற்றியான் கை | ஏந்துகிறவனுடைய திருக்கைகள். |

கீழ்ப்பாசுரத்தில் திருவேங்கடமலையே நம் வினைகளைப் போக்கு மென்று சொல்லி இப்பாட்டில் அம்மலையில் நித்யவாஸம் செய்யும் ஸ்ரீநிவாஸனை ஸேவித்து அவருடைய திருக்கைகளின் ஸௌந்தர்யத்தில் ஈடுபட்டு அக்கைகள் செய்த அரிய செயல்களைக் கொண்டாடுகிறார்.

மலையால்—இந்திரன், கோவர்த்தன மலைக்கு இட்ட விருந்தைப் பொறுக்காமல் மழையினால் திருவாய்ப்பாடியைத் துன்புறுத்திய அளவில், அம்மழையில் நின்றும் காப்பதற்காக கோவர்த்தன மலையைக் குடையாகத் தூக்கினான்.

மாவாய்.—கம்ஸனால் ஏவப்பட்டுவந்த கேசி என்னும் அஸுரனை வாயைப்பிளந்து கொன்றான்.

சிலையால—முன்பு ராமாவதாரத்தில் ஸுக்ரீவனுக்கு நம்பிக்கை உண்டுபண்ணுவதற்காக ஏழு ஸாலவிருக்ஷங்களையும் செற்றான். "கொலையானை" குவலயாபீடமென்னும் யானையை, அதன் தந்தங்களைப் பிடுங்கியே அடித்துக் கொன்றான். "பூங்குருந்தம்" நன்றாகப்பூத்துச் செழித்து வளர்ந்திருந்த குருந்த மரத்தை கைகளால் வலியப் பிடித்து இழுத்து சாய்த்துத் தள்ளினான். இப்படி ராம கிருஷ்ணாத்யவதாரங்களைச் செய்த வாஸுதேவன் திருவேங்கட மலையில் யாவருக்கும் அருள்புரிய நின்றுகொண்டிருக்கிறான். என்பது கருத்து.

கார்க்கோடு:—கீழ்ச்சொல்லிய செயல்களை யெல்லாம் திருவேங்கடமுடையானுடைய திருக்கையே மற்றொருவரின் உதவியின்றி செய்தது என்பதாம். அக்கை மேகம்போல் முழங்கும் சப்தத்தோடு கூடிய பாஞ்சஜன்யத்தை எப்பொழுதும் தரித்துக் கொண்டிருக்கிறது. இந்த அடைமொழியால் கீழ்ச்சொல்லிய காரியங்களை யெல்லாம் அவனுடைய இடதுகையே செய்ததென்று தோன்றுகிறது. ஆதலால் இப்பெரிய காரியங்களெல்லாம் இடதுகையால் செய்யப்படுமவை போல் சிறிதும் சிரமமின்றி செய்யப்பட்டன என்பது விளங்கும்.

கார்க்கோடு:—கறுத்த மேகத்தின் நடுவே சங்கம் பதிந்தாற் போல் அவன் திருமேனியில் பாஞ்சஜன்யத்தின் அழகு அநுபவிக்கப்பட்டது என்றும் சொல்லலாம்.

கேசி:—கேசி முதலான தனனை எதிரதது வநதவாகளை அழித்தும, இநதிரனை மாததிரம ஹிமசை செயயாமல அவன் செய்த துன்பததிலிருந்து தனனையும தன்னைச சோந்தவாகளையும ரக்ஷித்துக்கொண்டான்.

இநதிரனை மாததிரம அடிககாமல இருநததறகுக் காரணம் அவன தெயவப் பரக்ருதி என று நினைத்தே. தெயவப்பரக்ருதியாக விருநதால எனறேனும ஒருநாள பகவத பகதி உணடாகிவிடும். ஆஸுரப பரகருதி எபபொழுதும் தெயவமிலலை யெனபாளுதலால அவனை அழிததே திரவேண்டும

மலையால் குடைகவித்தது

திருவாயபபாடியில இடையர்கள் வழககமாய இந்திரனுக்குச் செய்யும விருநதை கிருஷ்ணன நிறுத்திவிட்டு அவ்விருந்தை பசுக்களை செழிதத புறகளால ரக்ஷிககும கோவாததனமலைக்குப் படைககும்படி செயதான். அதனால மிகுநத கோபங்கொண்ட தேவேந்திரன ஏழு காளமேகஙகளையும மழை பெயயுமபடி செயது திருவாயபபாடியை அழிக்க நினைத்தான. அம்மழையால் இடையர்களும பசுக்களும் கன றுகளும் மிகுநத கஷ்டங்களையடைய கண்ணபிரான அந்த கோவாததனமலையைத் தனது கையால தூக்கி குடையாகபபிடித்து அததிருவாயப்பாடியில ஒரு சிறு திவலைகூட விழாமல காத்தருளினன்.

மாவாயபிளநத வரலாறு.

கம்ஸனால் தூண்டபபட்ட கேசி என்னும் அஸுரன் கிருஷ்ணனைக் கொலவதற்காக குதிரை வடிவத்துடன் அவனை விழுங்கச்சென்றான. கிருஷ்ணனும் குழந்தைகள சிறியபொந்துகளில் கையைவிட்டு விளையாடுவதுபோல் அக்குதிரையின்வாயில கையை நுழைத்து இருபிளவாகக் கிழித்து அவ்வஸுரனைக் கொன்றான்.

சிலையால் மராமரம் எய்செற்றது.

ஸ்ரீ ராமபிரான் ஸுக்ரீவனுக்கு வாலியைக் கொன்றுவிடுவதாக சபதம் கூறியபினபும், ஸுக்ரீவன் வாலியின் வலிமையை நினைந்து நம்பிக்கையினறியிருக்க அதையறிந்த ராமபிரான் உனக்குநம்பிக்கை யுண்டாகும்படியாக ஏதேனும் ஒரு காரியத்தை ஏவுவாய் என்று

*சொல்ல, அவனும் ஸமீபத்தில் கிடந்த துந்துபி என்ற அஸுரனுடைய எலும்பை தூக்கி எறியும்படி ஏவினன். ராமனும் தனது இடதுகாலின் கட்டைவிரலால அதை வெகுதூரம தூக்கியெறிய அதிலும நம்பிக்கையின்றி ஏழு ஸாலவிருக்ஷங்களையும் ஒரே பாணத்தால் அடிததால் நீ வாலியைக் கொலல ஸமர்த்தன் என்று சொல்ல அவ்வண்ணமே தனது வில்லில ஓர அம்பைத் தொடுத்து அவ்வேழு மரங்களையும் ஒரு நொடிபபொழுதில துளைத்தான. அதைக் கண்டு ஸுகரீவனும் பெருமகிழ்ச்சியை யடைநதான*

### பூங்குருநதம் சாயத்தது.

*கிருஷ்ணன் வழக்கமாய புஷ்பம் பறிக்க தினந்தோறும் ஏறும் ஓர குருந்தமரத்தில் ஓர அஸுரன தங்கியிருந்து அக்கிருஷ்ணனைக் கொல்ல நினைத்திருக்கையில் அதையறிந்த பகவான் செழித்திருந்த அம்மரத்தை கைகளால சாய்ததுக் கீழே தளளினன். அப்பொழுது அதிலிருந்த அஸுரனும் மாண்டான.*

**கைய வலம்புரியும் நேமியும், கார்வண்ணத்**
**தைய மலர்மகள் நின்னாகத்தாள்—செய்ய**
**மறையான் நின்னுந்தியான் மாமதிள் மூன்றெய்த**
**இறையான் நின்னாகத்திறை.** (28)

| | |
|---|---|
| கார்வண்ணதது | மேகமபோன்ற நிறதடையுடைய |
| ஐய | ஸ்வாமியே! |
| வலம்புரியும் | பாஞ்சஜன்யமும் |
| நேமியும் | சககரமும் |
| கைய | உன்கையில் குடிகொண்டன |
| மலர் மகள் | பூவில்பிறந்த திருமகள் |
| நின் ஆகததாள் | உன் மாாபிலிருககிறாள் |
| செய்ய மறையான் | குற்றமற்றவேதத்தையுடைய நானமுகன் |
| நின உநதியான் | உன் நாபியிலுள்ளான் |
| மாமதிள் மூன்று எய்த | பெரிய மதிள்களுடன் கூடின மூன்று நகரங்களை அடிதத |
| இறையான | பரமசிவன் |
| நின் ஆகதது | உனஉடம்பில் |
| இறை. | ஒரு பாகத்தில்வஸிக்கிறான். |

கையவலம்புரியும்:—அந்த ஸர்வேச்வரனுடைய ஐச்வர்யத்தின் பெருமையைப் பேசுகிறார். மேகம்போன்ற குளிர்ந்த திருமேனியையுடைய ஸ்வாமியே! ஸ்ரீபாஞ்சஜன்ய ஆழ்வானும் ஸுதர்சனாழ்வானும் உனது கைகளில் வஸிக்கிறார்கள். பூவில் பிறந்த பெரியபிராட்டியார் உன்னுடைய திருமார்பிலே குடிகொண்டிருக்கிறாள். நீ பரதேவதையென்று சொல்லுகிற வேதங்களை தனதாகக்கொண்ட பிரமன் உன்நாபியின்கமலத்தில் வஸித்துக்கொண்டிருக்கிறான். திரிபுராஸுர ஸம்ஹாரம் செய்த ஈச்வரனென்று எல்லாராலும் கொண்டாடப்பட்டிருக்கிற ருத்ரன உன்னுடைய திருமேனியின் ஒருபாகத்தில் இருக்கிறான். உன் ஐச்வர்யத்தின் பெருமை இங்ஙனம் விளங்குகிறது.

கையவலம்புரியும்:—அவன தரித்த சங்கு சக்கரங்களே அவன பரதேவதை என்று காட்டுகின்றன.

மலர்மகள்:—எவருடைய அனுக்ரஹத்தால பிரஹ்ம இந்த்ராதி ஸ்தானங்களளவான ஐச்வர்யங்களெல்லாம் ஒரு நீசனான ஜீவனுக்கும் எளிதில் கிடைக்கின்றனவோ! அந்த பிராட்டியே உன்னைவிட்டுப்பிரியேனென்று உன உடம்பிலே கோயிலகொண்டிருக்கிறாள்.

மறையான்:—ஸிருஷ்டி கர்த்தாவான சதுர்முகன் உன் நாபியில் குடிகொண்டிருக்கிறான்.

மாமதிள்:—திரிபுராஸுரனைக் கொன்றதால் ஈசனென்று பெயர்படைத்த ருத்ரனும் உன் உடம்பில் இருக்கிறான். இப்படி பிரஹ்ம ருத்ராதிகளே உன் உடம்பைப்பற்றிக் கிடக்கின்றனரென்றால உன்னுடைய பெருமை எவ்வளவு மேலானது! என்று திருவேங்கடநாதனுடைய ஐச்வர்யத்தில் கண்வைத்துப்பேசினார்.

## மாமதிள் மூன்றெய்த இறையான் கதை.

சிவபெருமானுடைய புதல்வனான ஸுப்ரமணிய ஸ்வாமியால் கொல்லப்பட்ட தாரகாஸுரனுக்கு மூன்று பிள்ளைகள் இருந்தார்கள். அவர்கள் வித்யுந்மாலி, தாரகாக்ஷன், கமலாக்ஷன், என வழங்கப்படுவார்கள். அம்மூவரும் நான்முகக்கடவுளைக் குறித்து அரும்பெருந் தவம் செய்து அதனால் திருப்தியடைந்த நான்முகனிடமி

ருந்து பலவரங்களை வேண்டிப்பெற்று, ஆகாயத்தில் பறக்கும் வலிமைபொருந்திய மூன்று பட்டினங்களைப் பெற்றார்கள். அம்மூவரும் அந்தப்புரங்களுடன் பறந்துசென்று நினைத்தவிடங்களில் உட்கார்ந்துகொண்டிருந்தார்கள். அதனால் பலபிரஜைகள் அழிந்துபோயின. இங்ஙனம் அம்மூவரும் இவ்வுலகத்தையே அழித்துக்கொண்டுவருங்கால் தேவர்களும் ரிஷிகளும் ருத்ரனை வணங்கி இக்கொடிய செயலைத்தெரிவிக்க ருத்ரனும் அவ்வசுரர்களைக்கொல்ல முயன்று, தனக்கு, பூமியைத்தேராகவும், சந்திரஸூர்யர்களை ரதத்தின் சக்கரங்களாகவும் வேதங்களைக் குதிரைகளாகவும் பிரமதேவனைத் தேர்ப்பாகனாகவும் மேருபர்வதத்தை வில்லாகவும் ஆதிசேஷனை நாணாகவும் விஷ்ணுவை அம்பாகவும் காற்றை அம்பின் சிறகுகளாக அக்னியை அம்பின் நுனியாகவும் அமைத்துக்கொண்டு யுத்தம் செய்யச்சென்று யுத்தாரம்பத்தில் அட்டஹாஸம் செய்தார். அந்தஹாஸத்திலிருந்து நெருப்புக்கிளம்பி அம்மூன்று அசுரர்களையும் எரித்துக்கொன்றது.

இறையும் நிலனு மிருவிசும்பும் காற்றும்
அறைபுனலும் செந்தியுமாவான்—பிறைமருப்பின்
பைங்கண்மால் யானைப் படுதுயரங்காத்தளித்த
செங்கண்மால் கண்டாய் தெளி. (29)

| | | | |
|---|---|---|---|
| இறையும் | பரமபதநாதனும் | மாலயானை | கைங்கரியத்தில் ஆசையுள்ளதுமான கஜேந்திரனை |
| நிலனும் | பூமியும் | படுதுயரம் | அனுபவிக்கப்படுகிற துக்கத்தினின்றும் |
| இருவிசும்பும் | அகலமான ஆகாசமும் | காத்து அளித்த | ரக்ஷித்து கிருபை செய்த |
| காற்றும் | வாயுவும் | செங்கண் மால்கண்டாய் | சிவந்தகண்களையுடைய ஸ்ரிய:பதியல்லவா? |
| அறைபுனலும் | சப்திக்கிற ஜலமும் | தெளி. | இதை அறிந்துகொள். |
| செந்தீயும் | சிவந்தநெருப்பையும் | | |
| ஆவான் | பிரகாரமாகவுடைய பெருமான் (லீலாவிபூதிநாதனுமானவன்) | | |
| பிறை | சந்திரகலைபோன்ற | | |
| மருப்பின் | கொம்புகளையுடையதும் | | |
| பைங்கண் | அழகிய கண்களையுடையதும் | | |

அவனுடைய ஐச்வர்யத்தைக்கண்டு நாம் அவனிடம் எப்படிக் கிட்டுவதென்று பயப்படவேண்டாம். அவன் தன்னிடத்தில் அன்புள்ளவர்களிடம் ஆசையுடன் அவர்களின் துயரங்களைப்போக்கி காப்பதே ஸ்வபாவமாகக்கொண்டிருக்கிறான். ஆதலால் யாவரும் அவனை அணுகலாமென்கிறார்.

இறையும்:—ஸமஸ்தலோகங்களுக்கும் நாதனாகத்தோன்றும பரமபதநாதனும் பஞ்சபூதங்களடங்கிய இந்த லீலாவிபூதிக்கும் நாதனுயும் இருக்கிற ஸர்வேச்வரன், சந்திரகலைபோல் வெண்மையான பறகளையுடையவரான ஸாவேச்வரனிட த்தில் மிகுந்த ஆவல்கொண்ட கஜேந்திராழ்வானுடைய துயரத்தைப் போக்கினவன். எனறு உபதேசிக்கிறார்.

பைங்கண்மால்யானை—யானைகளுககு எவ்வளவு பரிமாணம் கண் இருக்கவேண்டுமோ அந்த அளவுள்ள கண்களையுடைய யானை என்றபடி. ஸர்வேச்வானிடத்தில மிகுந்த பக்தியையுடையது. அந்த யானைககாக பரமபதத்திலிருந்து வரும்பொழுதே தனது திருக்கண்களால் அதை குளிரக் கடாக்ஷித்துக்கொண்டு வந்தார் எனபது செங்கண்மால என்கிற பதத்தால் விளங்கும. ஒரு திாயகஜாதிக்கு அவன் நெடுந்தூரத்திலிருந்து வநது அருள்புரிந்தானென்றால நாம் ஏன் அவனை அணுகக்கூசவேண்டும் என்பது கருத்து.

இறையும்:—இந்த பதததால் நித்யவிபூதி நாதனை நாராயணன் சொல்லப்படுகிறான்.

நிலனும் + தீயுமாவான்:—இப்பதங்களால் பஞ்சபூதங்களடங்கிய லீலாவிபூதிநாதன் சொல்லபபடுகிறான். ஆக உபயவிபூதிக்கும் நாதனை ஸர்வேச்வரன் இந் நிலத்தில் வந்து முதலையின் வாயிலகப்பட்ட யானையைக் காத்தருளினனென்பது பொருள். முன்னடிகளால் அவனது மேன்மையும் பின்னடிகளால் நீர்மையும் சொலலப்படுகின்றன.

**தெளிதாக வுள்ளத்தைச் செந்நிறீஇ, ஞானத்**
**தெளிதாக நன்குணர்வார் சிந்தை—எளிதாகத்**
**தாய்நாடு கன்றேபோல் தண்டுழாயானடிக்கே,**
**போய் நாடிக்கொள்ளும் புரிந்து. (30)**

| | | | |
|---|---|---|---|
| தெளிது ஆக | பஞ்சேந்திரியங்களால கலங்குதலின்றி தெளிந்திருக்கும்படி | தாயநாடு கன்றேபோல | தன் தாயைத்தேடிச் செல்லும கன்றுக் குட்டியைப்போல |
| உள்ளத்தை | மனத்தை | தண் துழையான் | குளிர்ந்த திருத்துழாயையுடைய ஸர்வேசவரனுடைய |
| செம நிறீஇ | நன்றாக நிறுத்தி | | |
| ஞானம | அறிவினல் | அடிக்கே | திருப்பாதங்களையே |
| தெளிதாக | ஸ்வரூபஜ்ஞான முண்டாகும்படி | புரிந்து | ஆசைப்பட்டு |
| நன்கு | செவ்வனே | போய் | சென்று |
| உணராவார் | அறிபவர்களுடைய | நாடிக்கொள்ளும. | தேடிக் கிட்டும, |
| சிந்தை | மனமானது | | |
| எளிதாக | துக்கமின்றி | | |

இப்படி பரமாத்மா யாவர்க்கும் எளியனுயிருக்க, உலகில் மனிதர்களுக்கு அவனிடம் ஏன் மனம் செல்லவில்லை? ஸம்ஸாரிகளான பிரபுக்களையே நாடிச் செல்கிருர்களேயென்று சிலர் ஆழ்வாரைக் கேட்க அதற்கு பதிலுரைக்கிருர் போலுமிப்பாட்டில்.

**தெளிதாக:**—தன் மனத்தை வெளியில் செல்லவொட்டாமல் செவ்வனே அடக்கி தனது புத்தியால் ஜீவாத்மாக்கள் அவ்வீசனுக்கு சேஷபூதர்கள் (அடிமைகள்) அவன் சேஷி (எஜமானன்) என்று நிர்ணயம்செய்து பரமாத்மாவை அறிந்தவர்களுடைய மனம்தான் திருத்துழாயை அணிந்தபரமபுருஷனுடைய திருவடிளை நாடிச்சேரும். மற்றவர்களுடைய மனம் அவ்வீசன்திருவடியை அணுகாது, எப்படி ஒரு பசுக்கூட்டத்தின் நடுவே ஒரு கன்றை நிறுத்தினல அக்கன்று பல பசுக்கள் அங்கு இருந்தபோதிலும் தன் தாயையேநாடிச்சென்று தன் தாயின் அருகே நிற்கிறதோ! அப்படி பரமாத்மாவை அறிந்தவர்களின்மனம், கன்றுபோல் மற்ற ஜீவர்களிடம் செல்லாமல் எம்பெருமானைத் தானகவே நாடிச்செல்லும்.

ஒரு கன்று மற்றபசுக்களைக் கண்ணெடுத்துப் பார்க்காமல் தனது தாயை நாடுவதற்கு காரணம், தன் தாய்க்கும் தனக்குமுள்ள ஸம்பந்தத்தையே நினைத்திருப்பதுதான், அதுபோல் பரமாத்மாவுக்கும் நமக்குமுள்ள ஸமபந்தத்தை நாம் நன்கு தெரிந்துகொண்

டால் அப்பகவானை ஆச்ரயிக்குமபடி நமக்கு புத்தி உண்டாகும் ஆதலால், சேஷத்வமாகிற ஸம்பந்தத்தை முந்துறத்தெரிந்துகொள்ள வேண்டுமென்பதாயிற்று.

புரியொரு கைபற்றியோர் பொன்னாழியேந்தி
அரியுருவு மாளுருவுமாகி—எரியுருவ
வண்ணத்தான் மார்பிடந்த மாலடியை யல்லால், மற்
றெண்ணத்தானுமோ விமை. (31)

| | |
|---|---|
| ஒருகை | ஒருகையில் |
| புரி பற்றி | சங்கத்தைப்பிடித்து |
| ஓர்பொன் ஆழி | விலக்ஷணமான அழகிய சக்ரத்தை |
| ஏந்தி | (மற்றொருகையில்) பிடித்து |
| அரிஉருவம் | சிங்கவடிவும் |
| ஆளுருவும் ஆகி | மானிட வடிவமுமாகி |
| எரிஉருவம் | அக்நியின் நிறம் போல் |
| வண்ணத்தான் | நிறத்தையுடைய ஹிரணயனுடைய |
| மார்பு | மார்பை |
| இடந்த | நகங்களால் பிளந்த |
| மால் | ஸ்வாமியினுடைய |
| அடியை அல்லால் | திருவடிகளையன்றி |
| மற்று | மற்றொரு பொருளை |
| இமை | ஒரு க்ஷணகாலத்திலாவது |
| எண்ணத்தான் ஆமோ | நினைக்கலாமோ? |

இப்படி வினவ வந்தவர்களுக்கு விடை கூறிவிட்டு கீழேஅருளிச்செய்த ஸர்வேச்வரனுடைய கஜேந்திர ரக்ஷண வியாபாரத்தை அநுஸந்தித்து, அப்பரமனுடைய ஆச்ரித பாரதந்திரியத்தைப் பேசுகிறார்.

புரியோருகை:—சங்க சக்ரங்களை இருகைகளிலும் தரித்து நாங்கலந்த சிங்கமாய்த் தோன்றி அக்நியின் நிறம் போன்ற நிறத்தையுடைய ஹிரண்யகசிபுவின் மார்பைப் பிளந்த ப்ரஹ்லாதனிடம் பேரன்பு கொண்ட திருமாலை விட்டு மற்றொரு பொருளை ஒரு நொடிப்பொழுதாவது நினைக்கலாகுமோ? நினைப்பதுதான் தகுமோ? என்கிறார்

புரி·—என்பது வலம்புரி என்ற பதத்தின் ஏகதேசம். வலமாகச் சுற்றிய சுழலையுடைய சங்கத்தைச் சொல்கிறது.

ஹிரண்யனை நகங்களாலேயே பிளந்து விட்டபடியால திவ்யாயுதங்கள அழகுககாக அணிநது கொளளப்பட்டிருந்தன.

எரியுருவ:—நெருப்புப் போல ஒருவராலும் கிட்டமுடியாத படியான பராகரமத்தையுடைய ஹிரண்யன

மால்:—பிரஹ்லாதனிடமுள்ள வாதஸல்யத்தால ஹிரணியனை ப்பிளந்தான்

இமை.—ஒரு க்ஷணகாலம கூட, மறறொரு வஸ்துவை நினைக்கக் கூடாதெனபதாம "யதாஹ்யேவைஷ ஏதஸ்மிந்நுதர மந்தரம் குருதே அத தஸ்ய பயம பவதி" எனகிற சுருதி வாக்யததை உணாக.

இமை-வினை முறறுகக்கொளளில் (இதை ஆலோசித்துப் பார!) எனறு பொருள- தனது நெஞ்சைக் குறித்துச் சொல்கிறரென்று கொளக.

**இமையாத கண்ணு லிருளகல நோக்கி**
**அமையாப் பொறிபுலன்க ளைந்தும்—நமையாமல்**
**ஆகத் தணைப்பா ரணைவரே, ஆயிரவாய்**
**நாகத் தணையான் நகர்.** (32)

| | | | |
|---|---|---|---|
| இமையாத | அறிவினல் குறைவில்லாத | ஆகத்து அணைப்பார் | (மாதர்களை) மாரில்தழுவிக்கிடப்பவாகள் |
| கணணல் | உட்கண்ணல் | ஆயிரவாய் | ஆயிரமமுகங்கொணட |
| இருள் அகல | இருள் (அஜ்ஞானம) விலகுமபடி | நாகதது | சேஷனை |
| நோககி | ஜீவபரஸவரூபங்களைககணடு | அணையான | படுகைகையாகவுடைய பரமபுருஷனுடைய |
| அமையா | அடஙகாத | | |
| பொறி புலனகள் ஐநதும | ஐந்து இந்திரியங்களையுமசப்தாதிவிஷயங்களைநதினையும | நகர் | வாஸஸதானத்தை (பரமபததததை) |
| நமையாமல் | அடககாமல் | அணைவரோ? | அடைவாகளோ? |

கீழ்ப்பாசுரத்தில ஈச்வரனைத தவிர மறறவிஷயங்களை ஒரு நொடிபபொழுதாவது நினைக்கலாமோ? என்றா. இபபாசுரத்தில அங்ஙனம மறறவிஷயங்களை நாடுகிறவர்கள். ஸாவவித கைங்கரியங்

களையும் செய்யயோக்யமான நிலமாகிய பரமபதத்தை அடைகிற தில்லை என்கிறார்.

இமையாத — நலலறிவுடன கூடின மனமென்றும உட்கண்ணால அஜ்ஞானமாகிறவிருளை நீக்கி ஜீவாதமாவின தனமைகளையும் ஈசவரனுடைய தனமைகளையும் உள்ளபடி அறியாமலும், புறமபே செலகிற ஐம்புலன்களை அடக்காமலும காமபுருஷார்த்ததிலீடுபட்டு மாதாகளை அணைத்துத்திரிபவாகள், நாகத்தணைவான நகரமான ஸ்ரீவைகுண்டத்தை எபபடி அடைவார்கள் ? என்று வினவுகிறா. பரமபததையடைய ஸாதனமாகச சொலலபபட்ட பக்தியோகாதிகள இல்லாததுடன விபரீதஸாதனங்களையும பூரணமாகப் பெற்றவாகள பரமபுருஷாாத்ததை அடையாமல இநத பிரகிருதியிலே ஸஞ்சரிபபாாகள எனறபடி.

இபபாசுரததில, "ஆகத்தணைபபாா" எனகிற பதததிறகு சரீரததில அணைத்துக்கொளகிறவாகள எனறு பொருள இஙகு செயபபடுபொருள சொலலபபடவிலலை. ஆதலால ஸதிரீகளை என்கிற பதததைச் சோத்துககொளளவேணடும.

அணைவரே.—எனகிற பதததின் இறுதியிலுளள ஏ எனபதறகு எதிரிடைபபொருள கொண்டு அணைவரோ எனறும அாததம கொளக. இஙஙனம பொருள கூறினால மாதாகளை அணைத்துததிரிபவா பரமபததையடைவரோ ? எனறு கீழசசொலலிய தாதபாயம் விளஙகும்.

இங்கு வேறு விதமாகபபொருளுரைபபாருமுணடு அதாவது உலகில கர்மபாவகா எனறும ப்ரஹ்மபாவகா என்றும உபயபாவகா எனறும் மூவகைப்பட்ட அதிகாரிகள் உண்டு. தெயவத்தை நினையாமல் கருமங்களையே செய்துகொண்டிருபபவா கா்மபாவகா, தெய்வததையே நினைததுககொண்டிருபபவா ப்ரஹ்மபாவகா. சில ஸமயஙகளில ஸம்ஸாரததிறகு வேண்டிய காரியங்களைச் செயது கொண்டும் சிலஸமயங்களில தெயவத்தைச் சிந்திததுக்கொண்டும் இரு விதமாகப போதுபோக்குகிறவர்கள் உபயபாவகா. இப்பாட்டில இம்மூனறுவது அதிகாரி சொலலபபடுகிறா முனனடிகளால் காமபாவனையுள்ளவாகள் என்பது விளங்கும்.

ஆகத்தணைபபார:—என்றவிடத்தில் பரமபுருஷனை என்கிற பதததை சேர்த்துக்கொண்டு பரமபுருஷனை மார்பில் தரிப்பவர்கள் என்று ப்ரஹ்மபாவனை சொல்லப்படுகிறது ஆகமூன்றடிகளால் உப யபாவநர் என்ற அதிகாரி சொல்லபபட்டார்.

ஆகவே ஸம்ஸார சிந்தையும் ஈச்வரசிந்தையுமாயிருப்பவாகள் பரமபதத்தை அடைவாாகளோ? "கடையறபபாசஙகள விடட பின்னையன்றியவனவைகாண்கொடானே" "போகம் நீயெய்தி பின னும் நம்மிடைக்கே போதுவாய் என்ற பொன்னருள" எனகிற மற் றையவாகளின் பாசுரப்படி, பிரகிருதியிலும் ஆசையைவிடாமல் ஈச் வரனையும் இடையே நினைத்திருபபவர்கள பரமபததததை சேருகிற தில்லை என்று.

மறறும சிலர் அணைவரே என்பதறகு அடைவர்கள என்றே பொருளகூறி, இந்திரியஜயம் செயயாவிடினும் ஸாவேச்வரன பரம கிருபையால் மேல் விழுநதால் அவனை விலக்காமல் "மாாவமென் பதோா கோயிலமைத்து மாதவனென்னும் தேயவத்தை நாட்டி" என்றபடி மாாபிலே தரித்துக்துதித்தால நாகததணையான் நகரத்தை நாடுவாகள என்பது நிச்சயம. நமமுடை இந்திரியங்களைந்தும் பட்டி மேயந்து திரிநதபோதிலும, அவனீசன் தயையினால் தூண்டபபபட்டு வரவே, நாம ஆபிமுக்யத்துடன இருந்தால் அதனாலேயே மிகவும திருபதியடைநத பரமபுருஷன தனது படடணமாகிய பரமபதத் திறகு அழைத்துச் செலகிறான.

"விண்ணுலகம் தருவானாய விரைகின்றான்" என்றபடி முக் தியைக்கொடுக்க தவரையுடனிருககிறவன் நமமால செய்யப்படும தனக்கு பரியமான ஒரு வியாஜததையே அபேக்ஷிபபதால, நாம் விஷயாந்தரஙகளிலே அலைநதுகொண்டிருந்தபோதிலும், அவனு டைய தயையால் ஒரு சமயததில அந்த ஸர்வேச்வரன குணங்கள நெஞ்சில தோனறினால, அதை மறககாமல எபபொழுதும் நினைத் துக்கொண்டிருநதால அதையே பெருவிலையாகக்கொண்டு நமககு பரமபதததை கொடுக்கிறான் என றுரைப்பாகள. இப பக்ஷததில ஸாவேச்வரனுடைய தயை என்னும குணம புகழப்பட்டதாகும்.

நாகத்தணையான்நகா:—இப்பதங்களால் ஒருதேச விசேஷததில சென்று அநுபவிக்கப்படுகிற ஸுகம மோக்ஷமெனப்படும் என்ற

பொருளை விளங்கும். ஆதலால் அர்ச்சிராதி மார்க்கத்திலே சென்று ஸ்ரீவைகுண்டமென்னும் கலங்காப் பெருநகரையடைந்து ஸ்வரூப மான கைங்கரியங்களைச் செய்வது முக்தியென்னும் மதம் வரை யப்பட்டதாயிற்று.

**நகர மருள்புரிந்து நான்முகற்குப் பூமேல்**
**பகர மறை பயந்த பண்பன்—பெயரினையே**
**புந்தியால் சிந்தியா தோதியுருவெண்ணும்**
**அந்தியாலாம் பயனங்கென். (33)**

| | | | |
|---|---|---|---|
| நான்முகற்கு | பிரமதேவனுக்கு | பெயரினை | நாமங்களை |
| பூமேல் | (நாபியிலுள்ள) மலரின்மேல் | புந்தியால் | மனத்தால் |
| | | சிந்தியாது | நினைக்காமல் |
| நகரம் | வசிக்குமிடத்தை | ஓதி உரு எண்ணும் | ஜபம் செய்து கணக்கிடுவதான |
| அருள்புரிந்து | கிருபையுடன் கொடுத்தும் | அந்தியால் | ஸந்தியாவந்தனாதி கர்மங்களால் |
| பகர | (அதிகாரிகளுக்கு) சொல்லும்படி | அங்கு | அவ்விடத்தில் |
| மறைபயந்த | வேதத்தைக்கொடுத்த | ஆம்பயன் | ஏற்படப்போகும் பிரயோஜனம் |
| பண்பன் | நற்குணங்களையுடைய ஸ்வாமியின் | என் | என்ன? (யாதுமில்லை) |

ஸ்ரீய: பதியான பத்மநாபன் தனது நாபியிலுண்டான நான்முகனுக்கு தனது நாபீகமலத்தையே இருப்பிடமாகச் செய்து கொடுத்தான். பிறருக்கு உபதேசிக்கும்படி வேதங்களையும் சொல்லிவைத்தான். இப்படி உபகரிப்பவனான புருஷனுடைய நாராயணாதி நாமங்களையும் அதன் அர்த்தங்களையும் மனத்தில் சிந்தியாமல் செய்யப்படும், நூறு—ஆயிரம்—என்று எண்ணிக்கையையே பயனாகக் கொண்ட ஸந்தியாவந்தனத்தால் யாதுபயன் ஏற்படும்? பரமபுருஷார்த்தமாகிய மோக்ஷத்திற்கு பகவத்தியானம் இல்லாத கேவல கர்மங்கள் எப்படி உதவியாகும்? என்கிறார்.

நகரமருள்புரிந்து:—உலகில் உயர்ந்த அரசர்கள் தனக்கு அந்தரங்கர்களான பெரிய உத்யோகஸ்தர்களை தனக்கு ஸமீபத்தி

லேயே பெரியமாளிகைகளைக்கட்டி அமர்த்திவைக்குமாப்போல, ஸர்வேச்வரன பிரமதேவனை தனது நாபியிலேயே அமரச்செயதான்.

மறைபயந்த:—மத்ஸ்யஹம்ஸாதி ரூபங்களை எடுத்துக்கொண்டு வேதங்களை உபதேசித்தான்.

பண்பன் —இபபடி பிறருககு உதவுவதே ஸ்வபாவமாகவிருக கிறவன.

பெயரினையே:—ஈச்வரனுடைய குணங்களையும வீரசசெயல களையும் பரக்கசசொலகிற திருநாமங்களைச்சொலலி, அவனைத் திருப தி செய்விக்காமல, மனதில வேறு விஷயஙகளை நினைததுக்கொணடு, நூறு—ஆயிரம், என்று வாயால உறுபபோடும ஸநதியாவநதனத் தால பயன ஏறபடாது—ஸந்த்யாவநதனம் எனபது மறற காமங்க ளுக்கு முபலக்ஷனம ஈசனைசசிநதியாது செயயபபடும கேவலகர் மஙகள பயனறறவை எனறபடி பகவதாராதன ரூபஙகளான கரு மங்களினறி மறறவை பரமபததைக கிடைவிககச சகதியறறவைகள.

பரமனிடம பக்தியினறி செயயபபடும் கருமஙகளால ஏறபடும் பயன பரமபததில் இலலை. கேவல கருமஙகளைச் செயபவாகள பிரகிருதிலேயே சுறறுவாகள, எனபதாம்.

என்றொருவர் மெய்யென்பரே ழுலகுண்டு, ஆலிலையில
முன்றொருவனாய முகில் வண்ணா—நின்னுருகிப்
பேய்த்தாய் முலைதந்தாள் போந்திலளால், பேரமர்க்கண்
ஆய்த்தாய் முலைதந்தவாறு. (34)

| | | | |
|---|---|---|---|
| முன | முன்றொருகாலத்தில் | நின உருகி | உன்னிடமஅன்புள் ளவளபோல நடிதது |
| ஏழுலகு உணடு | உலகஙகளைமுழுவதும புஜித்து | முலைதநதாள | முலைகொடுத்த |
| ஆல் இலையில ஒருவனாய | ஆலமரததினிலையில ஒப்பற்றவனாக | பேய தாய | தாயாயவநதபூதனை யெனகிறபேய |
| முகில்வண்ணா | மேகமபோனறதிருமேனியையுடையவனே | போந்திலள் | அங்கிருநது நகராமல இறநதுகிடந்தாள் |

| | | | |
|---|---|---|---|
| பேரார்ந்த கண் | அந்தப்பெரிய யந்த ஸ்தலத்தில | ஒருவர் | ஒப்பில்லாமுனிவர் |
| ஆய்தாய | இடைச்சியான தாய (யசோதை) | மெய் என்பர் | உண்மையெனகி றார்கள் |
| முலைதந்தாறு | முலைகொடுத்த பா காரத்தை | என்? | அது எப்படிப்பொ ருந்தும்? |

கீழே எம்பெருமானிடத்தில பக்தியில்லாமல செய்யப்படும் கருமங்களாலாவ தொரபயனில்லை என்றார். இப்பாட்டில, அவ் வீசனிடம் பேரன்புகொண்டவர்களுள் ஒருத்தியான யசோதை யை நினைத்து அவளை ஒரு சமத்காரமாகப்புகழ்ந்து பேசுகிறார்.

என்னொருவர்:—உலகேழுமுண்டு ஓராலமிலைத்தளிரில் துயி ன்ற மேகம்போன்ற நிறமவாய்ந்த பரமா! நீ கண்ணனையவதரித்த பொழுது கஞ்சனால் தூண்டப்பட்டுவந்த பூதனை, உனக்கு விடம் தீண்டிய முலைகொடுக்க, நீ அவளுயிரையும் உண்டாய். உடனே அவள் பேய்வடிவுடனே மாண்டு கிடந்தாள். அப்பொழுது உன்னி டம் மிகப்பரிவுகொண்ட யசோதை அவ்விஷத்தின் நமாற்றாக தன னுடைய முலையை கொடுத்தாள், நீயும் அவளது பாலமுதுண்டாய, என்று அறிவில சிறந்த முனிவர்கள் நூல்களில் எழுதிவைத்துள்ளார் கள் இது எங்ஙனம உண்மையாகும்' என்று வினவுகிறார்

ஒருவள் முலைகொடுக்கவந்து அருகே மாண்டு பிணமாயக் கிடக்க மற்றொருவள் முலைகொடுத்தாள் என்றால் எப்படி நம்பமுடி யும்? உலகத்தில் பிணத்தைப்பார்த்தால பயமிருப்பது யாவர்க்கு மியல்பேயாகும்.

அதிலும், பேயின்பிணம கிடக்கிறது, அதிலும் முலைகொடுத்த வள பிணமாயிருந்தது. அப்பொழுது அசோதை, பிணமெனகிற காரணத்தாலும தனக்கும மரணம் நேருமோ என்கிற காரணத்தா லும அஞ்சியிருந்தாள என்றால நம்பமுடியும. அங்ஙனமின்றி அப பிணம கிடக்கும்போதே கிட்டிநெருங்கி முலைதந்தாள ஒருத்தி என்று அறிஞர்களான முனிவர்களும எழுதிவைத்தார்களே! இது எப்படி உண்மையாகும என்றபடி

இதனால் ஸகலவிரோதிகளையும ஸம்ஹரிக்கவல்ல கண்ணனை யசோதை அக்கண்ணனிடமுள்ள பேரன்பினால ஸமீபத்தில்

சென்று முலையூட்டினுளென்று கருதி அவளுடைய பேரன்பைக் கொண்டாடியதாயிற்று. ஸர்வேச்வரனிடம் பரமபக்தியே பரமோபாயம் என்று கருத்து.

ஆலிலையில் முன்னொருவனாய — உலகங்களையுண்டு ஆலிலையில் கிடந்தபொழுது யாவரும் துணையில்லையே! தாய் தகப்பனுமில்லையே! காப்பார் ஆருமில்லையே என்று வருந்துகிறார்.

பேராகக்கண் — மிகவும் வலிமைவாய்ந்த பூதனை மாண்டு விட்டமாதலால், யுத்தபூமி என்கிறார்.

அன்றிக்கே — பேராக்கண் என்பதை ஆய்த்தாய்க்கு அடைமொழியாக்கினால், ஒன்றுக்கொன்று சண்டை செய்கிற நீண்ட கண்களையுடைய யசோதைப்பிராட்டி என்று பொருள். கண்ணை முதுவாய்ந்த யசோதை என்றதால் அவளுடைய வடிவழகும் புகழப்பட்டது.

ஆறிய வன்பிலடியார்த மார்வத்தால்
கூறிய குற்றமாக் கொள்ளல் நீ—தேறி
நெடியோய்! அடியடைதற் கன்றே, ஈரைந்து
முடியான் படைத்த முரண். (35)

| | | | |
|---|---|---|---|
| ஆறிய | பூர்ணமான | படைத்த | செய்த |
| அன்பு இல் | பக்தியில்லாதவர்களான | முரண் | அபராதமானது |
| அடியார் | தாஸபூதர்கள் | நெடியோய் | உயர்ந்தவனான உன்னுடைய |
| தம ஆர்வத்தால் | தங்களுக்குள்ள அன்பினால் | அடி | திருவடிகளை |
| கூறிய | சொல்லும் சொற்களை | தேறி | காலக்ரமத்தில் தெளிந்து |
| குற்றம் ஆ | தப்பாக | அடைதற்கு அன்றே | பெறுவதற்கல்லவா உதவியாயிற்று? |
| நீ கொள்ளல் | நீ கொள்ளாதே | | |
| ஈரைந்து முடியான் | பத்து சிரங்களையுடைய ராவணன் | | |

கீழ்ப்பாசுரத்தில் யசோதைப்பிராட்டியின் பரிவைப் புகழ்ந்து பேசினார். அந்த நினைக்கவே, தன்னிடமுள்ள பகவத் பக்தியை

யும் ஆராயந்துபார்த்தார். யசோதையின் பக்திக்கும், தன்னுடைய பக்திக்கும் நெடுந்தூரம் வாசியிருப்பதுபோல் தோன்றிற்று. உடனே தன்னை இகழ்ந்துகொண்டார். நாம் அப்பகவானைப் பாடிப் புகழ்வது தகுமோ? என்றார். நாம் இப்படிப் பாடுவது, மேல் வேஷமே, என்று தன்னைநொந்துகொண்டார். பிறகு ஒருவாறு தேறி தனது குற்றங்களைப்பொறுத்தருளவேணுமென்று ஈச்வரனைப் பிரார்த்திக்கிறார் இப்பாட்டில்.

ஆறியவன்பில'—பரிபூர்ணமான பக்தியில்லாமலும், பக்தியுள்ளவர்களபோல் நடிக்கும் அடியவர்கள் உள்ளன்பின்றிக்கூறிய பாசுரங்களை நீ குற்றமாகக்கொள்ளக்கூடாது. ஏனெனில் நீ உன்னிடம் மிகுந்த த்வேஷமுள்ளவர்களுக்கும் அருளபுரிந்திருக்கிறாயே? த்வேஷமுள்ளவர்களுக்கு அருள் புரிந்தாய் என்றால் அன்புள்ளவர்போல நடிப்பவருக்கு அருள புரியலாகாதோ? பத்துத் தலைகளபடைத்த ராவணன் பராணேப்யோபி கரீயஸீ என்கிற உன் உயிரிலும் உயர்ந்த பிராட்டியை அபஹரித்தான்; உன்பால் மிகுந்த சினங்கொண்டு ஏசினன். அவனே தனது மறுபிறவியில் (சிசுபாலன் என்றபிறவியில்) உய்ந்துபோனன். இராவணன் செய்த கொடுஞ்செயல்கள் மறுபிறவியில் உன்னையடைய உதவியாயிற்றென்றால், பக்தியுள்ளார்போல நடிப்பவர்களுடைய பாசுரங்கள் உன்னையடைய ஸாதனமாகாதோ? ஆகையால் என் செய்கைகளைப் பொறுத்தருளவேணுமென்கிறார்

ஸ்ரீவைகுண்டத்தில் த்வாரபாலகர்களான ஜய விஜயரென்பவர்கள், ஸநகாதிகளுடைய கோபத்திற்காளாகி, சபிக்கப்பட்டு, மூன்று பிறவிகளில் பகவத்விரோதிகளானர்கள், முதல் பிறவியில் ஹிரண்யகசிபு—ஹிரண்யாக்ஷனென்னப்படுவார்கள்.

இரண்டாவது பிறவியில் இராவணன்—கும்பகர்ணன் எனப்படுவர், மூன்றும் பிறவியில் சிசுபாலன் தந்தவக்த்ரன், எனப்படுவர். பிறகு அவர்கள் முன்போல த்வாரபாலகர்களாயினர் என்கிற சரித்ரம் இங்கு நினைக்கத்தக்கது.

இங்கு இராவணன் தனது மறு பிறவியிலும் ஈசனுக்குப் பகைவனாகவே இருந்துகொண்டு இறுதியில் அவ்வீசனை அடைந்தா

னென்பதால் யாவரும் த்வேஷத்தால் உய்ந்துபோகலாமென்பது நினைக்கலாகாது. ஆழ்வார்கள் பரமபுருஷனிடம் கரைபுரண்ட கடலினும் பெரிய காதல் வாய்ந்தவர்களாதலால் எவ்விதத்தாலாவது ஈசனுடைய நினைவு நமக்கு வேண்டுமென்பதை நினைத்து சிசுபாலாதிகள் த்வேஷத்தாலும் பரகதியை அடைந்தார்களே, என்றருளிச் செய்யும்படியிருக்கும். கடைசியில் பேசினேன் ஏசமாட்டேன் என்று ஸ்நேஹத்துடன் கூடிய நினைவென்னும் பக்தியினாலேயே அவனை அடைய ஆசைப்படுவார்கள். ஆதலால் கோப்ய காமாத் பயாத்கம்ஸ: த்வேஷாத் சைத்யாதயோ ந்ருபா: என்பதுவும் அவ்வவ்வோ அதிகாரி விசேஷநியதமென்பது அவரவர்களின் சரித்ரங்களாலேயே தெளியவரும்.

முரணை வல்தொலைதற் காமென்றே, முன்னம்
தரணி தனதாகத் தானே—இரணியனைப்
புண்ணிரந்த வள்ளுகிரார் பொன்னாழிக்கையால், நீ
மண்ணிரந்து கொண்டவகை. (36)

| | | | |
|---|---|---|---|
| முன்னம் | முன்பு ஒருகால் | நீ | நீ |
| தரணி | பூமியை | மண் | பூமியை |
| தனது ஆகத் தானே | தனக்கு சேஷமே என்று நினைத்திருந்த | இரந்துகொண்ட | (மஹாபலியிடம்) யாசித்த |
| இரணியனை | ஹிரண்யகசிபுவை | வகை | பிரகாரம் |
| புண்ணிரந்த | புண்ணாகும்படி கிழித்த | முரணை | (சேதனர்களின்) கொடிய |
| வள் உகிர் ஆர் | கூர்மையான நகங்களுடன் கூடிய | வலி | அஹங்கார மமகாரங்களை |
| பொன் ஆழி கையால் | அழகான சக்கரமேந்திய கையால் | தொலைதற்கு ஆம் என்றே | போகுவதற்கென்று அல்லவா ? |

இப்படி தன்னை இகழ்ந்துகொண்டு தான் கூறியவைகளைப் பொறுத்தருளவேணுமென்று கேட்டுக்கொண்ட பிறகு உலகிலுள்ள ஸம்ஸாரிகள் அஹங்காரமமகாரங்களால் நசியப்பட்டுப் பகவானை நினைக்கவில்லையே என்று, நாட்டாருக்காக இரங்கி, நீ வாமனனாய் மண்ணிரந்தது உலகத்தார் உன்னை வணங்கவேணுமென்ற வெண்

ணத்தாலன்றே! அங்ஙனம நீ நீர்மையுடனிருக்க ஸம்ஸாரிகள் ஏன் உன்னை நினைப்பதே இல்லை? என்று அப்பகவனையே வினவுகிறார்.

முரணை:—முன்பொருகால் ஈரேழுவையகங்களையும தன்னுடையது என்று நினைத்து தனது வலிமையால் விணைவர்களையும் வென்று வெண்குடை நிழலில அரசுபுரிந்த ஹிரண்யகசிபு என்பாளுெரு அஸுரனைத் தொலைக்க நரசிங்கமாயத் தோன்றி தனது கூர்மையான கைநகங்களால் அவ்வஸுரனை இரு பிளவாககிழித்துப் பொகட்டு உலகங்களைத் தனனதாக்கிக்கொண்ட பெருமான், மற்றொருகால் இவவுலகங்களை தன்னதென்றபிமானித்த மஹாபலிச் சக்ரவர்த்தியிடம மூன்றடி மண் இரந்து பெற்று எல்லாவுலகங்களையும தன் தாளால் அளந்து தான் ஈச்வரனென்று காண்பித்தான். இரணியனைகொனறதுபோல் மஹாபலியையும் கொல்லலாகாதோ? அந்த திருக்கைகளையும் திருவுகிர்களையும் உபகரணங்களாக அடையப் பெற்றிலனோ? நமக்கு ஸ்வாமியானவன் இங்ஙனம் ஸுலபன் என்று ஸம்ஸாரிகள் அறியவேணுமென்றல்லவோ அவன் மண்ணிரந்தது ஸமஸாரிகள் ஏன் இதனை உணரவில்லையென்று திருவுளளத்தில கருதி இதனை ஈசனிடம விண்ணபபம செய்தார்.

**வகையறு நுண் கேள்வி வாய்வார்கள், நாளும்**
**புகை விளக்கும் பூம் புனலு மேந்தித்—திசைதிசையின்**
**வேதியர்கள் சென்றிறைஞ்சும் வேங்கடமே, வெண்**
**மதியவாய் மாலுகந்த வூர்.** [சங்க

| | | | |
|---|---|---|---|
| வகை அறு | வேறுமார்க்கங்களை தொலைககவல்ல | பூம் புனலும | புஷ்பத்தோடு ஜலத்தையும |
| நுண | நுட்பமான | ஏந்தி | வஹித்துக்கொண்டு |
| கேளவி | சிரவணததை | திசைதிசையின் | பிரதிதிககுகளிலிருந்தும |
| வாயவாாகள் | பெற்றவாகளான | சென்று | புறப்பட்டுப்போய் |
| வேதியாகள் | வேதார்த்தங்களை உணர்ந்தவர்கள் | இறைஞ்சும் | ஸேவிககப்படும |
| நாளும் | ஒவ்வொருதினமும் | வேஙகடமே | திருவேங்கடமலையே |
| புகை | தூபததையும | | |
| விளககும | தீபததையும் | | |

| | | | |
|---|---|---|---|
| வெண்சங்கம | வெளுப்பான ஸ்ரீ சங்கத்தை | மால் | ஸ்வாமி |
| ஊதிய | வாசிக்கிற | உகந்த | விரும்பி வஸிக்கிற |
| வாய | திருவதாரத்தையு டைய | ஊர் | தேசமாகும். |

ஸம்ஸாரிகளான சேதனாகள நாங்கள அவனவதாரங்களுக்குப் பிற்பாடராஞேமே எங்ஙனம் அவனைக் காண்பதென்று வினவ, அவ்வீசனன்ஞே! திருவேங்கடமலையில் நித்யவாஸம் செய்கிருனென்று சொல்லி திருமலையை அநுபவிக்கிருர்போலு மிப்பாட்டில்.

வகையறு:—ஸாதனாந்தரங்களையும, பிரயோஜநாந்தரங்களையும் தேவதாந்தரங்களையும் பறறுவதற்கிடான பொய்நூலகளை மெய் நூல்களென்று வாசித்துக் கேளாமல் பரமநுட்பமான தர்மங்களைக் கேட்டுணர்ந்த வைதிகர்கள் திரள்திரளாக எட்டுதிசைகளிலிருந்தும் வந்து தூபதீபாதிகளை ஏந்தி வணங்கி வழிபட்டு பலபடியாகத் துதி செய்யும் திருவேங்கடம் என்னும் மலை முன்பு பாரதப்போரில் பாண்டவர்களுக்காக சங்கமூதிய கண்ணன் உறையுமிடம். ஸம் ஸாரிகளும் சென்றனுபவிக்கலாமென்று கருத்து.

வகையறு:—உலகில் சிலர் தீர்த்தங்களில் மூன்றுவேளைகளிலும் மூழ்கி எழுந்துகொண்டிருப்பார்கள். மற்றும் சிலர் ஜபம் செயதுகொண்டேயிருப்பார்கள். அவைகளைப்பார்த்து மறறவர்களும் இது தான் பெரிய ஸாதனமென்று நினைத்து முழுகுவார்கள் ஜபம் செய்வார்கள். அங்ஙனம் கண்களில் படுகிறவைகளையெல்லாம் செய்துகொண்டு திரியாமல ஜீவபரஸ்வரூபங்களையும் உபாயங்களையும் உள்ளபடி கேட்டுணர்ந்தவர்கள்.

வேதியர்கள்:—வேதார்த்தங்களை அறிந்தவர்கள். வேதங்களில் பரம்பொருளாகச் சொலலபபட்ட புருஷன் நித்யவாஸம் செய்கிருனென்று பரம்பொருளை நாடி திருவேங்கடத்திற்குப் போகிருர்கள.

வெண்சங்கம்:—பாரதப்போரில் அர்ஜுனன் ரதத்தில ஸாரதியாயமர்ந்து எதிரிகளை கலங்கும்படி ஸ்ரீபாஞ்சஜன்யத்தை ஊதிய

கிருஷ்ணன். இந்த அடைமொழியால விரோதிகளைப்போக்கும் வல்லமையும் ஆச்ரித பக்ஷபாதமும் விளக்கப்பட்டதாயிற்று.

உகந்தவூர்:—என்பதால் கலங்காப்பெருநகரான பரமபதத்தைக்காட்டிலும் அவ்வீசன் அதிகமாக உகக்குமிடம் திருவேங்கடம். "மாயாவீ பரமானந்தம் த்யக்த்வா வைகுண்டமுத்தமம். ஸ்வாமி புஷ்கரிணீ தீரே ரமயா ஸஹ மோததே" என்கிற பிரமாணத்தையும் உணர்க. திருவேங்கடம என்கிற திருநாமத்தாலேயே நம் பாபங்களெல்லாம் அத்திருமலையைஸேவித்தவாறே தொலையுமென்பது விளங்கும்.

ஊரும் வரியரவ மொண்குறவர் மால் யானை
பேர வெறிந்த பெருமணியை—காருடைய
மின்னென்று புற்றடையும் வேங்கடமே, மேலசுரர்
எம்மென்னு மாலதிடம். (38)

| | |
|---|---|
| ஊரும | ஊர்ந்து ஸஞ்சரிக்கிற |
| வரி அரவம | (தேஹத்தில்) பல வரிகளையுடைய ஸர்ப்பமானது, |
| யானை | யானைகள் |
| பேர | (தங்கள் புனத்திலிருந்து வெளியில்) செல்வதற்காக |
| ஒண்குறவர | ஒப்பற்றவேடர்கள் |
| எறிந்த | வீசி அடித்த |
| பெரு மணியை | உயர்ந்த மாணிக்கத்தை |
| காருடைய | மேகங்களில் ஒளிக்கிற |
| மின் என்று | மின்னலென்று நினைத்து பயப்பட்டு |
| புற்றடையும | புற்றினுள் நுழையுமிடமான |
| வேங்கடமே | திருவேங்கட மலை |
| மேல சுரர | நித்யஸூரிகள் |
| எம் என்னும | எங்கள் ஸ்வாமியென்று கொண்டாடும |
| மாலது | ஸ்வாமியினுடைய |
| இடம | நித்யவாஸம் செய்யும், தேசம். |

கீழ்ப்பாட்டில் திருவேங்கடமென்னும் திருப்பதி இப்புவியிலுள்ள வைதிகர்களுக்குப் புகலிடம் என்று சொல்லி இப்பாட்டில் நித்யஸூரிகளுள்பட எல்லாருக்கும் உத்தேசமாயிருக்கும் திருவேங்கடமலை, என்று திருமலையின் சிறப்பைப்பேசுகிறார்.

ஆழ்வார்களுக்கு ஸ்ரீமந்நாராயணனிடம் பரமபக்திபோல் மற்ற பிரஹ்மாதி ஸ்தம்பமளவான ஐச்வர்யங்களில் வெறுப்பும் இயற்கையிலேயே நடமாடும். அத்துடன் பகவத் ஸம்பந்தம் பெற்ற வஸ்துககளில் அப்பகவனிடமபோல் பரமபக்தியுடனகூடிய பரமபாப்ய புததியும இடைவிடாது நிற்கும. அவாகள பெருமானை வேண்டுமபோது, அவன உகநது வாஸம செயகிற நிலஙகளில் ஏதேனுமொரு பிறவி பிறக்குமபடி நீ அருளவேணுமெனறு கேட் பாகள, குலசேகாபபெருமாள திருமலையில் குருகு, மீன, முதலிய பிறவிகளையும வேண்டி, கடைசியில் "எம்பெருமான் பொன்மலை மேலேதேனுமாவேனே" என்று ஏதாவது ஒரு ஜந்மம் திருமலையில் கிடைத்தால் போதுமானது எனருா. ஸ்ரீ ஆளவந்தார், தவ தாஸ்ய ஸுகைக ஸங்கிநாம பவநேஷ்வஸ்த்வபி கீட ஜநம மே | இதரா வஸதேஷு மாஸ்மபூதபி மே ஜந்ம சதுா முகாதமநா | என்று பாகவதோத்தமர்களுடைய திருமாளிகைகளில ஒரு புழுவாயிருக் கலாம், தெயவத்தை நினையாதவாகளுடைய வீடுகளில் நான்முகப் பிறவியும் வேண்டாமென்கிறுா் ஆதலால பரமைகாந்திகள எம்பெரு மானுறையும் திருப்பதிகளுடைய போக்யதையாலே அத்திருபபதிக ளில் வாஸமசெயயும் ஸகல ஜீவராசிகளேயும், மேலான பக்தியுடன் துதிசெயவாாகள. திருமங்கையாழவார், சிங்கவேழ்குன்றம், என் கிற அஹோபிலமஎன்னும திருப்பதியை அனுபவிக்கப்புகவே அங்கு வழிபறிக்கும் வேடர்களுடைய ஆரவாரத்தையும உத்தேச்யமாகக் கருதினுா். இபபடி ஆழ்வாாகள அநுபவததிறஙகளைக இபபொய் கையாழவாரும் திருமலையில் வர்த்திக்கிற மலைப்பாம்புகளையும், யானைகளையும், குறவர்களேயும பயிாகளின் செழிப்பையும, உயாந்த மாணிக்கங்களையும, கண்டு மகிழ்நது அம்மலையின் போக்யதையை அழகாகப்பேசுகிறுர்.

குறவர்கள தினைப்புனங்காக்கும தொழில்வாயந்தவர்கள, என்பது மிகப்ரஸித்தம், அதாவது புஞ்சை நிலங்களில், மிருகங்கள் மேய்ந்து பயிர்களை அழிக்காமலிருககும்பொருட்டு உயரமாக ஒரு குடில் கட்டிக்கொண்டு அதிலமர்ந்து நானகு திசைகளேயும் பார்த் துக்கொண்டிருந்து மிருகங்களோ பக்ஷிகளோ பயிரை அழித்தால் உடனே அவைகளைத் துறத்தி ஓட்டிப பயிரைக்காப்பார்கள். இதை

புனங்காப்பது என்று சொல்லுவார்கள். அவ்வண்ணம், திருமலையில் திருவேங்கடநாதனுடைய திவ்யகடாக்ஷத்தால் புஞ்சை நிலங்கள் செழித்து வளர்ந்த பயிர்களுடைய தான்ய ஸம்ருத்தியுடன், விளங்குகின்றன. குறவர்கள் மிகவும் பரிவுடன் அந்நிலங்களுக்கு காவலிருக்கிறார்கள், அது சமயம் மலைகளில் இயற்கையாக வஸிக்கும் யானைகள் அப்பயிர்களை அழிக்க புஞ்சைநிலங்களில் நுழைகின்றன. அவைகளை துரத்துவதற்கு, உலகத்தில் கற்களையெடுத்து அடித்துத்துரத்துவதுபோல குறவர்கள் அங்கு கீழே இறைந்து கிடக்கும் உயர்ந்த மாணிக்கக்கல்களை எடுத்து யானைகள்மீது எறிகிறார்கள், அப்பொழுது அந்தயானைகளை விழுங்கி சாப்பிடுவதற்கு மலைப்பாம்புகள் வெளியில் அலைந்து கொண்டிருக்கின்றன குறவர்கள் மாணிக்கக்கற்களை எறிய அதன் ஒளியைப்பார்த்து இது மின்னலோ என்று நடுங்கி அப்பாம்புகள் புற்றுகளில் நுழைந்து ஒளிந்துவிடுகின்றன. இங்ஙனம் பாம்புகள் ஒளியும் திருவேங்கடமலையை நித்யஸூரிகள் எங்கள் ஸ்வாமி வாஸம் செய்கிற இடம் என்று கொண்டாடுகிறார்கள்.

இப்படி குறவர்கள், பயிர்களை அழிக்கும் யானைகளை துரத்துவதற்கு மாணிக்க ரத்னங்களையெறிய அதனொளியைக்கண்டு, மின்னலோ என்று நினைத்துபாம்புகள் புற்றுகளில் மறைகின்றன, என்ற வர்ணனையால். அம்மலையில் நிலங்கள் தான்யங்களுடன் செழித்து வளர்ந்திருக்கின்றன, என்றும், யானைகள் மலிந்து வஸிக்கின்றன வென்றும், மாணிக்கக்கல்கள் கீழே இறைந்து கிடக்கின்றன, என்றும், மலைப்பாம்புகள் இருக்கின்றன என்றும், அம்மலையின் பெருமை பேசப்பட்டது.

மலைப்பாம்புகள், யானைகளை விழுங்கி சாப்பிடுமியல்புடையன வென்று தமிழ் நூல்களில்மிகப் பிரஸித்தமான விஷயம், திருமங்கையாழ்வாரும் "காரியமாமுகில் படலங்கள் கிடந்தவை முழங்கிட களிறென்று பெரிய மாசுணம் வரையெனப் பெயாதரு பிரிதியெம்பெருமானை" என்கிற பாசுரத்தில் மலைப்பாம்புகள், மேகங்களைக்கண்டு யானை என்று பிரமித்து விழுங்குவதற்கு மலைபோல் பெயர்ந்து ஸஞ்சரிக்கின்றன என்று திருப்பிரிதி என்னும் திருப்பதி

யைப்பேசினார். அதுபோல், திருமலையில பாம்புகள் யானைகளை விழுங்கத் திரிந்துகொண்டிருக்கின்றன.

பாமபுகள், இடிக்கு பயப்படும இயல்புடையன. இடிக்கு முன்னம் மினனல் தோன்றும். ஆதலால் மின்னலைக்கண்டதும இடிவிழபபோகிறதெனறு நினைத்து புறறுக்குள நுழைநது மறையும. ஆதலால் யானைகளை அடிப்பதற்கு எறிந்த மாணிக் கங்களின் ஒளியைக்கண்டு மின்னலென்று நடுஙகி மறைகினறன. இப்பாசுரத்தின் கருத்தை, நாகத்தின் மேற்குறவா நன்கெறிந்த மாணிக்க, மேகத்தின மின்புரையும் வேங்கடமே: மாகத்தின் மாததாண்ட மண்டலத்தா வாயுண்டுமிழ்ந்தளந்து காத்தாண்ட மண்டலததா காப்பு. எனற பிள்ளைபபெருமாள் ஐயங்காருடைய திருவேங்கடமாலையிலுள்ள செய்யுளில்காணலாம.

இவவாழ்வார் திருமலையின போக்யதையாலே அங்குள்ள திரியக ஜாதிகளையும் பெருமாளைப்போல் வர்ணிக்கிற பெருமையைப பாரத்தால் திவ்யதேசங்களுடைய மேன்மை விளங்கும்.

ஊரும் வரிஅரவம்—அமபாமபுகள திருமலையைவிட்டு கீழே இறங்குகிறதில்லை என்பது ஊரும் என்பதால் தவனிக்கிறது. வரி பாமபுகளிடமுளள உத்தேசயதையால அவைகளுடைய அவயவங் களையும் பேசுகிறார். உடம்பில் பலகோடுகள் பிரகாசிக்கின்றன, என்றபடி.

ஒண் குறவர்—பெருமையுளள குறவர்கள் என்றபடி. பெருமை யாவது—தலைமுறைதலைமுறையாய் திருமலையில் வாஸம் செய்வதே யாகும்' அக்குறவர்களுடைய முன்னோர்களிலும் ஒருவராவது மலை யிலிருந்து இறங்கினார் என்கிற அபவாதம் கிடையாது என்கிற வியாகயான மொழிகளையும் காணலாம்.

மால் யானை—மலைபோல்பெரிய யானைகள் என்பது. குலசேகராழ்வார் போன்ற மஹநீயர்கள பாம்புமுதலிய வடிவங்களை எடுத் துக்கொண்டு அறிவிலிகள் அறியாவண்ணம் திருமலையெம்பெரு மானை எப்பொழுதும் அநுபவித்துக்கொண்டிருக்கிறார்கள் என்றும் தெரியவரும்.

இடந்தது பூமி யெடுத்தது குன்றம்,
கடந்தது கஞ்சனை முன்னஞ்ச—கிடந்ததுவும்
நீரோத மாகடலே நின்றதும்வேங்கடமே
பேரோத வ்ண்ணர் பெரிது. (39)

| | | | |
|---|---|---|---|
| பேர் ஓதம் | பெரிய அலைகளு டைய கடல்போல் | அஞ்ச கடந்தது | பயத்தினால் மாளு மபடி சென்றது |
| வண்ணர் | வடிவையுடைய பெருமான் | கஞ்சனை | கம்ஸனை. |
| முன் | முன்பு | கிடந்ததுவும் | பள்ளியமர்ந்ததுவும் |
| இடந்து | (கோரப்பற்களால்) குத்தி, தூக்கியது. | நீர் ஓதம் | ஜலத்தையும் அலைகளையுமுடைய |
| பூமி | பூமி | மா கடல் | பெரிய கடலில். |
| எடுத்தது | (கைகளால்) எடுத்தது | பெரிது நின்றதுவும் | பாக்யம் தோன்ற நிற்கிறதுவும் |
| குன்றம் | (கோவர்த்தன மென்கிற) மலை | வேங்கடமே | திருவேங்கட மலையிலே |

இப்பாட்டில் மீண்டும் திருமலையையே துதி செய்கிறார்.

இடந்தது:—வராஹமாய பூமியைத் தூக்கினவனும் கோவர்த்தன மலையை குடையா தரித்தவனும் கண்டார் அஞ்சும்படி கம்ஸனைப் பாய்ந்தவனும் லோகரக்ஷணார்த்தமாக திருப்பாற் கடலில் பள்ளியமர்ந்தவனுமான பரமபுருஷன் திருவேங்கடத்தில் நிற்கிறார் காணும்! நாம் எந்நாளும் அநுபவிக்கலாம், என்கிறார்.

ஜகத் ரக்ஷணார்த்தமாக சிந்தை செய்வதற்கு ஏகாந்த ஸ்தலமான திருப்பாற்கடலில் பள்ளிகொண்டவன் முதலாக சில அவதாரங்களை வரிசையாக இப்பாட்டில் அழகாக அநுஸந்தித்திருப்பதால், க்ஷீராபதி நாதன் முதல ஸகலமான அவதாரங்களின் பெருமையும் ஏககாலத்தில் திருவேங்கட மலையில் கண்டு களிக்கலாம் என்பது விளங்கும். நாம், ஸ்திரீகள், சோறு த்யூதம், முதலிய விஷயங்களில் பேரன்பு கொண்டிருந்தாலும், ஒன்றையும் இடைவிடாது அநுபவிப்பதில்லை. நமமுடைய மனம் நாம் விரும்பும் பொருள்களிலும் நிலையாயிருந்து அநுபவிக்கத் திறமையற்றதாய் எல்லா வஸ்துக்களையும் நினைத்துக் கொண்டு அலைகிறது, ஒவ்வொரு விஷயத்திலும் நிலை

யின்றி நின்று எங்கும் திரிந்து துக்கத்தையே அநுபவிக்கிறோம். ஆழ்வார்கள் மயர்வற மதிநலம் பெற்றவர்கள் ஆதலால் பெருமானை ஸர்வ விதத்தாலும் குடைந்தனுபவித்து தான் பற்றிய விஷயத்தைத் தவிர வேறொன்றில் சிறிதும் கண்ணோட்டமின்றி களித்து நிற்கிறார்கள். ஆகையால், இடந்தது பூமி என்று துடங்கி வரிசையாக ஒவ்வொரு அவதார சேஷ்டிதங்களையும் உகந்து பாடுகிறார்.

பெருவில் பகழிக் குறவர்கைச் செந்தீ
வெருவிப் புனந்துறந்த வேழம்—இருவிசும்பில்
மீன் வீழக் கண்டஞ்சும் வேங்கடமே, மேலசுரர்
கோன் வீழக் கண்டுகந்தான் குன்று. (40)

| | | | |
|---|---|---|---|
| பெருவில் | பெரிய தனுஸ்ஸையும் | வீழ | விழ |
| பகழி | பாணங்களையுமுடைய | கண்டு | வேடர்களெறிந்த நெருப்பு என்று கருதி |
| குறவர் | வேடர்கள் | அஞ்சும் | பயப்படுமிடமான |
| கை | கைகளில் பிடித்திருக்கிற | வேங்கடம் | திருவேங்கடம் |
| | | மேல் | முன்காலத்தில் |
| செந்தீ | சிவந்த நெருப்பை (கண்டு) | அசுரர்கோன் | அஸுரர்களின் அரசனான ஹிரண்யன் |
| வெருவி | அஞ்சி | வீழக்கண்டு | இறந்ததைப் பார்த்து |
| புனம் துறந்த | வயலைவிட்டுப்போன | | |
| வேழம் | யானையானது | உகந்தான் | திருப்தியடைந்த பெருமானுடைய |
| இரு விசும்பில் | விசாலமான வானில் | | |
| மீன் | நக்ஷத்திரம் | குன்று | மலையாம். |

இப்பாசுரத்தில் திருமலையை மற்றொருவிதமாக வர்ணிக்கிறார்.

திருமலையில் குறவர்கள் புஞ்சை நிலங்களுக்கு காவல் செய்கிறார்கள். அந்நிலங்களில் பயிர்களை மேய்வதற்கு யானைகள் இரவில் ஓடிவருகின்றன, அவைகளைத் துறத்துவதற்கு குறவர்கள் நெருப்புப்பந்தங்களைக்கொளுத்தி எறிகிறார்கள். யானைகளும் அக்குறவர்களின் வில்லையும் பாணங்களையும் அவர்களெறிகிற தீப்பந்தங்களையும் கண்டு பயப்பட்டு, இனி இந்த நிலங்களில் அறுவடையாகி, கிடலாயிருந்தாலும் நுழைகிறதில்லை என்று நிச்சயித்து ஓடு

கின்றன. ஓடுங்கால் ஆகாசத்திலிருந்து நக்ஷத்திரங்கள் கீழே உதிர்கின்றன. அதைக்கண்டு யானைகள், இவைகளும் குறவர்களெறிந்த தீப்பந்தங்களென்று பிரமித்து மீளவும் அப்பால் செல்லமாட்டாமல் நின்றவிடத்திலே நடுங்கி நிற்கின்றன. இப்படி இயற்கையிலேயே அழகுவாய்ந்த திருமலையில், முன்பொருகால் ஹிரண்யாஸுரனை ஒரு சிறுவனுக்காக வதைத்து அதனால் திருவுள்ளமுகந்த பெருமான் நித்யவாஸம் செய்கிறார். இத்தால் விரோதிகளைப் போக்குவதற்கென்றும் விரோதிகளை அழித்து அதனால் உகந்திருக்கவேணுமென்றும் ஸங்கல்பித்துக்கொண்டே ஸர்வேச்வரன் திருமலையில் நிற்கிறானென்பதாயிற்று. ஸம்ஸாரிகளும் சென்று விரோதிகளை எளிதாகப் போக்கிக்கொள்ளலாமென்பதாயிற்று.

குன்றனைய குற்றஞ் செய்யினும் குணங்கொள்ளும்
இன்று முதலாக வென்னெஞ்சே—என்றும்
புறனுரையேயாயினும் பொன்னாழிக்கையான்
திறனுரையே சிந்தித்திரு. (41)

| | |
|---|---|
| என் நெஞ்சே | என்னுடைய மனமே! |
| இன்றுமுதலாக | இன்றையதினம் முதல் |
| என்றும் | எப்பொழுதும் |
| புறன் உரையே ஆயினும | உள்ளன்பில்லாமல் மேலுக்குச் சொல்லும் வார்த்தையாயிருந்தாலும் |
| பொன் ஆழி கையான திறன் உரையே | அழகான திருவாழியை கையிலே பிடித்த ஸ்வாமி விஷயமான வார்த்தைகளையே |
| சிந்தித்து இரு | தியானம் செய்து கொண்டிரு; |
| குன்று அனைய | மலைபோன்ற |
| குற்றம் செய்யினும் | குற்றங்களைச் செய்தாலும |
| குணம் கொள்ளும | (அவைகளை உபேக்ஷித்து) எம்பெருமான் நம்மிடமுள்ள குணங்களையே கொள்ளுமியல்புள்ளவன |

இப்படி திருமலையில் எம்பெருமானை அனுபவித்து,இப்பாட்டில் அவனுடைய வாத்ஸல்யம் என்கிற குணத்தைப் பேசுகிறார்.

குன்றனைய:— கீழே, ஹிரணியகசிபு என்று பிரஸித்தனான அஸுரனைக்கொன்ற பெருமாள் நித்ய வாஸம் செய்யுமிடம் திருவே

ங்கடமலை என்றார். உடனே அவனுடைய கல்யாண குணங்களிலீடு பட்டு, தனது நெஞ்சைக்குறித்து 'நீ திருமகள் நாதன் விஷயமான வார்த்தைகளையே சிந்தித்துக்கொண்டிரு!' என்று உத்தரவு செய் தார். ஆழ்வாருடைய நெஞ்சம், 'நாம் உள்ளன்புடன் அவனை சிந் தித்தாலன்றோ பயனுண்டு. கழுத்துக்குமேல சொல்லும் வார்த் தையால் யாதுபயன்? நமக்கு அவனிடம் அன்பும உண்டாகவில் லையே! நாம் மேலுக்கு அவன் நாமங்களைச் சொன்னாலும் நாம் உகந்து செய்திருக்கும் பாபக்குவியல்களுக்குத் தக்கபடி நம்மை அவன் தண்டிக்கமாட்டானோ" என்று கலக்கத்துடனிருக்க, அவ் வீச்வரனுடைய வாத்ஸல்யம் என்கிற குணத்தைக் காட்டி, தனது நெஞ்சைத் தேற்றுகிறார். என் நெஞ்சமே! நாம செய்த குற்றங் களுக்குத் தக்கபடி நம்மை அவன் தண்டிப்பான். அவனை எப்படி நினைப்பது? எனறு இவ்வளவு நாள் நீ நினைத்திருந்தது போகட்டும. நீ அவனுடைய குணங்களை அறியவில்லைபோலும். அவனிடம் பல் லாயிரக்கணக்கான கல்யாணகுணங்கள் குடிகொண்டிருக்கின்றன. அவற்றுள் வாத்ஸல்யம் என்கிற ஒரு குணத்தை ஆலோசித்துப் பார். அக்குணத்தால் ஈச்வரன், நாம மலைபோன்ற குற்றங்களைச் செய்துவைத்திருந்தாலும் அவைகளை உபேக்ஷைசெய்து நம்மிட முள்ள குணங்களை எள்ளளவிருப்பினும் ஸ்வீகரிக்கிறான். அந்த வாத்ஸல்யம் ஸர்வஜ்ஞனையும் ஸ்வதந்திரனையுமிருக்கிற ஈச்வரனையும் அறியாதவனைப்போலவும் பராதீனனைபபோலவும் செய்துவிடுகிறது. அவனை நம் குற்றங்களை திரஸ்காரம் செயயும்படி செயகிறது. எள்ளளவாயினுமுள்ள குணங்களையும் ஸ்வீகரிக்கும்படி செயகிறது. நம்முடைய குற்றங்களை உதாஸீனம் செய்யும்படியான ஸ்நேஹம் அவனுக்கு நமமிடம் இருக்கிறது. அந்த ஸ்நேஹத்திறகுத் தான் வாத்ஸல்யம் எனப்பெயர். ந ஸ்மரத்யபகாராணாம் சதமப் யாத்ம வத்தயா | கதம்சிதுபகாரேண க்ருதேநை கேந துஷ்யதி என்றபடி அக்குணத்தால் நம்மிடமுள்ள நூறுக்கணக்கான குற்றங்களை நினைக்காமலும், மிகுதியான சிரமத்துடன் செய்யப்பட்ட ஒரு உப காரம் என்கிற செய்கையால் ஸந்தோஷத்தையும் அடைகிறான். ஈச்வரன் அக்குணத்தால் தூண்டப்பட்டு அபிசேத் ஸுதுராசாரோ பஜதே மாமநந்யபாக் | ஸாதுரேவ ஸமந்தவ்யோ ஸம்யக் வ்யவ

ஸிதோ ஹி ஸ: | என்றும், அபிபாபேஷ்பிரதா மத்பக்தா: பாண்டு நந்தன | முசயந்தே பாதகைஸ்ஸர்வை: பத்மபத்ரமிவாம்பஸா | *என்றும் உபதேசிக்கிறான். துராசாரமுள்ளவனாயிருந்தாலும் அநந்ய பாவத்துடன என்னை ஸேவித்தானாகில் அவன் ஸாதுவென்றே யாவராலும் நினைக்கப்படவேண்டும். ஏனெனில் அவன ஈச்வரனை சரணாகதி செயவதாகிற நல்ல தீர்மானத்தைச் செய்தான் அல்லவா? என்றும், என்னுடைய பக்தர்கள பாபங்களில் ஆசையுள்ளவர்களா யிருந்தாலும் (அப்பாபங்களை நான் உபேக்ஷை செய்துவிடுவதால்) அவர்கள் தாமரை இலை ஜலத்தினால் விடுபடுவதுபோல், பாபங்களி லிருந்து விடுபடுகிறார்கள்) என்றுமோதுகிறார். ஆதலால் அந்த வாத் ஸல்யகுணத்தை அறிந்துகொண்டு, இன்றுமுதல் அழகான திரு வாழியைக் கையிலேந்தின பெருமான் விஷயமான வார்த்தைகளை சிந்தித்துக்கொண்டேயிரு! அவன் குணங்களைமாத்திரம் ஸ்வீகரிப பவனாதலால் நமக்கு அருள்செய்வனேயன்றி சீற்றத்தையடைய மாட்டான். ஆதலால் பகவத் விஷயமான உரைகளை நினைத்துக் கொண்டிரு! என்று தனது மனத்தைக் குறித்துபதேசித்தபடி.*

**திருமகளும் மண்மகளும் ஆய்மகளும் சேர்ந்தால்**
**திருமகட்கே தீர்ந்தவா றென்கொல்—திருமகள்மேல்**
**பாலோதம் சிந்தப் படநாகணைக் கிடந்த**
**மாலோத வண்ணர் மனம்.** (42)

| | | | |
|---|---|---|---|
| பால் ஓதம் | பாற்கடலின் திவலைகள் | மனம் | மனமானது |
| சிந்த | சிதறி மேலேவிழ | திருமகளும் | லக்ஷ்மீதேவியும் |
| படமநாக அணை | படத்துடன் கூடிய நாகமாகிற மெத்தையில் | மண்மகளும் | பூமிதேவியும் |
| கிடந்த | பள்ளிகொண்ட | ஆய்மகளும் | நீளாதேவியும் |
| மால் ஓதம் வண்ணர் | பெரியகடல்போன்ற நிறத்தையுடைய ஸ்வாமியினுடைய | சேர்ந்தால் | (இம்மூவரும்) கலந்தால் |
| திருமகள்மேல் | பெரிய பிராட்டியாரிடமுள்ள | திருமகட்கே | லக்ஷ்மீதேவியின் மேலேயே |
| | | தீர்ந்த ஆறு | பொருந்தியிருக்கிற விதம் |
| | | என்கொல் | எங்ஙனே தான்! |

கீழே எம்பெருமானுடைய வாத்ஸல்ய குணத்தைப் பேசினார். பிராட்டிமார்களின் சேர்க்கையினால் அக்குணம் புகர்பெற்று குன்றாது விளங்குகிறதென்கிறாரிப்பாட்டில்.

திருப்பாற்கடலில பெருமான் பள்ளிகொண்டுறையும் கால் அக்கடலில் அலைகள் கொந்தளித்து வீச, பால் திவலைகள அப்பெருமானது திருவுடம்பில் சிதறிவிழுகின்றன. அவனது கருத்த திருமேனி முத்துக்களால் அலங்கரிக்கப்பட்டது போல் விளங்குகிறது. அங்ஙனம் பள்ளிகொண்ட ஸ்வாமியினுடைய லக்ஷ்மீதேவியிடம் சென்ற திருவுள்ளம் பூமிதேவியும் நீளாதேவியும் சேர்ந்து பரிமாறும் காலத்திலும் லக்ஷ்மீதேவிஒருத்திக்கே அறறுத் தீர்ந்திருக்கிறது. திருமகளைத்தவிர மற்ற பிராட்டிமார்களை நினைக்கவேயில்லை. இது என்ன நீர்மை! என்று வியப்பை அடைகிறார்.

அதாவது பெருமாள் பெரிய பிராட்டியாரோடு கூடி அனுபவித்தால் மற்ற பிராட்டிமார்கள் அத்திருமகளுக்கு கொங்கை முதலிய திவ்யாவயவங்களாகவும் புஷ்பம சந்தனம் முதலிய போக உபகரணங்களாயும் இருந்துகொண்டு ரஸாநுபவம் செய்கிறார்கள். திருமால் பூமிநீளா தேவிகளோடு கூடி அனுபவித்தால் திருமகள் கொங்கை முதலிய தன் அவயவங்களை ஸந்தோஷப்படுத்துகிறார் என்று உகந்திருப்பாள். ஆதலால் திருமால் திருமகட்கே தீர்ந்தார் என்று சொல்லப்படுகிறது.

இங்கு தீர்ந்தார் என்பதும் அற்றுத் தீர்ந்தார் என்பதும் மறற விஷயங்களை சிறிதும் நினையாமல் திருமகளிட்ட வழக்காயிருக்கும் தன்மையைச் சொல்லுகிறது.

இங்கு தீர்ந்தவாறு என்னும் பதத்தை திருமகட்கே தீர்ந்தவாறு, மணமகட்கே தீர்ந்தவாறு, ஆய்மகட்கே தீர்ந்தவாறு என்று கூட்டி அநுஸந்திப்பதுமுண்டு. அப்படி அந்வயித்தால், திருமகளைக்கேட்டால் என்னிடம் தான் பெருமானது காதல பெருகிநிற்கிறது மற்றவர்களை மதிக்கிறதே இல்லை என்று சொல்லும்படியும், மண்மகளைக் கேட்டால என்னைத்தவிர மற்றொருத்தியை கண்ணாலும் ஸ்வாமி பார்ப்பதில்லையென்று சொல்லும்படியும், ஆய்மகளைக் கேட்டால் திருமால் எனக்கே உகப்பைத்தருவன் என்றும்

படிக்கும் ஒவ்வொருவரும் தனித்தனியே கொண்டாடும்படியான திருவுள்ளம் படைத்திருக்கிறான் என்றும் தாதபாயம் கொள்ள வேணும்.

ஸௌபரி என்பாரொரு முனிவர் மாந்தாதா என்ற அரசனுடைய ஐம்பது புதல்விகளை மணம் புரிந்துகொண்டு, ஒரு வனத்தில் ஐம்பது மாளிகைகளைகட்டி அவைகளில் அப்பெண்களை அமர்த்தி தனது தவத்தின் பெருமையால் ஐம்பது சரீரங்களை எடுத்துக்கொண்டு ஐம்பது மாளிகைகளிலுமிருந்துகொண்டு அப்பெண்மணிகளை உகப்பித்துக்கொண்டிருந்தார். ஒவ்வொருவரும் இம்மாமுனிவர் நாமிட்டவழக்காயிருந்துகொண்டு இங்கேயே களித்துக்கிடக்கிறாரே! நம்முடைய மற்ற ஸஹோதரிகளைக் கண்ணெடுத்தும் பார்க்கவில்லையே! நம் ஸஹோதரிகள் என்படுகிறார்களோ! என்று வருந்தினார்களேயல்லது ஸுகத்தில் குறைவுள்ளவராயிருந்தார்களில்லை. இப்படி ஒருமுனிவர் தனது தவத்தின் வலிமையால் ஐம்பது மாதர்களை உகப்பித்தாரென்றால் ஸர்வசக்தனான ஸ்வாமி பதினாறாயிரம் தேவிமார்களானாலும் உகப்பிக்கவல்ல சக்திவாய்ந்தவனென்பது ஐயமற யாவரும் அறியக்கூடிய விஷயமே.

**மனமாசு தீரு மருவினையும் சாரா**
**தனமாய தானே கைகூடும்—புனமேய**
**பூந்துழாயா னடிக்கே போதொடு நீரேந்தி**
**தாந்தொழா நிற்பார் தமர்.** (43)

| | | | |
|---|---|---|---|
| புனமமேய பூமதுழாயான் | தன் இடத்தில் இருந்தாற்போலே செழித்துப் பூத்த திருத்துழாயையணிந்த ஸர்வேச்வரனுடைய | தொழாநிற்பர் | ஸேவிப்பார்கள் (உடனே) |
| அடிக்கே | திருவடிகளுக்கே | மனம் மாசு | மனத்திலுள்ள அழுக்குகள் |
| போதொடு | புஷ்பங்களோடு | தீரும் | தொலைந்துபோம் |
| நீர் ஏந்தி | தீர்த்தத்தையும் எடுத்துக்கொண்டு | அருவினையும் | கொடியபாபங்களும் |
| தமர் | பாகவதர்கள் | சாரா | கிட்டாது |
| தாம் | தாமாகவே | தனம் ஆய | ஐசுவர்யமும் (பக்தியும்) |
| | | தானேகைகூடும் | தானாகவே வந்து சேரும். |

இப்படி புருஷகாரபூதைகளான பிராட்டிமார்களைக்கொண்டு பரமபுருஷனை நாம் ஆச்ரயித்தால் அவனை அனுபவிக்க இடையூறாக விருக்கும் வினைகளனைத்தும் தன்னடையே விலகிப்போமென்கிறாரிப்பாட்டில்.

ஸர்வரக்ஷகன் என்று எல்லாருக்கும் தெரியும்படி திருத்துழாய் மாலையை அணிந்த ஸர்வேச்வரனுடைய திருவடிகளுக்கென்று புஷ்பங்களையும் தீர்த்தங்களையும் ஏந்திக்கொண்டு பக்தியுடன் ஸேவிப்பவர்களுக்கு மனத்திலுள்ள தோஷங்களாகிய காமக்ரோதாதிகளும ஆத்மதோஷங்களாகிற, அவித்யா, கர்ம, வாஸநாதிகளும் தனனடையே விலகிப்போம். இபபடி இடையூறுகள் நீங்குவதுமின்றி பகவத பக்தியாகிற செல்வமும் வந்து கைகூடும். ஆதலால் இடையூறுகள நீங்குவதறகும் பகவத் பக்தி பெறுவதற்கும் என்னவுபாயம் செய்வது என்று கரையவேண்டாம். நாம் அவனை ஸேவித்தால் அவன் அபிமதங்களைத் தானே கொடுக்கிறான். நாம் செயய வேண்டியதைச் செய்தால் அவன் செயயவேண்டியதைச் செயய மறந்துவிடுவனோ? ஆகையால நாம் அவனைத் தொழுதால் நமக்கு ஸகல புருஷார்த்தங்களும் எளிதாகக் கைகூடுமென்று கருத்து.

தமருகந்த தெவ்வுருவ மவ்வுருவம் தானே
தமருகந்த தெப்பேர் மற்றப்பேர்—தமருகந்து
எவ்வண்ணம் சிந்தித் திமையாதிருப்பரே,
அவ்வண்ண மாழியானும். (44)

| | | | |
|---|---|---|---|
| ஆழியான் | திருவாழியைப் பரிகரமாகவுடையவன் | அப்போ ஆம் | அதையே தனககுப் பெயராகக கொள்வன் |
| தமர் உகந்தது | பகதாகள் ஆசைப்படுகிறது | மற்று | இப்படியே |
| எவ்வுருவம | எநத வடிவத்தையோ | தமா | பகதாகள் |
| | | உகந்து | அன்புடன் |
| அவ்வுருவம் தானே ஆம | அந்த வடிவத்தையே ஸ்வீகரிப்பன் | எவ்வண்ணம் | எந்த குணங்களை |
| தமர் உகநதது | பக்தாகள் விரும்பியது | சிநதித்து | தியானித்து |
| எப்பேர் | எந்த திருநாமததையோ | இமையாது | கண்கொட்டாமல் (ஓயாமல்) |

| | | | |
|---|---|---|---|
| இருப்பா | பாவனையுடன இருப்பாகளோ | அவவண்ணம ஆம | அநத குணங்களையே தனக்கு ஸவீகரிப்பன். |

எம்பெருமானைத் தொழுதால் வினைகள் விலகிப்போம் என்றார் கீழில். அவன் அகப்பட்டாலன்றோ தொழலாம். அவனைக் காண முடியவில்லையே! எந்தவுருவத்துடனிருப்பதாக அவனை நினைப்பது எந்தப் பெயரையுடையவனாக நினைப்பது? எவவண்ணம் நினைப்பது? என்று சிலர் வினவ, நம்முடைய விருப்பத்தின்படியே அவனை நினைக்கலாம். நாம் ஆசைப்படும் உருவம்தான் அவனுக்கு உருவம், நாம் இடும்பெயர்தான் அவனுக்குப் பெயர், என்று பதில் கூறி, நாம்கண்டு தொழயோக்யமான அர்ச்சாவதாரத்தைப் பேசுகிறாரிப்பாட்டில்.

தமருகந்ததெவ்வுருவம் பரமபுருஷனிடம் பக்திவாய்ந்த பாகவதோத்தமர்கள் தங்களுக்கிஷ்டமான தாமரம், வெள்ளி, ஸுவர்ணம் முதலிய திரவ்யங்களால் தங்களுக்கிஷ்டமான, ராமகிருஷ்ணாதிரூபங்களான பிரதிமைகளைச்செய்து இந்த வுருவத்தில் எழுந்தருள வேணுமென்று எம்பெருமானைப் பிரார்த்தித்தால் அவன் ஸந்தோஷத்துடனே அதில் நித்யவாஸம் செய்கிறான், அப்பிம்பத்தில் இருந்துகொண்டே நம்மால் ஆராதிக்கப்பட்டு நமக்கு வேண்டுமவைகளைத் தருகிறான். ஸுரூபாம் பிரதிமாம் விஷ்ணோ: பிரஸன்ன வதனேக்ஷணாம் | க்ருத்வா த்மந: ப்ரீதி கரீம் ஸுவாண ரஜதாதிபி: | தாமார்ச்சயேத் தாம் ப்ரணமேத் தாம்யஜேத் தாம் விசிந்தயேத் | என்கிற பகவத் சாஸ்திர வசனங்களை உணர்க.

தமருகந்ததெப்பேர் அடியார்கள் அவனை எந்தப் பெயரிட்டழைக்கிறார்களோ! அப்பெயர்தான் அவனுக்குப் பெயர். ஆதலால் தான் ஆராவமுது, வைத்தமாநிதி, நந்தாவிளக்கு, ஆமருவி, நம்பி முதலிய தன் காதலைக்காட்டும் பெயரால் ஆழ்வார்கள் அழைக்க, அப்பெயருடனேயே, திவ்ய தேசங்களில் எம்பெருமான் கோயில் கொண்டிருக்கிறார்.

தமருகந்தெவ்வண்ணம் நாம் எந்த ப்ரகாரமாக நினைக்கிறோமோ அந்த பிரகாரத்துடனேயே வந்து நம்முடைய அபிமதங்களைத் தலைக்கட்டி வைக்கிறான். நாம் எந்த குணங்களுள்ளவனாக உபாஸிக்கி

ரூமோ, அக்குணங்கள் தான் அவனுடைய குணங்கள். நாம் எப்படி நினைத்துக் கூப்பிட்டாலும் நாம் நினைத்தபடியே வருவான். அவனுக்கு ஸொந்தமான வுருவமோ, பெயரோ, நிறமோ, கிடையாது. எல்லாம் ஆச்ரிதர்களிட்ட வழக்காயிருக்கும். இவ்வர்த்தம் யே யதா மாம் பிரபத்யந்தே தாம்ஸ்ததைவ பஜாம்யஹம் என்கிற பகவத்கீதா வசனத்திலும், காணலாம். நதே ரூபம் நசாகாரோ நாயுதாநிநசாஸ்பதம்ததாபி புருஷாகார: பக்தாநாம் த்வம் பிரகாசஸே. என்கிற பிரமாணத்தையும் உணர்க. ஆத்மாநம் மாநுஷம் மந்யே என்கிற அவன் வார்த்தையையும் அறியவேணும். ஆதலால் நம்மிஷ்டப்படி அர்ச்சாஸமாதியில் அவ்வீச்வரனை ஆராதிப்பது மிகவும் ஸுலபமான கார்யமென்பது விளங்கும்.

**ஆமே யமரார்க் கறிய வது நிற்க,**
**நாமே யறிகிற்போம் நன்னெஞ்சே—பூமேய**
**மாதவத்தோன் தாள் பணிந்த வாளரக்கன் நீண்முடி**
**பாதமத்தா லெண்ணினான் பண்பு.** [யை
(45)

| | | | |
|---|---|---|---|
| நலநெஞசே | நன்மைபொருநதிய மனமே | பாதம் அத தால் | அநத திருப்பாதங களால் |
| பூமேய | தாமரை மலரில் வஸிககிற | எணணி னன் | எண்ணினவனு டைய |
| மாதவத தோன் | பெரிய தவததாலு யர்நத பிரமனு டைய | பணபு | ஸவபாவம் |
| | | அமரர்ககு | தேவர்கட்கு |
| | | அறிய ஆமே | அறியமுடியுமோ? |
| தாள்பணிந்த | பாததில் வணங் கின | அது நிறக | அது கிடக்க |
| | | நாமே | நாம் தாம் |
| வாள் அரக் கன | கத்தியையுடைய இராவணனது | அறிகிற் போம் | அறியவல்லராயி னோம். |
| நீண் முடி யை | உயர்நத பததுமுடி களையும் | | |

இப்படி ஈச்வரன் ஸர்வஸுலபனாயிருந்தாலும் அவனுடைய பெருமை நம்மால் அறியமுடியாதென்றும் நான்முகனாலும் அறிய முடியவில்லையென்றும் இப்பாட்டில் அவனது பெருமை பேசப்படுகிறது.

முன்பொருகால் இராவணன் என்ற அரக்கன் தன்னுடைய பத்துத்தலைகளையும் மறைத்துக்கொண்டு நான்முகக் கடவுளிடம் சென்று தனக்கு வேண்டிய வரங்களை வேண்டிக்கொண்டான். அப்பொழுது ஸ்ரீமந்நாராயணன் நான்முகனுடைய மடியில் ஒரு குழந்தையாய் படுத்திருந்து "இவனுக்கு வரங்களைக் கொடுக்காதே. கொடுத்தால் இவன் எல்லாவுலகங்களையும துன்பப்படுத்துவான். இவன் அரக்கன். தனது தலைகளை மறைத்துக்கொண்டு உன்னை ஏமாற்றுகிறான்" என்று சொல்வதுபோல் தன்னுடைய திருவடியின் கட்டை விரலால் மறைக்கப்பட்டிருந்த அவனது தலைகளை ஒன்று இரண்டு என்று எண்ணிக்காட்டினார். அதைப் பிரமதேவன், தெரிந்துகொளளமுடியவில்லை. தனது மடியில் கிடக்கும் குழந்தையை தெய்வமென்றும் அறியவில்லை, அப்படிப் பிரமதேவனாலும அறியவொண்ணாத மேன்மை நமக்கு அறியப்போமோ? என்கிறார்.

இப்பாசுரத்தில் தொகுக்கப்பட்டிருக்கும் இவ்வரலாற்றை பேயாழ்வார் மூன்றாம் திருவந்தாதியில் எழுபத்தேழாவது பாசுரத்திலும் திருமழிசைப்பிரான் நான்முகன் திருவந்தாதியில் நாற்பத்து நான்காம் பாட்டிலும் இணைத்திருக்கிறார்கள்.

இதற்கு மூலபூதமான புராணங்கள் நமக்குத் தென்படவில்லை, ஆகிலும், வால்மீகி முதலிய முனிவர்களுக்கும் அகப்படாத இவ்வரலாறு மயர்வறமதிநலமருளப்பெற்று தெளியாத மறைநிலங்கள் தெளிவிக்கும் ஆழ்வார்களால் மாத்திரம் ஸாக்ஷாத்கரிக்கப்பட்டதென்று நாம் உணர்ந்து ஸந்தோஷிக்கப் ப்ராப்தம்.

**பண்புரிந்த நான்மறையோன் சென்னிப்பலியேற்ற**
**வெண்புரிநூல் மார்பன் வினைதீரப்—புண்புரிந்த**
**ஆகத்தான் தாள்பணிவார் கண்டீர், அமரர்தம்**
**போகத்தால் பூமியாள்வார்.** (46)

| | | | |
|---|---|---|---|
| பண்புரிந்த | ஸ்வரங்களுடன் கூடிய | சென்னி | தலையில் |
| நான்மறையோன் | நான்குவேதங்களையுடைய பிரமதேவனுடைய | பலிஏற்ற | பிச்சைவாங்குகிறவனும் |
| | | வெண்புரி | வெளுப்பான முப்புரியையுடைய |

| | | | |
|---|---|---|---|
| நூல் | யஜ்ஞோபவீதத்தை | தாள் | திருவடிகளை |
| மாாபன | மாாபில்தரித்தவனு மான சிவனுடைய | பணிவார் கண டீர் | வணங்குகிறவாகளல்லவா ; |
| வினைதீர | பாபம்தோலையும்படி | அமராதம | நித்ய ஸூரிகளுடைய |
| புண்புரிந்த | புண்படுத்திக்கொண்ட | போகத்தால | ஐசவர்யத்தோடு |
| ஆகத்தான | திருமேனியையுடையபெருமானுடைய | பூமி | லீலாவிபூதியையும் |
| | | ஆள்வாா | ஆட்சிசெய்கிறார்கள். |

திருமால் ருத்ரனுக்கு அருள் புரிந்தமை இப்பாட்டில் பேசப்படுகிறது. ஐந்து தலைகளைப் படைத்த ருத்ரன் பிரமதேவனுக்கு ஐந்து தலைகளிருப்பதைக்கண்டு உலகத்தார் பிரமனையும் ருத்ரனென்று பிரமிப்பார்களென்றெண்ணினன். உடனே அவனருகே சென்று அப்பிரமனுடைய தலைகளில் ஒன்றை தனது கைவிரலின் நகத்தால் கிள்ளி எடுத்தான். பிரமனும் ருத்ரனைக் குறித்து நீ என் மண்டையோட்டுடனேயே திரிவாய் என்று சபித்தான். ருத்ரனும் தனது கையிலொட்டின கபாலத்துடனேயே திரிந்து மிகவும் கலங்கினவனாய் தேவர்களிடம் சென்று இக்கபாலம் கையைவிட்டு எப்படி விலகும் என்று வினவ, அவர்களும் நீர் இக்கபாலத்திலேயே பிக்ஷை எடுக்கவேண்டும். என்றையதினம் இக்கபாலம் நிறையுமோ அன்று உம்முடைய கையை விட்டு நழுவி விழும் என்று சொல்ல, ருத்ரன் அவ்வண்ணமே பிக்ஷையெடுத்து வருங்கால், ஒரு நாள் பதரிகாச்ரமத்தில் நாராயணனிடம் பிக்ஷை கேட்டான். அங்கு பகவான் தனது நகத்தால் தனது மார்பைக் கீறிக் கொண்டு அதிலிருந்து பெருகிய உதிரத்தால் அக்கபாலத்தை நிரப்ப உடனே அக்கபாலம் அவன் கையைவிட்டு கீழேவிழுந்தது. அரனும் பரிசுத்தனன். அப்படி அரனைப் பரிசுத்தனாக்கிய நாராயணனுடைய திருவடிகளை வணங்கித் தொழுவார்கள் இப்பூமியிலிருந்து கொண்டே நித்யஸூரிகளுடைய போகத்திற்குரியவராவார்கள். அல்லது பூமியிலிருந்துகொண்டே விண்ணவா வேண்டி விலக்கின்றி மேவுமடிமையெல்லாம் மகிழ்ந்தடைகின்றனர் என்பதாம்.

பண்புரிந்த—ஸ்வரங்களுடன் கூடிய நான்கு வேதங்களையும்

செவவனே சொல்லிக்கொண்டு நிரபாரதியாயிருந்த நான்முகனை தலையறுத்தான். வாமாங்குஷ்ட நகாக்ரேண சிந்நம் தஸ்ய சிரோ மயா என்று ருத்ரன் வார்த்தை.

வெண்புரிநூல் ருத்ரனுடைய யக்ஞோபவீதம் வெளுப்பாயிருந்ததென்றார். இத்தால் தனது பாபம் தொலைய தினந்தோறும் முழுகிக்குளித்து பூணூலைத் தேய்த்து வெண்புரிநூலானன் என்பது தோறறும்.

வினைதீர:—ஈச்வரனென்று அஹங்காரமடைந்து வெந்தாரென்பும் சுடுநீறும் மெய்யிற்பூசிக்கையகத்து சந்தார்தலைகொண்டு உலகேழும் திரிகிறானே எனறு வருந்தி தனது மார்பைக் கீறிக்கொண்டாவது ருத்ரனை ரக்ஷிக்கவேணுமென்று கருதினன் என்பது தோன்றுகிறது. ருதரனேடு ஸம்பந்தித்தார்க்குமிதுவே பணி என்றார் வ்யாகயானங்களில ; ருதரன் தனது தந்தையின் தலையைக்கிள்ளினன். இவனைக் கணவனாக வரித்த பாரவதி தன் தந்தையான தக்ஷப்ரஜாபதியின் மரணததிறகு காரணமானள். ஆதலால் பிரமருத்ராதிகளுக்கும் ரக்ஷகனை ஸர்வேச்வரனுடைய திருவடிகளை ஸேவிப்பவர்தான் தரணியோடு விசும்பாளும் தன்மை பெறுவார் என்றபடி.

வாரி சுருக்கி மதக்களி றைந்தினையும்,
சேரி திரியாமல் செந்நிறீஇ—கூரிய
மெய்ஞ் ஞானத்தா லுணர்வார் காண்பரே, மேலொரு [நாள்
கைந்நாகங் காத்தான் கழல்.

| | | | |
|---|---|---|---|
| மதம | மதம்கொண்ட | கூரிய | பரமஸூக்ஷமமான |
| களிறு ஐந்தினையும் | (இந்திரியங்களா கிற யானைகள் ஐந்தையும | மெய் | உண்மையான |
| | | ஞானத்தால் | பகதியாகிற ஞானததால் |
| வாரி | ஜலம்போன்ற விஷயங்களிலிருந்து | உணர்வார் | அறியமுயல்பவர்கள் |
| | | மேல் ஒரு நாள் | முன் ஒரு காலத்தில் |
| சுருககி | இழுத்து அடககிப் பிடித்து | கை நாகம் | குணமுள்ள யானையை |
| சேரி | மனம்போனவிடங்களில் | காத்தான் | ரக்ஷித்தவனுடைய |
| | | கழல் | திருப்பாதங்களை |
| திரியாமல் | அலையாமல் | காணபா | கண்களால் கண்டு மகிழ்வார்கள் |
| செம்நிறீஇ | செவ்வனே நிறுத்தி | | |

இப்பாட்டில் புண்புரிந்த ஆகத்தான் தாள் பணிவார் இன்னுரென்று காட்டுகிறார்.

வாரி சுருக்கி:— செவி வாய் கண் மூக்கு உடலென்கிற ஐந்து இந்திரியங்களாகிற மதயானைகளை சப்தம் ரஸம் ரூபம் வாஸனை ஸ்பர்சம் முதலிய விஷயங்களாகிற ஜலத்தில் செல்ல விடாமல் இழுத்துப்பிடித்தும், மனம்போன விடங்களிலெல்லாம் திரியாமல் அடக்கியும், ஸாத்விகத்யாகத்துடன் செய்யப்படும் நித்ய நைமித்திக கர்மங்களால் பரிசுத்தமான மனத்தில் ஏற்படும் பக்தியென்கிற ஞானத்தால் ஸர்வேச்வரனை உள்ளபடி அறியமுயல்பவர்கள் கஜேந்திராழ்வானுக்கு அபயமளித்த பரமபுருஷனை நேரில் பார்ப்பார்கள், மற்றவர்களுக்கு முடியாதென்பதாம்.

இந்திரியங்களை "அடக்கமுடியாதவை" என்கிற காரணத்தால் மதயானைகளாகச் சொன்னார். யானைகளின் மதத்திற்கு காரணமாதலாலும், அடிக்கடி விடாயை உண்டுபண்ணுவதாலும், ஜலத்திலுள்ள முதலை முதலிய ஜந்துக்களால் துன்பம் ஏற்படுவதுபோல், துன்பங்களுக்கு காரணமாயிருப்பதாலும், சப்தம்முதலிய அனுபவிக்கப்படும் விஷயங்களை ஜலமாக நிரூபித்தார். மதயானையை ஜலத்தில் செல்லவொட்டாமல் அடக்கி தெருவீதிகளில் அலையவிட்டால் ஊராரைக்கொல்லுமாதலால், யானைகளை, தெருக்களிலும் விடாமல் தனியே ஒரு காட்டிலடக்கி வைக்கவேணும். அதுபோல் இந்திரியங்களை விஷயங்களிலிருந்து அடக்கியும் மனம்போன விடங்களிலெல்லாம் செல்லவொண்ணு தடக்கவேணுமென்பது பற்றி மீண்டும் சேரிதிரியாமல் செந்நீறீஇ என்றது.

மெய்ஞ்ஞானத்தால் கபடமில்லாமல் உள்ளன்போடு செய்யப்படும் பக்தியோகத்தால் அவனைக்காணலாமென்றபடி.

கைந்நாகம் காத்தான்—இந்த விசேஷணத்தால், கஜேந்திராழ்வானுக்கு முதலையால் ஏற்பட்ட துயரம்நீங்கி பகவத் தர்சனம் ஏற்பட்டதுபோல், பக்தியோகத்தால் அவனை அறிபவர்களுக்கு இடையூறுகள் நீங்கி அவன் திருவடிகளைக் காணலாமென்பது விளங்குகிறது.

கழலொன்றெடுத்தொருகை சுற்றியோர் கைமேல்,
சுழலும் சுராசுரர்களஞ்ச—அழலும்
செருவாழியேந்தினன் சேவடிக்கே செல்ல
மருவாழிநெஞ்சே மகிழ். (48)

| | | | |
|---|---|---|---|
| கழல் ஒன்று | (திரிவிக்ரமாவதாரத்தில்) ஒரு திருவடியை | அழலும் | தீயை உமிழ்கிற |
| எடுத்து | உயரே தூக்கி | செரு | மிடுக்கையுடைய |
| ஒரு கை | ஒருகையால் | ஆழி | திருவாழியாழ்வானை |
| சுற்றி | நமுசி என்னும் அஸுரனைச்சுற்றித் தள்ளி | ஏந்தினன் | தரித்தவனுடைய |
| சுழலும் | கலங்கியிருக்கிற | சே அடிக்கே | சிவந்த திருவடிகளில் |
| சுராசுரர்கள் | தேவர்களும், அசுரர்களும் | செல்ல | சேருமபடி |
| அஞ்ச | நடுங்கும்படி | ஆழி நெஞ்சே | கம்பீரமானமனமே! |
| ஓர் கைமேல் | மற்றொரு கையில் | மருவு | கிட்டுவாயாக |
| | | மகிழ் | ஸந்தோஷப்படுவாய், |

உலகளந்த பெருமானுடைய திருவடிகளைத்தொழுது ஸுகமாயிருப்பாய் என்று தனது திருவுள்ளத்தைக் குறித்துப்பேசுகிறார்.

கழல்:—பகவான் வாமநனாயவதரித்து மஹாபலியிடம் சென்று மூவடிமண் இரந்தான், மன்னவனும் என்னால்தரப்பட்டதென்றான். அக்கணமே பெரியவடிவத்தை யெடுத்துக்கொண்டு உலகங்களையெல்லாம் திருவடியால் அளக்க ஆரம்பித்தான. உடனே மஹாபலியின் புதல்வன் நமுசி என்பான் அப்பகவனை நோக்கி நீ செய்வது அக்ரமம். இது என்ன மாயம், இந்த மாயத்தை என் தகப்பன் தெரிந்து கொள்ளவில்லை. நீ முன்னே எந்தத் திருவடியால் மூவடி வேண்டினாயோ? அதே அளவுள்ள திருவடியால் அளந்துகொள்! என்று சண்டையிட, பகவானும் சரீரம் என்றால் அது வளருமியல்புடையது என்று மிகப்ரசித்தம். என் உடம்பு வளர்ந்து விட்டதால் அடியும் பெரிதாயிற்று நான் என்ன செய்வேனென்று பதில்சொல்ல, அதைக்கேளாமல் மீண்டும் அளப்பதைத்தடுக்க, த்ரிவிக்கிரமன் அந்த நமுசியின் காலைப்பிடித்து கையால் தூக்கி தானும் வளர்ந்து அவ்வஸுரனை ஆகாசத்தில் சுழற்றி அடித்தான். நமுசி

யென்பவன் அப்பகவானைத் தடுக்கும்பொழுது தேவர்கள் நம் காரியத்திற்கு இடையூறுகள் பல நேர்படுகின்றனவே, நிறை வேறுமோ ; என்னமோ ; என்றஞ்சினார்கள அசுரர்கள் நமுசிக்கு என்ன விளையுமோ என்றஞ்சினார்கள் இப்படி யாவரும் பயப்படும் கால உலகங்களை அளந்து, நமுசியை வானில் சுழற்றியெறிந்து, மற்றொருகையால் தீயை உமிழும் சக்ரத்தாழ்வாரை யேந்தி, உலகங்களை உய்யச்செய்த பெருமானுடைய திருவடிகளை, மனமே! பற்றுவாய அதனால உண்டாகும் மோக்ஷாநந்தத்தையும பெறுவாயாக! என்றார்.

மகிழல கொன்றேபோல் மாறும் பல் யாக்கை
நெகிழ முயல்கிற்பார்க் கல்லால்—முகிழ்விரிந்த
சோதி போற் றோன்றும் சுடர்பொன் னெடுமுடி, எம்
ஆதி காண் பார்க்கு மரிது. (49)

| | | | |
|---|---|---|---|
| மகிழ் அலகு ஒன்றேபோல் | மகிழ மரத்தினுடைய ஒருவிதைபோல் | தோன்றும | காணபபடும |
| மாறும | பலவகையாகமாறுகிற | சுடா | காநதியையுடைய |
| பல் யாக்கை | அனேகசரீரததை | பொன் | அழகிய |
| நெகிழ | விலகக | நெடுமுடி | உயர்ந்த கிரீடததையுடைய |
| முயலகிற்பார கரு அல்லால் | பிரயதனம் செயகிறவாகளுக்கல்லது | எம ஆதி | காரண வஸ்துவான பெருமான் |
| முகிழ்விர்நத | நன்றாய மலர்ந்த | காண்பாரககும | பாரக்கவேணுமென்கிறவாகளுக்கும் |
| சோதிபோல் | தேஜஸ்ஸுபோல் | அரிது | அகப்படாதன. |

இச்சரீரத்தில் ஆசையை விட்டவர்களுக்கல்லது பகவானைக் காண முடியாதென்று சொல்லுகிறார்.

மகிழலகு:— ஜீவாத்மா என்பது நித்யமான வஸ்து. அது நம்முடைய கர்மாநுகுணமான பகவத்ஸங்கல்பத்தால் அநேக சரீரங்களில் நுழைந்து ஸுக துக்கங்களை அநுபவிக்கிறது. இந்த சரீரம் மாறி மாறி வருகிறது. ஒரு ஸமயம் தேவசரீரத்தில் ஜீவன் வஸிக்கிறான், அதேஜீவன் மற்றொருகால் மனுஷ்ய சரீரத்தில் கிடக்கிறான், மற்றொரு ஸமயம், பசு, பக்ஷி, புழு முதலிய சரீரங்களில் இருக்கிறான், ஆதலால் ஜீவனுக்கு துயரங்களை அநுபவிப்பதற்கும்

மோக்ஷாநந்தம் அடையாமலிருப்பதற்கும் காரணம சரீரம்தான், சரீரம் உள்ளவரையில் பேராநந்தம் கிடையாது—ஸுகம கலந்த துக்கம் விடாது. நஹ வை ஸசரீரஸ்ய ஸத: ப்ரியாப்ரியயோ ரப ஹதிரஸ்தி என்று சுருதிவாக்யம. ஆதலால் மாறி மாறி வரும் ஆக்கையில் ஆசையைவிட வேண்டுமென்கிறார். சரீரத்தில் ஆசையைவிடுபவர்களுக்கல்லது மறறவர்களுக்கு அவ்வீசனைக் காண முடியாது. சரீரத்தில் ஆசையுடன் அவனைவேண்டாமல, சரீரத்தில் புண்ணுராக்கை என்னும்படியான இகழ்ச்சிதோன்றி பற்றுதலை விடவேண்டுமென்று கருத்து. சரீரம் மாறி மாறி வருமென்பதற்கு ஒரு உதாஹரணம் காட்டுகிறார். மகிழலகென்று. முன்காலத்தில் கணிதசாஸ்திரத்தில் வல்லவர்கள கணிதம் செய்யும்பொழுது மகிழம் விதையை உபயோகித்துக் கொளவாரகள், அவ்விதை காணி ஸ்தானத்தில சிறிது நேரம் இருக்கும். சிறிது நேரத்தில் கோடி ஸ்தானத்தில் நிற்கும். (காணிஸ்தானமென்பது ரொமபவும் தாழ்ந்ததான எண்ணுடைய ஸ்தானம்—கோடிஸ்தானம் என்பது ரொம்பவும் உயர்ந்த எண்ணின் இடம்) மகிழவிதை எப்படி உயர்ந்த ஸ்தானத்திலும் தாழ்ந்த ஸ்தானத்திலும் நிற்கிறதோ; அதுபோல சரீரமும் உயர்ந்த தேவாதி சரீரமாகவும் தாழ்ந்த பசுபக்ஷி முதலான சரீரமாகவும் மாறி வருமென்றபடி.

முகிழ்விரிந்த:—எலலாவுலகங்களுக்கும் நாதனென்று காட்டும் மலாந்த சோதியுடன் கூடிய திருவபிஷேகததை சிரஸில் தரித்தவன், என்றபடி.

காண்பாாக்குமரிது:— ஜகத்காரணமான வஸ்து, சரீரத்தில் ஆசையை விடாமல் காண்பவர்களுக்கும், கேட்பவர்களுக்குமரிது, என்று. அல்லது எம் ஆதி காண்பு, ஆர்க்கு மரிது. என்னுடைய காரணவஸ்துவைப பார்ப்பது, யாருக்கும் முடியாதகாரியம் என்றும் பொருள் சொல்லலாம்.

அரிய புலனைந்தடக்கி யாய் மலர் கொண்டு, ஆர்வம்
புரிய பரிசினுற்புல்கில்—பெரியனாய்
மாற்ருது வீற்றிருந்த மாவலிபால், வண்கைநீர்
ஏற்ருனைக் காண்பமெளிது. (50)

| | |
|---|---|
| அரிய | அடக்குவதற்கரிதான |
| புலன்ஐந்து | ஐந்து பொறிகளையும் |
| அடக்கி | அடங்கும்படி செய்து |
| ஆய | ஆராய்ந்து பார்த்தெடுத்த |
| மலர் | புஷ்பங்களை |
| கொண்டு | (கையில்) தரித்துக் கொண்டு |
| ஆர்வம்புரிய | பக்தியினால் மிக்கதான |
| பரிசினால் | பிரகாரத்தால் |
| புல்கில் | அடையப்பார்த்தால் |

| | |
|---|---|
| பெரியனாய் | தன்னை உயர்ந்தவனாய் நினைத்து |
| மாற்றாது | தான் நினைத்ததைத் தவறாமல் செய்கிற |
| வீற்றிருந்த | மேன்மை தோன்றும்படி அமர்ந்திருந்த |
| மாவலிபால் | மஹாபலியினிடம் |
| வண்கை | அத்யுதாரமான கையில் |
| நீர் ஏற்றானை | தானஜலத்தை ஸ்வீகரித்தவனை |
| காண்பது | பார்ப்பது |
| எளிது | ஸுலபமாயிருக்கும் |

இப்பாட்டிலும் இந்திரியங்களை அடக்காதவனுக்கு அவனைக்காண்பதரிது என்கிறார்.

அரிய—சஞ்சலம் ஹி மந: க்ருஷ்ண பிரமாதி பலவத் த்ருடம் தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே வாயோரிவ ஸுதுஷ்கரம் என்று புயல்காற்றை அடக்குவதுபோல் அடக்கவரிதான மனத்துடன் கூடிய ஐம்புலன்களை அடக்கிக்கட்டி, நல்ல புஷ்பங்களைப் பறித்துக் கொண்டு பக்தி மேன்மேலும் வளரும்படி அவனை அர்ச்சித்தால், தான் பெரியோனென்றும், என்மனதில் தோன்றியதைச் செய்யாதிருக்க மாட்டேனென்றும், கர்வம் படைத்த மஹாபலியை அடக்கின பெருமானைக் காண்பது சுலபமான கார்யமென்கிறார்.

வண்கை எல்லாவுலகங்களுக்கும் ஸகல புருஷார்த்தங்களையும் கொடுத்து அத்யுதாரம் என்று பெயர்படைத்த கையால் தான் தான ஜலத்தையும் பெற்றான், இது என்ன நீர்மை! என்று வியப்பைக் காட்டுகிறது.

**எளிதிலிரண்டடியும் காண்பதற்கு, என்னுள்ளம்**
**தெளியத் தெளிந்தொழியும் செவ்வே—களியில்**
**பொருந்தாதவனைப் பொரலுற்று, அரியாய்**
**இருந்தான் திருநாமமெண்.** (51)

| | | | |
|---|---|---|---|
| என்னுள்ளம்! | என்மனமே! | ஆதலால் | |
| எளிதில் | ஸுலபமாக | | |
| இரண்டு அடியும் | (ஸர்வேசவரனுடைய) இரண்டு திருவடிகளையும் | களியில | கர்வத்தால் |
| | | பொருந்தாதவனை | தன்னைப பணியாமலிருந்த இரணியனை |
| காணபதற்கு | பார்க்கும்பொருட்டு | பொரல | போரபுரிந்து கொல்லுவதில் |
| தெளிய | (விஷயங்களால் நேர்ந்த கலக்கத்தை விட்டு நீ தெளிவடைந்தால் | உற்று | பிரயதனம செய்து |
| | | அரியாய் | நரசிங்கமாய |
| | | இருந்தான் | அவதரிததிருந்தவனுடைய |
| செவவே தெளிந்து ஒழியும் | (அவ்வீசவரனும) நமமிடததில் (கோபததைவிட்டு) பிரஸநநனுவான், | திருநாமம் | பெயர்களை |
| | | எண | நினைததிருப்பாயாக. |

இந்திரியஜயம் செய்து ஆர்வத்தால் அவனைத் தொழுதால் எளிதில் காணலாமென்றார் கீழ்ப்பாட்டில். ஆதலால் விஷயகாலுஷ்யங்களை விட்டுத்தெளிந்து அவன் திருநாமங்களை நினைப்பாய் என்று தன் திருவுளளததிற்கு உபதேசிக்கிறார். என்னுள்ளமே! நீ நம் ஸ்வாமியைக்கண்டு அநுபவிக்கக்கருதி மற்ற விஷயங்களினால் உண்டாகும் கலக்கத்தைவிட்டு தெளிவாயிரு. அவ்வீசனும் அநாதியாக அவன் ஆக்ஞையைமீறியதால் நம்மிடம் வைத்திருக்கும் சீற்றத்தை மாற்றி அநுக்ரஹிப்பவனாக ஆவன. ஸ்ரீப்ரஹ்லாதாழ்வான் தனது தெளிந்த திருவுள்ளத்தால் அவ்வெம்பெருமானையே தியானித்திருக்க ஈசனும் அவன் விரோதியான ஹிரணியனைப் போக்கி அவன் துக்கங்களைப் போக்கியருளினான் அல்லவா! அதுபோல் நம விரோதிகளும் கழியுமாறுநீ தெளிந்து பிரஹ்லாதனுக்கு அருள்புரிந்த நரசிங்கனுடைய நாமங்களை நினைத்துக்கொண்டிரு; என்று உபதேசித்தபடி.

என்னுள்ளம் என்பது அண்மைவிளி, என்னுள்ளமே என்று கூப்பிடுவதைக்காட்டும்.

**எண்மர் பதினொருவ ரீரறுவ ரோரிருவர்**
**வண்ணமலரேந்தி வைகலும்—நண்ணி**
**ஒருமாலையால் பரவியோவாது, எப்போதும்**
**திருமாலைக் கைதொழுவர் சென்று. (52)**

| | |
|---|---|
| எண்மர் | எட்டுவஸுக்களும் |
| பதினொருவர் | பதினொரு ருத்ரர்களும் |
| ஈர் அறுவர் | பனிரண்டு ஸூர்யர்களும் |
| ஓர் இருவர் | விலக்ஷணரான இரண்டு அசுவினீ தேவதைகளும் |
| வண்ணம் | அனேக நிறங்களையுடைய |
| மலர் | புஷ்பங்களை |
| ஏந்தி | எடுத்துக்கொண்டு |
| வைகலும் | தினந்தோறும் |
| நண்ணி | (நமஸ்வாமியின் ஸமீபத்தில்) கிட்டிவந்து |
| ஒரு மாலையால் | நிகரற்ற புருஷஸூக்தமாகிற மாலையால் |
| பரவி | ஸ்தோத்திரம்செய்து |
| ஓவாது | (ஒரு க்ஷணமும்) விடாமல் |
| எப்போதும் | எந்தஸமயத்திலும் |
| திருமாலை | லக்ஷ்மீபதியை |
| சென்று | சென்று கிட்டி |
| கைதொழுவர் | கைகூப்பி நிற்பார்கள். |

கீழேதன் நெஞ்சைக்குறித்து அவன் திருநாமங்களை எண்; என்றார். இப்பாட்டில் பிரஹ்மருத்ராதிகளும் அவனைத்தொழுதே மேன்மைபெற்றிருக்கிறார்கள் என்று சொல்லி யாவரும் அப்பரமனை தயானிக்கவேண்டியதென்பதை ஸ்தாபிக்கிறார்.

அஷ்டவஸுக்கள் ஏகாதச ருத்ரர்கள் த்வாதசாதித்யர்கள் அச்வினீ தேவர்களிருவர் ஆகிய தேவர்களெல்லாம் தினந்தோறும் பலவர்ணங்களுள்ள உயர்ந்த புஷ்பங்களைக்கொண்டு புருஷஸூக்தம் என்கிற ஒப்பற்ற சொன்மாலையைச் சொல்லிக்கொண்டு திருமாலைத் துதிசெய்து வணங்குகிறார்கள். இப்படி தேவர்கள் தங்களுடைய ஸ்தானங்கள் ஸ்திரமாய் இருக்கவேண்டுமென்றும் மேன்மேலும் உயர்ந்த நிலைகள் பெறவேணுமென்றும், தினந்தோறும் அவனை வணங்குகிறார்கள். இங்கு முப்பத்தி மூன்று தேவர்களைச்சொன்னது முப்பத்து முக்கோடிதேவர்கள் எல்லாரையும் சொல்வதற்கென்றே. பிரதானர்களைச்சொன்னால் மற்றவர்களும் அதற்குள் அந்தர்கதர்கள் என்ற கருத்துக்கிணங்கி ஸகல தேவர்களும் ச்ரிய:பதியை ஸேவிக்கிறார்கள் என்றபடி.

**சென்றால் குடையா மிருந்தால் சிங்காசனமாம்**
**நின்றால் மரவடியாம் நீள்கடலுள்—என்றும்**
**புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கு**
**மணையாம் திருமாற் கரவு.** (53)

| | | | |
|---|---|---|---|
| அரவு | திருவனந்தாழ்வான் (ஆதிசேஷன) | நீள் கடலுள் | விசாலமான திருபபாற்கடலில் |
| திருமாற்கு | திருமகள் கேள்வனுககு | என்றும் | எப்பொழுதும |
| சென்றால் | நடந்தால் | பூணை ஆம | தெப்பமாயிருப்பர் |
| குடை ஆம் | குடையாயிருப்பர் | மணிவிளககாம | ரதனதீபமாயிருப்பர் |
| இருந்தால | உட்கார்ந்தால் | பூமபட்டு ஆம | அழகிய பட்டாடையாயிருப்பா |
| சிஙகாசனமாம் | ஸிம்ஹாஸனமாயிருப்பர் | புல்கும் அணை ஆம | தழுவிககொள்வதற்குரிய மெதததையாயிருப்பர். |
| நின்றால் | எழுந்து நின்றால் | | |
| மரவடி ஆம | பாதுகையாயிருப்பர் | | |

கீழே பிரயோஜநாந்தரபரர்களான தேவர்கள் தொழுதமையைப்பேசினார். இப்பாட்டில் அவ்வீச்வரனைத்தவிர மற்றவர்களைச் சிறிதும் நினையாத நித்யஸூரிகள் செய்யும் கைங்கரியத்தைப் பேசுகிறார்.

சென்றால் திருவனந்தாழ்வான் ஸ்ரீய: பதியான புருஷோத்தமனுக்கு ஸர்வவிதசேஷவ்ருத்திகளையும் செய்கிறார். எம்பெருமான் நடந்துசெல்லவேணுமென்று நினைத்தால் அப்பெருமானது திருவுடம்பில் மழை வெயில் படாதபடி குடையான ரூபத்துடனிருந்து அவனை அநுபவிக்கிறார். உட்காரவேணுமென்று நினைத்தால் சிங்காசன வடிவமாயிருக்கிறார். நிற்கவேணுமென்று நினைத்தால் மரவடி என்கிற பாதுகைவடிமாக நிற்கிறார். பாற்கடலில் எக்காலத்திலும் ஆச்ரிதரக்ஷணார்த்தமாக சயனிக்கவேணுமென்று கருதினால் அழுந்தாத தெப்பமாயிருக்கிறார். ஏதாவது ஒரு வஸ்துவை காணவேணுமென்று கருதினால் ரத்னமயமான தீபமாய் நிறகிறார். அறையில் பரியட்ட முடுத்தவேணுமென்று நினைத்தால் உடனே திருப்பரியட்டவடிவமாகிறார். தழுவிக்கொள்ளவேணுமென்று நினைத்தால் தழுவணையாக (தலகாணி) மாறுகிறார். இப்படி திருமாலுக்கு அனந்தன் ஸர்வப்ரகாரத்தாலும் பணிவிடை செய்கிறார்.

சென்றால் எம்பெருமானை நீ நட; நீ உட்காரு; நீநில்; என்று சேஷன் நியமிப்பதில்லை. அவன் எது செய்யவேணுமென்று நினைக்கிறானே, அதை அறிந்து தான் அவ்வமயங்களுக்கு அனுகுணமான

| | | | |
|---|---|---|---|
| எண்மர் | எட்டுவஸுக்களும் | நண்ணி | (நம்ஸ்வாமியின்ஸமீபத்தில்)கிட்டிவந்து |
| பதினொருவர் | பதினொரு ருத்ரர்களும் | ஒரு மாலையால் | நிகரற்ற புருஷஸூக்தமாகிற மாலையால் |
| ஈர் அறுவர் | பன்னிரண்டு ஸூர்யர்களும் | பரவி | ஸ்தோத்திரம்செய்து |
| ஓர் இருவர் | விலக்ஷணரான இரண்டு அச்வினீ தேவதைகளும் | ஓவாது | (ஒரு க்ஷணமும்) விடாமல் |
| வண்ணம் | அனேக நிறங்களையுடைய | எப்போதும் | எந்தஸமயத்திலும் |
| மலர் | புஷ்பங்களை | திருமாலை | லக்ஷ்மீபதியை |
| ஏந்தி | எடுத்துக்கொண்டு | சென்று | சென்று கிட்டி |
| வைகலும் | தினந்தோறும் | கைதொழுவர் | கைகூப்பி நிற்பார்கள். |

கீழே தன் நெஞ்சைக்குறித்து அவன் திருநாமங்களை எண்; என்றார். இப்பாட்டில் பிரஹ்மருத்ராதிகளும் அவனைத்தொழுதே மேன்மைபெற்றிருக்கிறார்கள் என்று சொல்லி யாவரும் அப்பரமனை த்யானிக்கவேண்டியதென்பதை ஸ்தாபிக்கிறார்.

அஷ்டவஸுக்கள் ஏகாதச ருத்ரர்கள் த்வாதசாதித்யர்கள் அச்வினீ தேவர்களிருவர் ஆகிய தேவர்களெல்லாம் தினந்தோறும் பலவர்ணங்களுள்ள உயர்ந்த புஷ்பங்களைக்கொண்டு புருஷஸூக்தம் என்கிற ஒப்பற்ற சொன்மாலையைச் சொல்லிக்கொண்டு திருமாலைத் துதிசெய்து வணங்குகிறார்கள். இப்படி தேவர்கள் தங்களுடைய ஸ்தானங்கள் ஸ்திரமாய் இருக்கவேண்டுமென்றும் மேன்மேலும் உயர்ந்த நிலைகள் பெறவேணுமென்றும், தினந்தோறும் அவனை வணங்குகிறார்கள். இங்கு முப்பத்தி மூன்று தேவர்களைச்சொன்னது முப்பத்து முக்கோடிதேவர்கள் எல்லாரையும் சொல்வதற்கென்றே. பிரதானர்களைச்சொன்னால் மற்றவர்களும் அதற்குள் அந்தர்கதர்கள் என்ற கருத்துக்கிணங்கி ஸகல தேவர்களும் ச்ரிய:பதியை ஸேவிக்கிறார்கள் என்றபடி.

**சென்றால் குடையா மிருந்தால் சிங்காசனமாம்**
**நின்றால் மரவடியாம் நீள்கடலுள்—என்றும்**
**புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கு**
**மணையாம் திருமாற் கரவு.** (53)

| | | | |
|---|---|---|---|
| அரவு | திருவனந்தாழ்வான் (ஆதிசேஷன்) | நீள் கடலுள் | விசாலமான திருப்பாற்கடலில் |
| திருமாற்கு | திருமகள் கேள்வனுக்கு | என்றும | எப்பொழுதும் |
| | | புணை ஆம | தெப்பமாயிருப்பர் |
| சென்றால் | நடநதால் | மணிவிளக்காம | ரதனதீபமாயிருப்பர் |
| குடை ஆம் | குடையாயிருப்பா | | |
| இருந்தால | உட்கார்ந்தால் | பூமபட்டு ஆம் | அழகிய பட்டாடையாயிருப்பா |
| சிங்காசனமாம் | ஸிம்ஹாஸனமாயிருப்பா | | |
| நின்றால் | எழுந்து நின்றால் | புல்கும் அணை ஆம் | தழுவிககொள்வதற்குரிய மெதத்தையாயிருபபா. |
| மரவடி ஆம | பாதுகையாயிருப்பர் | | |

கீழே பிரயோஜனாந்தரபரர்களான தேவர்கள் தொழுதமையைப்பேசினர். இப்பாட்டில் அவ்வீச்வரனைத்தவிர மற்றவர்களைச் சிறிதும் நினையாத நித்யஸூரிகள் செய்யும் கைங்கரியத்தைப் பேசுகிறார்.

சென்றால் திருவனந்தாழ்வான் ஸ்ரீய: பதியான புருஷோத்தமனுக்கு ஸர்வவிதசேஷவ்ருத்திகளையும் செய்கிறார். எம்பெருமான் நடந்துசெல்லவேணுமென்று நினைத்தால் அப்பெருமானது திருவுடம்பில் மழை வெயில் படாதபடி குடையான ரூபத்துடனிருந்து அவனை அநுபவிக்கிறார். உட்காரவேணுமென்று நினைத்தால் சிங்காசன வடிவமாயிருக்கிறார். நிற்கவேணுமென்று நினைத்தால் மரவடி என்கிற பாதுகைவடிமாக நிற்கிறார். பாற்கடலில் எக்காலத்திலும் ஆச்ரிதரக்ஷணார்த்தமாக சயனிக்கவேணுமென்று கருதினால் அழுந்தாத தெப்பமாயிருக்கிறார். ஏதாவது ஒரு வஸ்துவை காணவேணுமென்று கருதினால் ரத்னமயமான தீபமாய் நிற்கிறார். அறையில் பரியட்ட முடுத்தவேணுமென்று நினைத்தால் உடனே திருப்பரியட்டவடிவமாகிறார். தழுவிக்கொள்ளவேணுமென்று நினைத்தால் தழுவணையாக (தலகாணி) மாறுகிறார். இப்படி திருமாலுக்கு அனந்தன் ஸர்வப்ரகாரத்தாலும் பணிவிடை செய்கிறார்.

சென்றால் எம்பெருமானை நீ நட; நீ உட்காரு; நீநில்; என்று சேஷன் நியமிப்பதில்லை. அவன் எது செய்யவேணுமென்று நினைக்கிறானோ, அதை அறிந்து தான் அவ்வமயங்களுக்கு அனுகுணமான

வடிவங்களை எடுத்துக்கொண்டு தொண்டு செய்கிறானென்பது சென்றால், இருந்தால், என்கிற பதங்களால் விளங்குகிறது.

என்றும் புணையாம் எப்பொழுதும் படுத்துக்கொள்ளும் மெத்தையாக இருப்பன் என்றும் பொருள் கூறுவதுண்டு.

மணிவிளக்காம் தூண்டுகோலுடைய உதவியை வேண்டாத ரத்னமயமான தீபம் என்றபடி. இங்கு அணி விளக்காம் என்றும் பத முரைப்பதுண்டு. அலங்காரமாயிருக்கும் விளக்கு என்பது பொருளாம்.

புலகும அணையாம் பெருமான் பிராட்டிமாாகளைப் பிரிந்திருக்கும் காலஙகளில் தான் அணைத்துக்கொள்ளவேணுமென்று கருதி பிராட்டிமார்களைக் காணமல் பரிதவிப்பாராம். அப்பொழுது அனந்தன் தழுவுமணையாயிருப்பனும் (தலகாணியாயிருப்பான்) அவ்வனந்தனை அணைத்துக்கொண்டு பிராட்டிமார்களின் பிரிவால் வந்த துயரத்தைமறப்பாராம்.

இப்படி ஸர்வவித கைங்கரியங்களையும் செய்தே அனந்தன் சேஷன் என்னும் பெயர் படைத்தான் என்பது இப்பாசுரத்தையடியொற்றிய ஸ்ரீமதாளவந்தார் அருளிச்செய்த நிவாஸ சய்யாஸன பாதுகாம்சுகோ பதான வர்ஷாதப வாரணாதிபி: சரீரபேதைஸ்தவ சேஷதாம் கதை: யதோசிதம் சேஷ இதீரிதே ஜனை: என்ற ஸ்தோத்ர ரத்ன ச்லோகத்திலும் கண்டுகொள்ளலாம்.

**அரவமடல்வேழ மான்குருந்தம் புள்வாய்**
**குரவை குடமுலைமற் குன்றம்—கரவின்றி**
**விட்டிறுத்து மேய்த்தொசித்துக்கீண்டு கோத்தாடி, உண்**
**டட்டெடுத்த செங்கணவன். (54)**

| | | | |
|---|---|---|---|
| செம் கண் அவன் | சிவந்த கண்களையுடைய திருமால் | விட்டு | (போாபுரிந்தபின்) உயிரோடு விட்டும் |
| கரவு இன்றி | மறைத்தலின்றி (யாவரும காணும்படி), | அடல் வேழம் | யுத்தத்திறகுவந்த குவலயாபீடமென்கிற யானையை |
| அரவம் | காளியன் என்கிற பாமபை | இறுத்து | முறித்தும் |

| | | | |
|---|---|---|---|
| ஆன் | பசுக்களை | முலை | (பூதனையின்) முலையை |
| மேய்த்து | மேய்த்தும் | உண்டு | (உயிரோடுகூட) புசித்தும் |
| குருந்தம் | குருக்கத்தி மரத்தை | மல் | கம்ஸனால் தூண்டப்பட்டுவந்த மல்லர்களை |
| ஒசித்து | முறித்துத்தள்ளியும் | அட்டு | கொலைசெய்தும் |
| புள்வாய் | பக்ஷியாய்வந்த பகாஸுரனுடைய வாயை | குன்றம் | கோவர்த்தனமென்கிற மலையை |
| கீண்டு | கிழித்தும் | எடுத்த | குடையாகத்தூக்கியதுமான இக்காரியங்கள் எல்லாவற்றையும் பார்த்தால் ... |
| குரவை | ராஸக்ரீடையில் | | |
| கோத்து | பெண்களினகைகளைக்கொத்துக்கொண்டும் | | |
| குடம் | குடங்களை எடுத்துக்கொண்டு | | |
| ஆடி | கூத்தாடியும் | | |

கீழே சொல்லியபடி, ஸர்வசேஷவருத்தியையும் செய்கிற திருவனந்தாழ்வானையும் விட்டுப்பிரிந்து, ஆச்ரிதர்களுக்காகத் தாழ்ந்து வந்து காரியம் செய்கிறான் என்கிற ஆச்ரிதர்களுக்கு அருள புரியும் தன்மை சொல்லப்படுகிறது இப்பாட்டில்.

அரவம் காளியன் பொய்கையில் கலங்கப்பாய்ந்து, அவனது ஐந்து முடிகளிலும் நின்று நடனம் செய்து மறுபடி அவனுக்கு அருள செய்து அக்காளியனை உயிரோடு விட்டும், கம்ஸனால் நிறுத்தப்பட்ட குவலயாபீடமென்கிற யானையின கொம்புகளை முறித்தடித்தும், பசுக்களை இனிது மறித்து மேய்த்தும், பூதது காய்த்திருந்த அஸுராவிஷ்டமான குருக்கத்தி மரத்தைச்சாயததுக் கீழே தள்ளியும், கொக்கின் வாயைப்பிளந்தும், கோபஸ்திரீகளோடு ராஸக்ரீடைசெய்தும், குடக்கூத்தாடியும், பேயின் முலையையுண்டும், மல்லரை மடியச்செய்தும், கோவர்த்தனத்தைக் குடையாத்தூக்கியது முதலான செயலகள், ஆச்ரிதர்கள் விஷயத்தில் அவனுக்குள்ள பேரன்பைக் காட்டவில்லையா ? அவன் படுக்கையிலும் பொருந்தியிராது நமக்காக வந்து, செய்வதறகரிய செயல்களை செயதமை யாவராலும போற்றததக்கதன்றோ! என்கிறார்.

இப்பாட்டின் முன்னிரண்டடிகளில் உள்ள பெயற்சொற்கள எல்லாம் பின்னடிகளில் உள்ள வினைச்சொற்களோடு சேர்ந்து

பொருள் கொடுக்கும் விந்தையை உற்றுநோக்கி அறியவேண்டும். இப்பாட்டைத் தமிழர்கள நிரனிறையணி யென்பார்கள்.

கீழ்ச்சொல்லிய கண்ணபிரானுடைய லீலைகளை இவ்வாழ்வார் மிகுந்த பகதியால் இடைவிடாது அனுபவித்திருக்கிற ப்ரகாரம் நமக்கு வியப்பைத்தருகிறது. ஒவ்வொரு செய்கையின் நடுவே ஒரு வினை முறறுச்சொல்லி முடித்துப்பிறகு அடுத்தசெய்கையைச் சொல்லவும் பொறுக்கமாட்டாமல் அடுக்கடுக்காக அவனது லீலைகள அநுபவிக்கப்பட்டன வென்பது இவரது கரைபுரண்ட காதலின் பெருமையை விளககுகிறது.

அவன் தமரெவ்வினைய ராகிலும், எங்கோ
னவன் தமரே யென்றொழிவ தல்லால்—நமன் தமரா
லாராயப் பட்டறியார் கண்டீர், அரவணைமேல்
பேராயர்க் காட்பட்டார்பேர். (55)

| | | | |
|---|---|---|---|
| அரவணைமேல | திருவனந்தாழ்வான் பேரில் கிடப்பவனும | எவ்வினையா ஆகிலும் | எநதவிதமான கருமங்களைச செயதவராயிருநதாலும |
| பேர் ஆயர்கரு | இடையர் தலைவனுயவதரிததவனுமான கண்ணபிரானுக்கு | எம்கோன் | எங்கள்ஸ்வாமியான |
| ஆட்பட்டார் பேர் | அடிமை பூண்ட பாகவதாகளுடைய பெயரைவைததுக கொண்டவர்களும் | அவன் தமரே'' | அப்பரமபுருஷனுடைய பகதர்களல்லவா |
| நமன தமரால் | யமனுடைய படர்களால், | என்று | எனறு புகழ்ந்து பேசிககொண்டு |
| "அவன் தமா" | அநநதஸாவேசவரனுடைய அடியார்கள் | ஒழிவது அல்லால் | தாஙகள் விலகிப் போகிறாகளே அல்லது |
| | | ஆராயப்பட்டு | இன்னா என்று ஆலோசிககப்பட்டு |
| | | அறியா கண்டீர் | அறியப்படாமலிருககிறாகள் பாராதீாகளா! |

கீழ்ப்பாட்டில் அவ்வீச்வரன் ஆச்ரிதர்களுக்காக வந்து காளியன் முதலிய விரோதிகளை ஒழித்தமை பேசப்பட்டது. அவன் விரோதிகளைத் தொலைப்பவனாதலால் அவனடியார்கள் விஷயத்தில்

யமதாமராஜனும அவனது படாகளும் நெருங்கமாட்டார்கள் என் கிறா இப்பாட்டில.

அவன் தமா அரவணைமேல் பள்ளிகொண்டு பிறகு கண்ணனுய வந்த பரமபுருஷனிடம் பக்திவாயந்த பாகவதாகளுடைய பெயரை ஒருவன் தனககுப் பெயராக வைத்துக் கொண்டால் அம் மனிதனை யமனும் அவனது தூதர்களும் நினைபபதேயில்லையாம். "அவர்கள் பாபங்களைச் செய்திருந்தாலும சரி. எபபடியிருந்தாலும் இருக்கட்டும். அவன், நமக்கு யார் ஸ்வாமியோ? அந்த புருஷோத்தமனுககு அடியன்," என்று சொலலிகொண்டு தாங்கள ஒதுங்கிப் போகிறார்களேயல்லது அவனை ஆராயந்து பார்பபதில்லை என்றபடி. இத்தால வாஸுதேவனடியார்களுக்கு யமபயமும் நராகாதிவாஸமும கிடையாதென்பது சொலலப்பட்டது. இவ்வாத்தம், தாமராஜன், என்னுடைய பாகமென்று எழுதிவைத்த பாபங்களை யெல்லாம் இப்பொழுது நினைக்கமுடியுமோ? என்று பொருள கொண்ட நமன், கூறு செய்துகோண்டு இறந்தகுறறமெண்ண வல்லனே. என்கிற திருமழிசைப்பிரான் பாசுரத்திலும் நாளும், கோடுவினை செய்யும் கூற்றின் தமர்களும் குறுககில்லார் என்கிற நம் மாழவார் பாசுரத்திலும் தெளியத் தென்படும்.

கமலநயன வாஸுதேவ விஷ்ணோ தரணிதராச்யுத சங்கசக்ர பாணே, பவசரணமிதீரயந்தி வாசம் தயஜ பட தூரதரேண தாந பாபாந். என்னும் பரிஹார மதுஸூதன ப்ரபந்நான் ப்ரபுரஹ மந்ய ந்ருணும் ந வைஷ்ணவாநாம் என்றும் ("தர்மராஜன பாசத்தை கையில் தரித்துக்கொண்டிருக்கும தனது தூதர்களைப்பார்தது "எம்பெருமான் நாமங்களை உக்சரிப்பவர்களைக் கிட்டாதே, அவர்களுக்கு வெகு தூரத்திலே செல். நாம அந்த வைஷ்ணவர்களுக்கு யஜமானர்கள் அல்ல" என்று) சொல்லுமதான பிரமாணங்களையும் இங்கு அனுஸந்திபபது.

ஆதலால் கிங்கரா தண்டபாசௌவா நயமோ நச யாதநா: ஸமர்த்தாஸ்தஸ்ய யஸ்யாத்மா கேசவாலம்பநஸ்ஸதா. யே ந்ருசம்ஸா துராத்மாந: பாபாசார ரதாஸ்ததா. தேபி யாந்தி பரந்தாம நரா நாராயணுச்ரயா: என்றபடி பரனடியார்கட்கு நரகாதிகள் இல்லையென்பதுடன் பரமபதப்ராப்தியும் ஸித்தமென்பது இப்பாட்டின்

திரண்டபொருள். "தாணியில் மன்னியயனூர் தனித்தவம் காத்த பிரான் கருணையென்னும் கடலாடி திருவணை கண்டதற்பின், திர ணாகு எண்ணிய சித்திரகுத்தன் தரித்துவைத்த, சுருணையிலேறிய சூழ்வினை முற்றும் துறந்தனமே" என்கிற ஸ்ரீதேசிகன் அருளிய பாசுரமும் இங்கு சிந்திக்கவமையும்.

பேராயாக்காட்டடார் பேர கண்ணபிரானிடம் அடிமைப்பட் டவர்களுடைய பெயரை வைத்துக்கொண்டவர்கள். பகவானையே சிந்தியாமலும் எபபொழுதும் தீவினைகளைச் செயதுகொண்டிருககும் ஸம்ஸாரியும் ஒரு பாகவதனுடைய 'பெயரை தனக்கு பெயராகக் கொண்டால, யமபடர்கள் அவனை அனுகமாட்டார்கள் என்றபடி. பேர் என்பதற்கு பேரை வகிப்பவர்கள் என்று இலக்கணையால் பொருள் கொளளவேணும்.

அல்லது பகவானுடைய அடியவர்களுடைய பெயரையே யம படர்கள், ஆராயமாட்டாாகள என்று கூறலாம். அப்பொழுது பேர் எனபதற்கு பெயர் என்று பொருள.

பேரே வரப் பிதற்ற லல்லாலெம் பெம்மானை
ஆரே யறிவா ரதுநிற்க—நேரே
கடிக்கமலத்துள்ளிருந்தும் காண்கிலான், கண்ணன்
அடிக்கமலந் தன்னை யயன். (56)

| | |
|---|---|
| பேரே வர | (நாம எதைசசொன்னாலும்) அதுபெருமான திருநாமமாகவே வாயில் வரும்படி |
| பிதற்றல் அலலால் | அடிககடி சொல்லிககொணடிருப்பதை தவிாதது |
| எம்பெம்மானை | நமககுநாதனை |
| ஆரே அறிவார் | எவாகள் அறியவல்லார்கள்? |
| அது நிற்க | அது கிடக்கட்டும |
| கடி கமலத துள் | வாஸனையுடன் கூடின நாபியிலுள்ள தாமரையில் |
| நேரே | எப்பொழுதும் |
| இருந்தும | வாஸமசெய்துகொண டிருநதும |
| அயன | பிரமதேவன் |
| கண்ணன் | கிருஷ்ணனுன ஸ்வாமியினுடைய |
| அடிக்கமலம தன்னை | திருவடிததாமரையை |
| காண்கிலான் | கண்டுஸேவிததவனில்லை. |

எம்பெருமானுக்கு ஆட்பட்டவர்களின் பெயரை நமன் தமர் அறியமாட்டாரென்றூர். ஆட்படுகையாவது என்? என்று சிலர் வினவ பதிலுரைக்கிறூரிப்பாட்டில்.

பேரே:—அவனுக்கு ஆட்படுகையாவது அவனுடைய பெயரை எப்பொழுதும் வாயால் பிதற்றிக்கொண்டிருப்பதுதான். அல்லது அவனுடைய பெருமையை உள்ளபடி அறிந்திருப்பதல்ல. அறியவும் முடியாது. உதாஹரணமாக நான்முகனை எடுத்துக்கொள்வோம். நான்குமுகங்களைப்பெற்றிருக்கிறுன். பார்க்கும் கருவியான கண்கள் எட்டு எண்ணிக்கையுள்ளனவாக இருக்கின்றன. தான் வாஸம் செய்யுமிடமும் பகவான் வாஸம் செய்யுமிடத்திற்கு வெகு தூரத்திலல்ல, அவனுடைய நாபியிலுண்டான தாமரைதான் வஸிக்குமிடம். அறிவினுலும் பரிபூரணன். நான்குவேதங்களை தவறுதலின்றி உரைப்பவன். கீழே குனிந்து பார்த்தால் பெருமானுடைய திருவடிகள் தென்படும். இங்ஙனம் ஸாதனங்களை பரிபூர்ணமாகப்பெற்ற பிரமதேவனே இன்னும் கண்ணனது திருவடிகளைக் காணவில்லையாம். நாம் எப்படி அறியமுடியும். அவன் பெருமையை உள்ளபடி முழுவதையும் அறிய முடியாது. ஸமுத்திரக் கரையில் குடிசைகட்டிக்கொண்டிருக்கும் செம்படவர்கள் ஸமுத்திரத்தை எவ்வளவு நீளம் அகலம் ஆழம் என்று அறிந்துவிட்டார்களா? நீளம் ஆழம் முதலியவை அளவிடமுடியாதவை என்று மாத்திரம் தெரிந்துகொள்ளலாம். அதுபோல் கருணைக்கடலாகிய நாராயணனுடைய திருவுடம்பில் கரைபோன்ற நாவிக்கமலத்தில் குடில்கொண்ட பிரமதேவன் அவன் பெருமையை அளவிட்டு அறியமுடியாது. அங்ஙனம் நம்மால் அறியப்போமோ? ஆதலால் அவன் திருநாமங்களை, அர்த்தம் தெரிந்தோ தெரியாமலோ வாயால் சொல்லிக்கொண்டிருந்தால் அவன் கிட்டிவந்து கிருபை செய்வான். எப்படித் தாயைவிட்டுப் பிரிந்த கன்று கத்தவே அதன் குரலைக் கேட்டு தாய் ஓடிவருகிறதோ அதுபோல் (வத்ஸம்கௌரிவ வத்ஸலா என்றபடி) நாம் அவன் பெயரைச்சொல்லி கூப்பிட்டால் அவன் நம் அருகே வந்து காப்பன் என்பதாம். ஆதலால் அவன் பெயரைச் சொல்வதாகிய அடிமையை யாவரும் செய்யவேண்டுமென்று உபதேசிக்கப்பட்டது.

அயனின்ற வல்வினையை யஞ்சினே னஞ்சி
உயநின் திருவடியே சேர்வான்—நயநின்ற
நன்மாலைகொண்டு நமோ நாரணவென்னும்
சொன்மாலை கற்றேன் தொழுது. (57)

| | | | |
|---|---|---|---|
| அயல் நின்ற | எனக்கு ஸமீபத்தில் நின்றுகொண்டு இருக்கிற | நயம நின்ற | இன்பம் மிகுந்திருக்கிற |
| வல் வினையை | கொடியபாபங்களைக் கண்டு | நல்மாலை கொண்டு | இத்திருவந்தாதியாகிற நல்ல சொல்மாலையைக்கொண்டு |
| அஞ்சினேன் | பயமடைந்தேன் | தொழுது | ஸேவித்து |
| அஞ்சி | பயப்பட்டு | நமோ நாரண என்னும் | திரு வஷ்டாக்ஷரமென்கிறமந்திரமாகிற |
| உய | நான்க்ஷேமத்தைய டைந்து | | |
| நின் | உன்னுடைய | சொல்மாலை | சொற்களின்வரிசையை |
| திருவடியே | திருவடிகளை | | |
| சேர்வான் | சேரவேண்டுமென்று (நினைத்து) | கற்றேன் | அப்யாஸம்செய்தேன். |

தான் எம்பெருமானுக்கு ஆட்பட்டதைப் பேசுகிறார்

அயனின்ற:—நான் அநாதிகாலமாகச் செய்துவைத்த பாவங்கள் என்னருகே நெருங்கிக்கிடக்கின்றன. என்னைப் பலவிதமாகத் துன்பப் படுத்துவதற்கென்றே காத்துக்கொண்டிருக்கின்றன. அவைகளினால் நமக்கு என்ன துயரங்கள் விளையப்போகின்றனவோ என்று மிகவும் பயமடைந்தேன் பயந்தவுடன் இப்பாவங்களுக்கு அகப்படாமல் தப்பி நாம் உஜ்ஜீவிக்கவேணுமென்று நினைத்தேன். உன் திருவடியை யடைந்து க்ஷேமத்தைப் பெறவேணுமென்று கருதினேன். அதனால் உன்னைப் பிரதிபாதிக்கக்கூடிய இன்பமிகு பாடல்களால் உன்னை பாடித்துதித்தேன். உன்னைச்சொல்லக் கூடிய திருமந்திரம் என்கிற எட்டெழுத்தையும் கற்றேன். இப்படி என் ஆத்மோஜ்ஜீவனார்த்தம் அவன் திறத்தில் வாசிக கைங்கர்யத்தைச் செய்தேன். என்றாராயிற்று.

நயம் நின்ற எட்டெழுத்தான திருமந்திரத்தின் பொருளைக் கூறுகின்ற சொன்மாலை என்றும் சொல்லலாம்.

நன்மாலைகொண்டு இப்பிரபந்தத்தால் நமோ நாராயணவென்னும் மந்திரத்தைக் கற்றேன் என்பதாம். இத்தால் இப்பிரபந்தம் திருமந்திரத்தின் அர்த்தத்தை விளக்குகிறது என்பது தெளியவருகிறது.

திருமந்திரத்தில் சொல்லிய ஸ்வரூபம் உபாயம் புருஷார்த்தம் முதலிய விஷயங்கள் இதில் விசதமாகக் கூறப்படுவதால் இப்பிரபந்தம் திருமந்திரத்தின் கருத்தை உட்கொண்டதாகவேயாகும்.

**தொழுது மலர் கொண்டு தூபம் கையேந்தி**
**எழுது மெழு வாழி நெஞ்சே—பழுதின்றி**
**மந்திரங்கள் கற்பனவும் மாலடியே கைதொழுவான்**
**அந்தரமொன்றில்லை யடை.** (58)

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சே | என்மனமே | மந்திரங்கள் | பகவத்வாசகமான மந்திரங்களை |
| மலர் கொண்டு | புஷ்பங்களை எடுத்துக்கொண்டும் | கற்பனவும் | அப்யஸிப்பனவும் |
| தூபம் கை ஏந்தி | கையிலே தூபத்தை தரித்துக்கொண்டும் | மால் அடி கைதொழுவான் ஏ | திருமால் திருவடிகளுக்கு பணிவிடை செய்வதற்காகத் தான். |
| தொழுது | ஸேவித்து | | ஆகையால் |
| எழுதும் | உஜ்ஜீவிப்போம் | அந்தரம் ஒன்று இல்லை | நாம் தாமதிப்பதற்கு நேரமில்லை |
| எழு | நீ எழுந்திரு! | அடை | (சீக்கிரம்) அவனை சேர்வாய் |
| வாழி | இந்த ஸம்பத்துடன் நீ நீடூழி வாழ்க | | |
| | (ஏனெனில்) | | |
| பழுதின்றி | குற்றமின்றி | | |

தம் நெஞ்சைக் கூப்பிட்டு உபதேசிக்கிறார்.

தொழுது:—என் மனமே! நாம் உயர்ந்த புஷ்பங்களை எடுத்துக்கொண்டு, தூபத்தையும் கையிலேந்திக்கொண்டு, மற்றுமுள்ள பூஜோபகரணங்களுடன் எம்பெருமானை ஸேவித்து ஆத்மலாபத்தை அடைவோம். எழுந்திரு; என்று உபதேசித்தார். உடனே அவரது மனம் ஆழ்வார் உபதேசித்தபடியே பகவத்குணாநுபவம் செய்வதற்காக எழுந்து நின்றது. அதைக்கண்டு மகிழ்ந்த ஆழ்வார் அதை வாழ்த்துகிறார். இந்த பகவத் பஜனமாகிற ஐச்வர்யத்துடன் நீ நெடுங்காலம் வாழ்வாயாக; என்றார். நீர் எதற்காக இப்படி

சொல்லுகிறீர் என்று மனம் வினவ, அதற்கு பதிலுரைக்கிறார் பின்னடிகளால். குருகுலவாஸம் செய்து முறைப்படி சந்தைசொல்லி கற்கிற மந்திரங்களெல்லாம் திருமால் திருவடிகளில் பணிவிடை செய்வதற்காகவேயலலவா? ஆதலால் நாம் எழுந்து அவனைப் பணிவோம். இப்பொழுது என்ன முடை? சிறிதுகாலம் போகட்டும் என்று சொல்லாதே. நாம் தாமதிக்கக் காலமில்லை. ஒரு நொடிப் பொழுதும் விடாமல் அவனை அநுபவிக்கவேணும். ஆதலால் எழுந்திரு; என்றார்.

**அடைந்த வருவினையோ டல்லல் நோய் பாவம்**
**மிடைந்தவை மீண்டொழிய வேண்டில்—நுடங்கி**
**டையை**
**முன்னிலங்கை வைத்தான்முரணழிய, முன்னொருநாள்**
**தன் விலங்கை வைத்தான் சரண். (59)**

| | |
|---|---|
| அடைந்த | நம்மைப்பற்றிககிடக்கிற |
| அரு | அருமையான |
| வினையோடு | பழயபாபங்களோடு |
| அல்லல் | மனத்துயரங்களும் |
| நோய் | வியாதிகளும் |
| பாவம் | இப்பொழுது செய்யப்படுகிற புதிய பாபங்களும |
| மிடைந்தவை | இப்படி ஆத்மாவை ககிட்டியிருககிறவைகளெலலாம் |
| மீண்டு ஒழிய வேணடில் | நம்மைவிட்டு விலக வேணுமென்று விரும்பினுல் |
| முன் | முன்பொருகால் |
| நுடங்கிடையை | துவள்கிற இடுப்பையுடைய ஸீதாப்பிராட்டியை |
| இலங்கை வைத்தான் | இலங்காபுரியில் சிறைவைதத இராவணனுடைய |
| முரண் அழிய | வலிமை அழியும்படியாக |
| முன் ஒரு நாள் | முன் ஒருகாலத்தில் |
| தன் வில் | தன்னுடையவில்லை |
| அம கை வைத்தான் | அழகான திருககையிலே வைதத இராமபிரானே |
| சரணம் | உபாயமாயிருப்பான் |

திருமாலடிகளுக்குத் திருவாராதனம் செய்வதற்குப் பிரதிபந்தகங்கள் பல கிடக்கின்றனவே! அவை எப்படித்தொலையும் என்று வினவ, எல்லாவற்றையும் அவனே போக்கித் தருவன் என்கிறார்.

அடைந்த :— அநாதியாகவந்த சரீரஸம்பந்தத்தாலே செய்து வைத்திருக்கிற ப்ராசீன பாபங்களும், மனோவ்யாதிகளும், பாபங்க

ளால் வரக்கூடிய சரீரவ்யாதிகளும், இப்பொழுதிருக்கிற சரீரத்தைக் கொண்டு செய்யப்படும் புதிய பாபங்களும் மறுபடியும் நம்மிடம் வாராமல அடியோடு தொலையவேண்டுமென்று நினைத்தால், முன்பு ஸீதாப்பிராட்டியைப் பிரித்து இலங்கையில் சிறையாவைத்த இராவணனுடைய மிடுக்கை அழித்த, வில்லைக்கையிலேந்தின இராமபிரானைச் சரணமாகவடையவேண்டும். வேறு வழியில்லை என்றபடி.

பிராட்டியைப்போல் பெருமானால் உகக்கப்பட்ட ஜீவனை இராவணனைப்போல் நாம் (நமக்கு ஸொந்தமென்றும், அவனுக்கடிமையில்லையென்றும் நினைத்தால்) பெருமானைவிட்டுப்பிரித்தால், இராவணன் பட்டபாடு படுவோமென்றும், நாம் ஜீவாத்மாவைப் பெருமானிடம் ஸமர்ப்பித்தால் பிராட்டியின் விரோதியான ராவணாதிகள் அழிந்ததுபோல் நம் விரோதிகளும் ஸ்ரீராமனுடையவருளால் தொலைந்துபோம் என்பது ஸூசிதம்.

**சரணா மறை பயந்த தாமரையானோடு**
**மரணாய மன்னுயிர்கட்கெல்லாம்—அரணாய**
**பேராழிகொண்ட பிரானன்றி மற்றறியாது**
**ஓராழி சூழ்ந்த வுலகு.** (60)

| | | | |
|---|---|---|---|
| சரண் ஆம் | எல்லாருக்கும ஹிதத்தைபோதிக்கிற | பேர் ஆழி கொண்ட | பெரிய திருவாழியைத் தரித்த |
| மறை | வேதத்தை | பிரான் அன்றி | உபகாரகனானபெருமானையல்லது |
| பயந்த | வெளிப்படுத்தினவரான | மற்று | அவனைக்காட்டிலும் வேறான |
| தாமரையானோடு | பிரமதேவனோடு | ஓர் ஆழி சூழ்ந்த | ஒப்பற்ற கடலால் சூழப்பட்ட) |
| மரணாய | மரணத்தை இயல்பாகவுடைய | உலகு | இவ்வுலகம் (இப்புவியுள்ளார்) |
| மன் | நித்யமான | அறியாது | தெரிந்துகொள்ள முடியாது. |
| உயிர்கட்கு எல்லாம் | எல்லா ஜீவராசிகளுக்கும் | | |
| அரண் ஆய | காப்பாற்றும் விதங்களை | | |

ஸம்ஸார துக்கங்களைத் தொலைக்கவேணுமென்றால் ஸ்ரீராமபிரான் திருவடிகளை சரணமாக வரிக்கவேணுமென்றார் கீழ்ப்பாட்டில்.

மற்ற ப்ரஹ்ம ருத்ராதி ஜீவாகளை ஆச்ரயித்தால ஸம்ஸாரத்தை விலக்க முடியாதோ? என்கிற கேள்வை பிறக்க, அதற்கு பதிலுரைக்கிறார் போலும் இப்பாட்டில்.

சரணுமறை:—நாம நம்முடைய கீழ்நாட்களில் என்னசெய்தோமென்று தெரிய சக்தியுடையவரல்லோம். இப்பொழுது படுகிற துன்பங்கள் எல்லாம் எதனுல் ஏற்பட்டவை என்று அறியவல்லரிலலே. இனி வரப்போகிற துக்கங்களும் இன்னவை என்றும் இன்னகாரணத்தாலென்றும் தெளியவல்லரில்லை. இவைகளைத் தெரிந்துகொண்டாலன்றோ இவைகளை வேரறப் பரிஹரிக்கலாம். இவைகளெல்லாம் நமக்கும் தெரியமுடியாத விஷயம். தவத்தாலுயர்ந்த ப்ரஹ்ம ருத்ராதி ஜீவர்களுக்கும் அறியமுடியாதவையே. "தாந்யஹம் வேதஸாவாணி நத்வம் வேத்த பரந்தப" என்று கீதை. இப்படி பிரமன் முதல் புற்பூண்டுகளளவாயுள்ள ஸகல ஜீவன்களுடைய துக்கங்களையும் அவைகளின் காரணங்களையும் அவைகளைத் தொலைக்கும் உபாயங்களையும் அறிந்தவன் சத்ராஞன ஸ்ரீய: பதி ஒருவன் தான். அவனைத்தவிர பெரிய ஸமுத்ரத்தால் சூழப்பட்ட உலகனைத்தும் அறிந்ததில்லை. அறியவும் இயலாது. ஆதலால் பிரமதேவன் முதலான எல்லா ஜீவாசிகளும் ஸம்ஸாரம்தொலையவேண்டில் ஆழியானையே அரணுக அடையவேணுமென்றபடி.

சரணு:—யோப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோவை வேதாம்ஸ்ச ப்ரஹிணோதி தஸ்மை என்றபடி ஸர்வேச்வரனுல் உபதேசிக்கப்பட்ட வேதத்தை உலகத்தார்க்கு வெளிப்படுத்தின பிரமன் என்றபடி. இவ்வடைமொழியால் நாம் தெரிந்துகொளவதுயாதெனில்; எல்லார்க்கும் ஹிதமென்றுபதேசித்த வேதத்திலும் கீழே சொல்லியவர்த்தம் தான் சொல்லப்பட்டிருக்கிறது. பிரமன் முதலாக யாவருமம அவ்வேதத்தை தினந்தோறும் சொல்லிக்கொண்டிருப்பினும், அதில் சொல்லப்பட்ட பொருளையறிந்து பெருமானை ஒருவரும் அடையவில்லையே! என்று ஆழ்வார் நெஞ்சாரல் படுகிறுரென்பது.

மரணுய:—ஜகத்திலுள்ள உயிர்களெல்லாம் அழியுமியல்புள்ளன. ஆப்ரஹ்ம ஸ்தம்ப பர்யந்த ஜகதந்தர் வ்யவஸ்திதா: |

ப்ராணிந. கர்மஜநித ஸம்ஸாரவச வர்திந: | என்றபடி பிரமன் முத லான ஜீவர்களெல்லாம் ஸம்ஸாரிகளாதலால் மரணத்தையுடையவர் கள். ஒவ்வொருவர்களுடைய சரீரமும் உயர்ந்ததாயிருப்பினும் சரி, தாழ்ந்ததாயிருப்பினும் சரி, அழியக்கூடியதுதான். ஆதலால் அழியக்கூடிய சரீரம் தொலையும்படிக்கும் மீண்டும் வாரதபடிக்கும் நாம் காரியம் செய்யவேண்டியதவசியம் என்று தோன்றுகிறது.

பேராழிகொண்ட:—ஒரு குடும்பத்தில் ஒருவனுக்கு வியாதிவந் தால், அவ்வியாதியைப் போக்குவதற்கு, அக்குடும்பத்தில் பழகினவ னையும், அக்குடும்பத்திலுள்ளவர்களுடைய தேஹ ஸ்வாபங்களை அறிந்தவனையும், வியாதிகளைப் போக்கும் திறமை வாய்ந்தவனுமான வைத்யனை உலகத்தார் தேடுகின்றார்கள், நாமும் கண்டிருக்கிறோம், அதுபோல் நாம் இது வரையில் எவ்வளவு சரீரங்களை எடுத்திருக்கி றோமோ; அவ்வளவு சரீரங்களிலும் இப்பவும் அந்தர்யாமியாக நம் மோடு கூடவிருந்துகொண்டு நம் ஸ்வாபங்களையும் நாம் செய்த காரி யங்களையும் அறிந்துமிருக்கிற பரமபுருஷனைத்தான் இப்பிறவியென் னும் நோய் நீங்குவதற்குச் சரணாக வரிக்கவேணுமென்பது விளங் கும். நம் வியாதிகளை ஒழிக்க அவன் கையிலேதரித்த திருவா ழியே அமையும் என்றபடி.

பேராழி:—கீழ்ப்பாசுரத்தில் ஸ்ரீராமபிரானே சரண், என்று கூறியதால், இங்கு 'பெரிய கடலை தனக்கு வசமாக்கிக்கொண்ட; என்றும் பொருள கூறலாம். இலங்கை சேருவதற்கு இடையூறா யிருந்த கடலையும் தனது வலிமையால் தனக்கு ஸ்வாதீனமாக்கிக் கொண்டதுபோல், கடல்போன்ற நம் வினைகளையும் ஸ்வாதீனமாக் கிக்கொண்டு (நம்மிடம் ஸம்பந்திக்காதபடி ஸங்கல்பித்து) நமக்கிஷ் டத்தைக்கொடுப்பன் என்பதாம்.

அரணாய—ஹிதத்தை, பிரான் அன்றி ஓராழி சூழ்ந்த உலகு அறியாது. என்றந்வயம். அவனைத்தவிர மற்ற ஜீவர்கள் எவருக்கும் ரக்ஷணோபாயம் தெரியாது. எருத்துககோடியுடையானும் பிரமனு மிந்திரனும்; மற்றுமொருத்தரும் இப்பிறவியென்னும் நோய்க்கு மருந் தறிவாருமில்லை என்ற பாசுரம் இங்கு நினைக்கத்தகும்.

உலகு முலகிறந்த வூழியும், ஒண்கேழ்
விலகு கருங்கடலும் வெற்பும்—உலகினில்
செந்தீயும் மாருதமும் வானும், திருமால் தன்
புந்தியிலாய புணர்ப்பு. (61)

| | | | |
|---|---|---|---|
| உலகும் | லோகங்களும | செந்தீயும் | சிவந்த நிறமுள்ள தேஜஸ்ஸுகளும் |
| உலகு இறந்த | லோகங்களெல்லாம் செற்றுககிடககிற | மாருதமும் | காற்றும |
| ஊழியும் | பிரளயகாலமும | வானும் | ஆகாசமும |
| ஒண் | மனோஹரமான | | இவைகள் எல்லாம் |
| கேழ் | வர்ணத்தையுடைய | திருமால்தன் | திருமகள் கொழுந னுடைய |
| விலகு | (அலைகள்) எறிகிற | புந்தியால் | ஸங்கல்பத்தால் |
| கருகடலும் | கருப்பு நிறமுள்ள ஸமுத்திரமும் | ஆய | உண்டுபண்ணப் பட்ட |
| வெற்பும் | பர்வதங்களும் | புணர்ப்பு | ஸிருஷ்டிகள். |
| உலகினில் | இவ்வுலகங்களில் காணப்படுகிற | | |

நம்முடைய நன்மைகளை நாமறியாமைக்கும் ஈச்வரன் அறிந்தமைக்கும் தகுந்த காரணம் காட்டுகிறார் இப்பாட்டில்.

உலகும்:—இவ்வுலகமும், உலகமடங்க நசித்துப்போன அப்பிரளயகாலமும், கடலும், மலைகளும், மற்றுமுள்ள பஞ்சபூதங்களும், திருமகள் நாதனுடைய ஸங்கல்பத்தால் படைக்கப்பட்டவைகளன்றோ; ஆகவே எவன் இவைகளைப்பெற்றானோ அவனே இவைகளின் நன்மைகளையும் அறிந்தவன். தன் ஆக்ஞையை மீறி நடந்த உலகங்களைக்கண்டு கோபித்துக்கொண்டு சிறிதுகாலம் இந்த ஜீவராசிகள் தமஸ்ஸோடே சேர்ந்து அறிவின்றிக்கிடக்கட்டும் என்று எண்ணி எல்லாப்பொருள்களையும் அழித்தான். பிறகு அவனே, ஐயோ! இவர்கள் அசேதனம்போல சிறிதும அறிவின்றிக் கிடக்கிறார்களே! என்று இரக்கமகொண்டு, அவனுடைய பணிவிடைகளுக்குத் தகுதியான கை, கால் முதலிய அவயவங்களோடுகூடிய தேஹத்தைக் கொடுத்தான். நாம் அப்பொழுது எதைக்கண்டோம், என்ன நன்மையை அறிந்தோம். எதைத்தான் தேடிவைத்துக் கொண்டோம். ஆதலால் பிரளயகாலத்தில்போல் இப்பொழுதும்

நாம் அறிவிலர் தாம். "என்னால் செயற் பாலது என்" என்றே நினைக்கவேண்டியவா தாம். ஆதலால பிரளயத்திலும் பிறகும் நம்மைத் தம் வயிற்றில் வைத்துககொண்டும நமக்கு போக ஸாதனங்களான, பஞ்சபூதங்கள முதலியவைகளையும் படைத்தும், நம்மைக்காத்தவன் தான் என்றைக்கும் நமமுடைய நன்மையை அறிந்தவன்: மற்றவர்களல்லர், என்று முன் பாசுரத்தோடு கூட்டிக் கொள்க.

திருமால்தன்:—பிரஜைகள் விஷயத்தில் தாய்க்காக விரங்கும் பிதாவைப்போல் பிரளயத்தில் துக்கப்படுகிற ஜீவன்களாகிற பிரஜைகளைப்பார்த்துப் பிராட்டி துக்கப்பட, அவளுடைய ப்ரீதிக்காக மீண்டும் தன் ஸங்கல்பத்தால் ஸ்ருஷ்டித்தான் என்று உணர்க.

புணர்மருதி னூடுபோய்ப் பூங்குருந்தம் சாய்த்து
மணமருவ மால்விடையேழ் செற்று—கணம்வெருவ
ஏழுலகும் தாயினவு மெண்டிசையும் போயினவும்
சூழரவப் பொங்கணையான் தோள். (62)

| | | | |
|---|---|---|---|
| புணா | ஒன்றோடொன்று சோநதிருககிற | கணம வெருவ | எலலாப் பிராணிகளுடைய கூட்டஙகளும் பயப்படுமபடி |
| மருதின் | (இரணடு) மருதமரங்களின் | ஏழுலகும | ஏழுலோகஙகளில் |
| ஊடுபோய் | நடுவில்சென்று | தாயினவும் | தாவிப்போனவையும |
| பூமகுருந்தம | புஷ்பிததிருந்த குருககததிமரததை | எணடிசையும | எடடுதிககுகளிலும் |
| சாயதது | கீழே தள்ளி | போயினவும | சென்றவையும் (எவை எனறு வினவினால்) |
| மணம் மருவ | நப்பின்னையோடு விவாஹம நடப்பதறகாக | சூழ் அரவம | பாரந்துகிடககிற திருவனந்தாழ்வானை |
| மால் | பெரிய | பொஙகு | உயர்நத |
| எழ விடை | ஏழு ரிஷபங்களையும | அணையான் | படுககையாகவுடைய பெருமானுடைய |
| செற்று | கொன்று | தோள் | திருததோள்களே. |

உலகங்களெல்லாம் அவனுடைய படைப்பு என்றார் கீழில். இதில் காப்பது மவனது செய்கை எனகிறார்.

புணர்:— இக்காலத்தில் நம்மைப் பிரஜைகளாகக் கொண்ட அரசர்களின் நிலைமையை ஆராய்வோம். அரசன என்ற பேர் படைத்தபின் உயர்ந்த அரண்மனையில ஸர்வவிதபோக ஸாதனங்களுடன் ஸுகமாகப் பொழுதுபோககுகிறார்கள். உயர்ந்த ரத்னங்களாலிழைக்கப்பட்ட சிங்காசனங்களில முத்துக்களால் அலங்கரிக்கப்பட்ட வெண்குடையின் கீழ் வீற்றிருக்கின்றார்கள். பிரஜைகளுக்காக ஊர் ஊராகத் திரிந்துகொண்டு வெய்யிலுக்காகக்குடைபிடித்துக் கொளளுமு அரசர்களைக் காணேம்: அரசன் என்று தோன்றுவதற்காக சிங்காசனததின்மேல் நிழலில் குடைபிடித்த அரசர்கள்தான் அகப்படுவார்கள். அங்ஙனமின்றி நம் ஸர்வேச்வரன் படும் பாட்டைப் பாருங்கள்; இவ்வுலகங்களைப் படைத்தாய்விட்டது. இனியவைகள எப்படியாவது பிழைத்துப் போகட்டும் என்று இராமல் அவனும் அலைந்து திரிவதைப் பாாக்கவேணும். குளிர்த்தி—நாற்றம்—மணம் இவைகளுக்கு ஊற்றுககாலான அனந்தனைப் படுக்கையாககொண்டும் அவனில் உறங்கப்பெற்றிலன். இவ்வுலகில் கண்ணனுய வந்து மருதமரங்களினிடையே தவழ்ந்தான். புஷ்பித்திருந்த குருக்கத்திமரத்தைச் சாய்த்துத் தள்ளினன். ஏழு ரிஷபங்களைக் கொன்றான். ஏழுலகங்களையும் அளந்தான். திசைகளில் தாவினன் என்ன பாடு படுகிறான். அவனுடைய ரக்ஷணப்ரகாரம் நம்மை அடிமையாக்குகிறது என்றபடி.

உலகில் தன் வடிவத்தை மறைத்துக்கொண்டு ஏமாற்றும் அஸுரர்களைப் போக்கியருளிய உபகாரம முதலடியில் சொல்லப்பட்டது. பிராட்டிமார்க்கு வந்த பிரதிபந்தகங்களைப் போக்கியது இரண்டாமடியில் சொல்லப்பட்டது.

இந்திரனுக்காகச் செயத வுபகாரம் மூன்றாமடியில் சொல்லப்பட்டது. ஆகவே இப்பாட்டில அவன் நாட்டாருக்காகப் பாடு படுவது என்ற மஹாகுணம் வரையப்பட்டதாயிற்று.

கீழே சொலலப்பட்ட செயகைகளிலெல்லாம் அவனுடைய திருக்கைகளே பிரதானங்களாக நின்றமையால் எல்லாவற்றையும் அவனுடைய திருக்கைகளிலேயே ஏறிட்டுச் சொன்னபடி.

மருதமரங்களினிடையே கண்ணன் தவழ்ந்துசென்றபடியால், தவழ்ந்துபோவதற்குக் கைகள் உதவியாயிருப்பதால் மருதினிடை போனது தோளகளாகும்.

மரத்தைச் சாய்ப்பது கைகளாலாகக்கூடிய செய்கையாதலால் பூங்குருந்தம் சாய்த்தது தோள்கள்.

ரிஷபங்களை யடக்குவதும் கைகளால் செய்யும் கார்யமேயாதலால் மால்விடைசெற்றதும் தோள்கள்.

இருகைகளையும் கட்டிவிட்டால் வேகமாய்நடப்பது முடியாது. கைகளை வீசிக்கொண்டு நடந்தால் விரைவில் செல்லலாமாதலாலும், மாவிலியிடம் கையால் மண்ணிரந்த பின்பே, உலகங்களை அளக்கச்சென்றபடியாலும் உலகம் தாயனவும் திருத்தோள்கள். திசைகளனைத்தும் தன்னதென்று காட்டும்படி கைகளைத் திசைகளில் நீட்டியபடியால் எண்டிசையும் தாயனவும் தோள்கள என்றபடி.

தோளவனை யல்லால் தொழா, என்செவியிரண்டும்
கேளவன தின்மொழியே கேட்டிருக்கும்—நா நாளும்
கோணாகணையான் குரைகழலே கூறுவதே,
நாணாமை நள்ளேன் நயம். (63)

| | | | |
|---|---|---|---|
| தோள் | கைகள | நாளும | எப்பொழுதும |
| அவனை அல்லால் | அந்த ஸர்வேச்வரனைத்தவிர மற்றவரை | கோள் நாக | மிகுந்த பலத்தையுடைய சேஷனை |
| தொழா | ஸேவிக்கிறதில்லை | அணையான் | படுக்கையாகவுடைய ஸ்வாமியின் |
| என் | என்னுடைய | | |
| செவி இரண்டும் | இரண்டு காதுகளும் | குரை-கழலே | சப்திக்கிற திருவாபரணங்களையுடைய திருவடிகளையே |
| கேள் அவனது | பந்துவான அவனுடைய | கூறுவது | சொல்லிக்கொண்டிருக்கிறது |
| இன்மொழியே | மதுரமான வார்த்தைகளையே | நாணாமை | வெட்கமில்லாமல் |
| | | நயம் | விஷயங்களை |
| கேட்டு இருக்கும் | கேட்டுக்கொண்டு இருக்கும் | நள்ளேன் | ஆசைப்பட மாட்டேன் |
| நா | எனது நாக்கு | | |

இப்படி ரச்வான் எளியனானமைகண்டு என்னுடைய இந்திரியங்கள் அவனையே நோக்கி நிற்கின்றன வென்கிறார்.

தோளவனை:—நான என்தோளகளுக்கு வேறொரு பொருளைக் குறித்துத் தொழும்படி ஏவினாலும், தோளகள் அவனையல்லது மற்றவனைத் தொழமாட்டேன் எனகின்றன. நான் புறம்பே சில வார்த்தைகளைக் கேட்க நினைத்தாலும காதுகள அவனுடைய கலயாண குணங்களைத்தவிர மறறவைகளைக் கேட்பதில்லை. அவன தின்மொழிகளிலேயே படுகாடுகிடக்கின்றன. எனது நாக்கும பாம்பணையான் திருவடிகளைப்பறறியே பேசிக்கொண்டிருக்கிறது. ஆதலால் என் இந்திரியஙகள என் ஸம்மதியன்றியே பகவத பரவணங்களாகவே நான் இனி உலகத்தாரைப்போல் விஷயங்களை அநுபவிக்கவேணுமென்று கனவிலும் கருதமாட்டேன என்கிறார்.

கோள நாக அணையான்:— தயா ஸஹஸ்ரஸீக மனநதபோகிநி ப்ரக்ருஷ்ட விக்ஞான பலைகதாமநி எனறபடி பிராட்டியையும் பெருமாளையும் வஹிக்கும்படியான பலத்தையும் பரப்பையுமுடைய அனந்தன மேல பளளிகொண்டவன்.

குரை கழல்:—அணியப்பட்டிருக்கும் வீரக்கழல்களுடைய சப்தத்தோடு கூடின திருவடிகள.

நாணமை:—இத்தால் விஷயஸுகங்களை அநுபவிப்பவாகள் வெட்கமினறித் திரிகின்றார்கள எனறு தோன்றுகிறது. ஒரு ஆண்பிளளை பெண்வேஷம் பூணட மறறொரு ஆண்பிளளையை ஸுகத்திறகாக நாடிச்சென்றால அது எப்படி நாட்டாருககுப் பரிஹாஸத்திற்கு இடமாகுமோ ? அதுபோல் சிறறின்பங்களை நாடுபவாகள ஆழ்வார்கள்போன்ற மஹான்களுக்குப் பரிஹாஸபாத்ரமாயிருப்பார்கள். சிறிதும வெட்கமின்றித் திரிகிற காமுகர்களைப்போல் நான் திரியகில்லேன். பகவத் காமனை யுடையவனானே னெனறபடி.

கேள் அவன்—பந்துவான பரமபுருஷன். ' " பெற்றதாய் நீயே பிறப்பித்த தந்தை நீ மற்றை யாராவாரும் நீ " என்றபடி ஸர்வவித பந்துவானவன். நயம்—ஆசைப்படத்தக்க பொருள்கள், விஷயங்கள் என்பதாம்.

நயவேன் பிறர்பொருளை நள்ளேன் கீழாரோடு
உயவே னுயர்ந்தவரோ டல்லால்—வியவேன்
திருமாலையல்லது தெய்வ மென்றேத்தேன்,
வரு மாறென் நம்மேல் வினை. (64)

| | | | |
|---|---|---|---|
| பிறர் பொருளை | நம்மில் வேறுபட்டவரானுடைய தந்மான ஆத்மாவை | திருமாலை அல்லது | திருமாலைத் தவிர மற்ற எவரையும் |
| நயவேன் | எனக்கு உரியதென்று ஆசைப்படமாட்டேன் | தெய்வம் என்று | பரதேவதையென்று |
| கீழாரோடு | தாழ்ந்தவர்களோடு (பகவத் சிந்தையில்லாத ஸம்ஸாரிகளோடு) | ஏத்தேன் | துதிசெய்யமாட்டேன் |
| நள்ளேன் | சேரமாட்டேன் | வியவேன் | (இப்படி நான் ஒருவனதான் இருக்கிறேனென்று நினைத்து என்னைப்பற்றி) ஆச்சரியமுமடையமாட்டேன் |
| உயர்ந்தவரோடு அல்லால் | உயர்ந்தவர்களான ஸ்ரீ வைஷ்ணவர்களைத் தவிர மற்றவரோடு | நம்மேல் வினை | நம்முடைய பக்கல் பாபங்கள் |
| உயவேன் | ஸஹவாஸம் செய்யமாட்டேன் | வரும் ஆறு என்? | வரும் பிரகாரம் எப்படி? ஒருபொழுதும் வாரா. |

இப்படியெல்லாம் போதுபோக்குகிற எனக்கு இனி பாபங்களால் நலிவு ஏற்படுமோ? என்கிறாரிப்பாட்டில்.

நயவேன்:-அறிவுள்ள ஜீவாத்மாக்களிலும் அறிவில்லாத ப்ரக்ருதியிலும் வேறுபட்டவனை புருஷோத்தமனுக்கு பிராட்டிமார்களைப் போல பரமப்ரேமஸ்தானமான ஆத்மவஸ்துவை என்னுடையதென்றும் எனக்கதீனமென்றும் நினைக்கமாட்டேன். இராவணன் பிராட்டியை அபஹரித்ததுபோல நான் ஆத்மாபஹாரம் செய்யமாட்டேன் என்றபடி. பிராட்டியை அபஹரிக்க உதவியாயிருந்த மாரீசனைப்போலிருக்கிற, எம்பெருமானை மறந்து விஷயஸுகத்திலீடுபட்ட ஸம்ஸாரிகளோடு சேரமாட்டேன். பெருமானோடு பிராட்டியைச் சேர்த்து வைத்து ஸேவித்த விச்வாமித்ராதிகள் போன்ற ஆத்ம ஸமர்ப்பணம் செய்த பிரபன்னர்களான ஸ்ரீவைஷ்ணவர்களைத்தவிர மற்றவரோடு உயவேன். (உயவேன்=ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டு நட்பு

டன் இருக்கமாட்டேன்.) "மற்றுமோர் தெய்வமுளதென்றிருப்பாரோடொற்றிலேன், உற்றது முன்னடியார்க்கடிமை" என்கிற பரகாலன பாசுரம் இங்கு அநுஸந்திக்கலாம். இப்படி ஒரு நிலை எனக்கு வந்ததேயென்று என்னைப்பற்றி நினைத்து ஆச்சரியப்பட்டு கர்வமடையமாட்டேன். திருமாலைத்தவிர மற்றவரைத் தெய்வமென்றுபேணமாட்டேன். நம்மேல் எப்படிப் பாபங்கள் வந்து ஹிம்ஸிக்கும்? ஒருக்காலும் அணுகமாட்டா வென்கிறார்.

"வியவேன்" என்பதைத் திருமாலையல்லது என்பதோடு சேர்த்து ஸ்ரீய: பதியைத்தவிர மறற ப்ரஹ்மருத்ர இந்திராதி தேவர்களைப் பார்த்தால் நெஞ்சில் கொஞ்சமேனும் மகிழ்ச்சியடைய மாட்டேனென்றும் சொல்லலாம்.

வருமாறு என்:—நாபுக்தம் க்ஷீயதே சர்ம கல்பகோடி சதைரபி என்று எவ்வளவு கல்பங்கள் சென்றாலும் கர்மங்கள், அவைகளின் பலனை அனுபவியாமல் தொலைக்கப்படமாட்டாவென்றும், கர்மங்களால்நேரும் ஸுகதுக்கங்களை அனுபவித்தே தீரவேணுமென்றும் சொல்லியிருப்பினும், அது நம் விஷயததிலலல. மறறவதிகாரிகளிடம்தான் அந்தசாஸ்திரம் பயன்படும். நம்மிடம் புண்யபாபரூபங்களான கர்மங்கள் யாதொன்றையும் செயயமுடியாது என்பதாம்.

நம்மேல்:—எனனிடத்திலும் என்னைச்சேர்ந்தவர்களிடத்திலும் வினைகள் வாராதென்பதாம். இப்பாசுரத்தின் கருத்தை யடியொறறிய "திருமாலுருவொக்கும் மேரு + திருமால் தலைக்கொண்ட நங்கட்கு எங்கேவரும் தீவினையே." என்ற திருவிருத்தத்திலுள்ள பாசுரமும்,"நயவேனொரு தெய்வம் நானிலத்தே ÷ அருவினையென்னை எவ்வாறின்றடர்ப்பதுவே" என்கிற இராமானுச நூறறந்தாதிப் பாசுரமும் இங்கு சிந்திக்கப்பொருந்தும்.

**வினையா லடர்ப்படார் வெந்நரகில் சேரார்**
**தினையேனும் தீக்கதிக்கட் செல்லார்—நினைதற்**
**கரியானை சேயானை, ஆயிரம்பேர், செங்கட்**
**கரியானைக் கைதொழுதக்கால்.** (65)

| | | | |
|---|---|---|---|
| நினைதற்கு | நினைப்பதற்கு | | (அவர்கள்) |
| அரியானை | அருமையாயிருப்பவனும் | வினையால் | (இருவகைப்பட்ட) பாபங்களாலும் |
| சேயானை | மனத்திற்கும் எட்டாத தூரத்திலிருப்பவனும் | அடர்ப்படார் | ஹிம்ஸிக்கப்பட மாட்டார்கள் |
| ஆயிரம்பேர் | ஸஹஸ்ரநாமங்களையுடையவனும் | வெம் நரகில் | க்ரூரமான நரகங்களில் |
| செம் கண் | சிவந்த கண்களையுடையவனும் | சேரார் | சென்று வலிக்க மாட்டார்கள் |
| | | தினையேனும் | கொஞ்சமாயினும் |
| கரியானை | கருத்த நிறமுள்ளவனுமான பெருமானை | தீ கதிக்கண் | கெட்டவழிகளில் |
| | | செல்லார் | நடக்கமாட்டார்கள். |
| கை தொழுதக்கால் | கைகளால் அஞ்ஜலி செய்து வணங்கினால் | | |

திருமாலைத் தொழுகிறவர்களுக்கெல்லாம் பலச்ருதி பாடுகிறாரிப் பாட்டில.

வினையால்:—நம் ஸாமர்த்தியத்தால் அறியவேணடுமென்று நினைத்தால் நினைவிற்கும் அகப்படாமல் வெகுதூரத்திலிருப்பவனும், ஆயிரம் பேர்களையுடையவனும், அவனருளேபார்த்துநிறகுமடியார்க்குப் பரமபோக்யமான சிவந்தகண்ணையும் கறுத்தமேனியையுமுடைய புருஷோத்தமனை அடிபணிந்து வணங்கித் தொழுதால், மோக்ஷவிரோதியான புண்யபாபங்களாகிற இருவகைப்பட்ட வினைகளாலும் இவ்வுலகில் துன்பங்கள் நம்மருகே நெருங்கா. இங்கிருந்து சரீரம் தொலைந்தபின்பு போய் அநுபவிக்கவேண்டிய நரகாநுபவமாகிற துக்கமும் கிடையாது. சிறிதேனும் கெட்டவழியில் செல்லமாட்டான். (அர்ச்சிராதி மார்க்கத்திலல்லது தூமாதிமார்க்கத்தில் செல்லமாட்டான்) என்பதாம், தர்மபுத்ரர் துரோணரை அடக்குவதற்காகச் சொல்லிய அச்வத்தாமா ஹத: என்ற பொய்யின் பயனாக நரகத்தைக் கண்ணால் பார்க்கும்படியாவது நேர்ந்தது. அதுவும் கிடையாதாம் திருமாலடியார்களுக்கு, என்று பலத்தைச் சொன்னபடி.

காலை யெழுந்துலகம் கற்பனவும் கற்றுணர்ந்த
மேலைத் தலைமறையோர் வேட்பனவும்—வேலைக்கண்
ஓராழி யானடியே யோதுவது மோர்ப்பனவும்
பேராழி கொண்டான் பெயர். (66)

| | | | |
|---|---|---|---|
| உலகம் | (மோக்ஷத்தில் ஆசையுள்ள) லோகத்தார் | வேலை | கரையோடு கூடின |
| காலை | விடியற்காலையில் | கண் | விசாலமான |
| எழுந்து | தூக்கத்தைவிட்டு எழுந்து | ஓர் | விலக்ஷணமான |
| கற்பனவும் | சொல்லிக்கொள்பவையும் | ஆழியான் | ஸமுத்திரத்தை பள்ளியாகவுடைய பெருமானுடைய |
| கற்று | வித்யைகளை அப்யஸித்து | அடியே | திருவடிகள் தான். |
| உணர்ந்த | நல்லறிவுபடைத்த | ஓதுவதும் | பெரியோர்கள் வாசிப்பவையும் |
| மேலைத்தலை மறையோர் | மிகவும் உயர்ந்த வைதிகர்கள் | ஓர்ப்பனவும் | மனனம் பண்ணுமவையும் |
| வேட்பனவும் | காணவேணுமென்று ஆசைப்படுமவையும் (எவையென்னில்) | பேர் ஆழி கொண்டான் | பெரிய சக்ராயுதத்தை தரித்த ஸ்வாமியினுடைய |
| | | பெயர் | திருநாமங்கள் தான். |

செங்கட் கரியானைக் கைதொழுதால் வினையால் அடர்ப்படார், நரகில் சேரார் என்று பகவத் பஜனத்திற்குப் பலம் கூறினர். ஆதலால் தான் உலகில் பெரியோர்கள் செய்யும் வ்யாபாரங்களெல்லாம் பெருமான் விஷயமாகவே இருக்கின்றன என்கிறார் இங்கே.

காலை:—உலகிலுள்ள பெரியோர்கள் விடியற்காலையிலெழுந்திருந்து கற்கிறவைகளும், வேதங்களின் மேல் பாகமான உபநிஷத்துக்களில் அறிவுபடைத்த மஹான்கள் ஒரு வஸ்துவைக் காணவேணுமென்று ஆசைப்பட்டுத் தினந்தோறும் தியானம் செய்துகொண்டு எதிர்பார்க்கப்படுமவையும், பாற்கடலில் பள்ளியமர்ந்த சக்ரதானுடைய திருவடிகள் தான். அவனது திருவடிகளைக் காண விரும்புகிறார்கள். தியானிப்பதும் அத்திருவடிகளைத்தான், வாசிப்பதும் அவைகளைப்பற்றிய புஸ்தகங்களைத்தான், பெரியோர்கள் குருமுகமாகக் கேட்ட விஷயங்களை யுக்திகளோடுகூடச் சிந்திப்பதாகிய மனனம் செய்வது என்பதும் அப்பெருமானது திருநாமங்களைத் தான்.

ஆகவே நரகாதிகளை அடையாமலும், வினைகளால் நலியப்படாமலும், மோக்ஷத்தை யடையவேண்டில், ஆழியானையே சிந்தித்து அவன் நாமங்களையே சொல்லிக்கொண்டிருப்பது தான் உபாயம் என்றபடி.

உலகம் = உயர்ந்தவர்கள் (முமுக்ஷுக்கள்) மேலை தலை மறையோர். எம்பெருமானை முக்யமாகச் சொல்லுகிறவேதத்தின் மேல்பாகத்தை அறிந்த வேதாந்திகள் என்பதாம்.

பெயரும் கருங்கடலே நோக்குமாறு, ஒண்பூ
உயரும் கதிரவனே நோக்கும்—உயிரும்
தருமனையே நோக்கு மொண் தாமரையாள் கேள்வன்
ஒருவனையே நோக்கு முணர்வு. (67)

| | | | |
|---|---|---|---|
| ஆறு | ஆறுகள் | உயிரும் | எல்லாருடையபிராணனும் |
| பெயரும் | எப்பொழுதும் அசைந்துகொண்டிருக்கிற | தருமனையே | யமதர்மராஜனையே |
| கருங்கடலே | கருப்பு நிறமுள்ள ஸமுத்ரத்தையே | நோக்கும் | பார்த்துக்கொண்டிருக்கும் (சென்று சேரும்) |
| நோக்கும் | நோக்கிப்போகும் | உணர்வு | ஞானமானது |
| ஒண் பூ | அழகான தாமரைப் புஷ்பம் | ஒண் தாமரையாள் | அழகான தாமரைப் பூவில் உதித்த லக்ஷ்மீதேவியினுடைய |
| உயரும் | உயரே (ஆகாசத்தில்) ஸஞ்சரிக்கிற | கேள்வன் | நாதனை |
| கதிரவனே | ஸூர்யனையே | ஒருவனையே | ஒருத்தனையே |
| நோக்கும் | பார்த்துக்கொண்டிருக்கும் | நோக்கும் | சென்றுபிடிக்கும். |

முமுக்ஷுக்களும் அறிவினால் சிறந்தவர்களும் சக்ராயுதத்தைத் தரிக்கிற பரமபுருஷனையே தியானஞ்செய்கிறார்கள் என்றார் கீழ்ப்பாட்டில். அதற்குக் காரணத்தைச் சொல்லுகிறார் இப்பாட்டில்.

பெயரும்:—இரவும் பகலும் விடாது பரவுகிற ஆறுகள் எல்லாம் கடலில் நுழைவதையே இயல்பாகக் கொண்டிருக்கின்றன. கடலை நிரப்புவதற்காக ஆறுகள் செல்லவில்லை. கடல் எப்பொழுதும் ஜலத்தினால் பரிபூர்ணமாயத்தான் இருக்கிறது. பின்னை எதற்

காக வென்றால், ஆறுகளை கடலில் புகாவிடில தாங்கள் தரித்தி ருக்க முடியாததினால தான். ஆறுகளுக்கு கடலில் புகுவது ஸ்வபாவம். அதை ஒருவராலும் மாற்றமுடியாது. அப்ப டியே அழகான தாமரைப்புஷ்பம வெகுதூரத்திலிருக்கும் ஸூரிய னைக்கண்டதும் மலர்கிறது தாமரைப்புஷ்பத்திற்கு ஸூரியனிடம் நோக்கு அதன அருகே எவ்வளவு நெருபபைக்கொட்டினாலும் அது மலர்கிறதில்லை. மலர்ச்சிக்கு வெப்பம் காரணமானால நெருப்பைக் கண்டு மலரக்கூடாதா? ஆனதுபறறி ஸூரியனைக்கண்டே மகிழ் வது தாமரையின் இயல்பு. அதுபோல் ஸமஸ்த பிராணிகளுடைய உயிரும் (ப்ராணனும்) தர்மராஜனையே நோக்கி நிற்கும். உயிர் யம னைததான் பார்த்துக்கொண்டிருக்கிறது. கடைசியில் யமனிடம் தான் செல்லப்போகிறது. யமனிடம் செல்வதுதான் உயிருக்கு இய ல்பு. ஆறுகளை அடைத்து வைத்தாலும், அவைகள் கடலையே சேருவது போலும், தாமரை இரவில் எவ்வளவு மூடியிருப்பினும் ஸூரியனைக் கண்டு மலருவது போலும், நாம் எவ்வளவு காப்பாற்றி வைத்தாலும் பிராணன தருமனிடம்தான் சென்று சேரும். அவை களை மாற்ற நம்மாலில்லை. மரணம் ப்ரகிருதி: சரீரிணாம் விக்ருதிர் ஜீவிதமுச்யதே புதை: என்றான் காளிதாஸ கவியும். அது போல் அறிவு என்றால் திருமகள் நாதனை நாராயணனைப் பற்றித்தான் கிடக்கும். ஸ்ரீமந் நாராயணனைப் பற்றியஜ்ஞானம்தான் ஜ்ஞானம். மறறவை யெல்லாம் அஜ்ஞானம என்பதுதான ஸித்தாந்தம். அறி விற்கு அறிவு என்று சொலலப்படும தன்மை வேண்டுமானால ஸ்ரீய: பதியான புருஷோத்தமனைப் பற்றினால்தான், இல்லாவிடில இலலை யென்றபடி. விஷ்ணுபுராணத்தில் ஸம்ஸாரத்தில அகபபடுவதற்கு காரண மாகாமலும் பரமசுததமான பரப்ரஹ்மத்தையடைவிக்க வல் லதாயிருக்கும் அறிவுதான் அறிவு. மறறவையெலலாம் அறிவலல. அஜ்ஞானம் என்றார். உலகத்தில பலர் பல சாஸ்திரங்களைக கற்று விதவான்களென்றும் பெயர படைததிருப்பார்கள். அந்த சாஸ் திர ஜ்ஞானத்தை ஜ்ஞானம என்று சொல்வதறகில்லை. அவர்கள வித்வான்களுமிலலை. எந்த ஜ்ஞானம் ஸம்ஸாரததிலிருந்து நம்மை விடுவிதது பரஹ்மப்ராப்தியைக் கொடுக்குமோ; அது தான் ஜ்ஞா னம், அதைக்கொணடு விதவான்கள என்று சொல்வதற்கு ஆசேஷ

பமில்லே. அது பகவனைப் பற்றிய ஜ்ஞானமே. அது தான் மேலானது. மற்றவைகள் எல்லாம் வயிறு பிழைப்பதற்கேற்ற சிலபங்களேயாகும். அவைகளால் ஆத்மாவிற்கு யாதொரு பயனுமில்லை. ஆகையினால்தான் முமுக்ஷுக்களும் அறிவினால் பெரியவர்களும் புருஷோத்தமனையே வணங்கி வழிபடுகிறார்கள் என்று கீழ்ப் பாசுரத்தோடு சேர்த்துப் பொருள் கொள்ளவேணும்.

இங்கு உணர்வு என்பதற்கு ஜீவாத்மா என்பது பொருள் என்று சொல்வதும் பொருந்தும். ஒருவனுக்கு எந்தகுணம் பிரதானமாயிருக்கிறதோ; அதைக்கொண்டே அவனைக் கூப்பிடுவது வழக்கம். ஒருவனுக்கு கோபம் அதிகமாயிருந்தால், அவன் வரும்பொழுது கோபம் வருகிறது என்பார்கள். அதேமாதிரி ஒருவன் வியாகரண சாஸ்திரம் வல்லவனாயிருந்தால், அதோ வ்யாகரணம் வருகிறது என்பார்கள். இதைத்தான வடமொழியில் தத்குண ஸாரத்வாத் தத்வ்யபதேச: என்று சொல்வார்கள். அங்ஙனமே ஆத்மாவிற்கு ஜ்ஞானமே முக்யகுணமாதலால் அந்த ஜ்ஞானமாகிற குணத்தையிட்டு அக்குணப்ரதானமான ஜீவனை இங்கு சொல்லுகிறது உணர்வு என்கிற பதம். ஆகவே ஸகலஜீவன்களும் தாமரையாள கேள்வனை பரமபுருஷனையே நோக்குகின்றன அவனுக்கே அடிமைகள் என்கிறபொருள் விளங்குகிறது. ஆதலால் எந்தலோகங்களிலிருந்தாலும் எவ்வகைப் பட்டனவாயிருந்தாலும் ஜீவன்களெல்லாம் ஸ்ரீமந் நாராயணனுக்கே அடிமைகள் என்றும், அவனைப்பற்றிய ஜ்ஞானம் தான் உயர்ந்ததென்றும் நமக்கு உபதேசிக்கப் பட்டதாயிற்று. தாமரையாள் கேள்வன் என்ற பதத்தால் பிராட்டிக்கும் பெருமாளுக்கும் சேஷபூதர்கள என்பதும் தோன்றும். ஆதலால் பிராட்டியை ஈச்வர தத்வததில் சேர்ககாத மதஸ்தர்களில் ஆழ்வார்களுக்கு அபிமான மில்லாமையும் காட்டப்படுகிறது

இங்கு மூன்றுமடியில் "உயிரும் தருமனையே நோக்கும்" என்பது ஸ்ரீவைஷ்ணவர்கள் அல்லாதவர்களுடைய உயிரைப் பற்றியே சொல்லப்பட்ட விஷயமாகும். "தேவம் சார்ங்கதரம் விஷ்ணும் யே ப்ரபன்ன: பராயணம்] நதேஷாம் யமஸாலோக்யம் நச தே நரகௌகஸ:" என்றபடி ஸ்ரீவைஷ்ணவர்களுடைய உயிர் யமனுக்கு விஷய

மாகாதபடியால் மற்ற ஜீவர்களைப் பற்றியது மூன்றுமடி யென்பார் சிலர்.

எம்பெருமானுடைய நியமனத்தால் ஸ்ரீவைஷ்ணவர்களுள்பட ஸகல புருஷர்களுடைய உயிரும யமனையேதான் சேருகிறது. ஜீவாத்மா என்பது வேறு. உயிர (பிராணன) வேறு. உயிர் யமனைததான் சேருகிறது. ஜீவன்தான் பெருமானிடம் செல்கிறது. மற்றவர்களுடைய ஜீவனும உயிரும் (ஆகவிரண்டும்) யமனைச் சேருகின்றன. ப்ரபன்னர்களுடைய உயிர் தருமனைச்சேர்ந்தாலும் ஜீவன பெருமானைத்தான் அடைகிறதென்பார் மறறும் சிலா. கலையிலங்கு மொழியாளர்களைக் கண்டு கேட்டுத்தெளிக.

**உணர்வாரா ருன்பெருமை யூழிதோ றூழி**
**உணர்வாரா ருன்னுருவந்தன்னை—உணர்வாரார்**
**விண்ணகத்தாய் மண்ணகத்தாய் வேங்கடத்தாய், நால்**
**பண்ணகத்தாய் நீ கிடந்த பால்.** (68) [வேதப்

| | | | |
|---|---|---|---|
| விண அகத தாய் | பரமபததை இடமாககொணடவனே | ஊழி தோறு ஊழி | காலததவமுள்ள தனையும (சிந்திததாலும்) |
| மண அகத தாய் | இப்பூவுலகததில் வஸிப்பவனே | உணாவாா ஆா | அறியவல்லார் எவா |
| வேங்கடத் தாய | திருவேங்கட மலையில் நிற்பவனே | உன் உருவம தனனை | உனனுடைய ஸவரூபததை |
| பண நால் வேதம அகத் தாய | ஸவரஙகளுடன கூடிய நானகு வேதஙகளில வஸிப்பவனே! (வேதங்களால் பிரதிபாதிககபபடடவனே!) | உணாவாா ஆா | அறியக்கூடியவா எவர் |
| | | நீ கிடநத பால் | நீ பள்ளிகொண்ட திருப்பாற்கடலை |
| | | உணாவார் ஆா | அறியவல்லாா யாவர்? |
| உன பெருமை | உனதுமேனமையை | | |

அறிவுக்கு எல்லை நிலம் லக்ஷ்மீபதியான ஸர்வேச்வரன் ஒருவன் தான் என்றார் கீழே. அவனை உள்ளபடி அறிபவா தான் உலகில் கிடையாது என்கிறார் இப்பாட்டில்.

உணாவார்:—பரமபதத்தில் மேன்மை தோன்றும்படி வீற்றிருக்கும் பரமபுருஷனே. உன்னுடைய பெருமையை யார் அறிந்

தார், விண்ணுலகிலுள்ள நித்யஸூரிகளுள யாராவது உன்பெருமை முழுவதையும் அறிந்தாரோ? அல்லது நீ தான் அறிந்தாயோ? "தனக்கும் தன் தன்மை அறிவரியான" தாம தம் பெருமையறியார்" என்றும் மற்றவாகளும அருளிச்செய்தாாகள்.

இந்த பூமியிலே இராம கிருஷ்ணாதி ரூபங்களோடு அவதரித்து சிலகாலங்களில் வாஸம் செய்தவனே! அப்பொழுதுதான் ஸௌலப்யத்தோடு கூடின உன்பெருமையை யார அறிந்தார். அல்லது, பின்னானார் வணங்கும்படியான ரூபத்துடன திருமலையில நித்யவாஸம் செய்கிறாயே; இப்பொழுது தான் உன பெருமையை யார் அறிந்தார்? இவ்வவதாரங்களனைத்துக்கும மூலகந்தமான திருபாற்கடலில் கிடந்த உனது மூர்த்தியை யார் அறிந்தார்? ஆதலால் காலதத்வமுளளதனையும் ஸாவேச்வரனுளபட அனைவரும் ஆராய்ந்து பார்த்தாலும் அவனுடைய பெருமை அளவிட்டு அறியமுடியாது என றபடி.

**பாலன் றனதுருவா யேழுலகுண்டு, ஆலிலையின்**
**மேலன்று நீ வளர்ந்த மெய்யென்பர்—ஆலன்று**
**வேலை நீ ருள்ளதோ விண்ணதோ மண்ணதோ**
**சோலை சூழ் குன்றெடுத்தாய் சொல்லு. (69)**

| | |
|---|---|
| நீ பாலன தனது உருவாய | நீ ஒரு குழந்தையின் உருவத்தோடு |
| ஏழ் உலகு | ஸபதலோகங்களையும |
| உண்டு | அமுதுசெய்து |
| ஆல் இலையின் மேல | ஓர வடபத்ரத்தின் மேல் |
| அன்று | அந்த பிரளயகாலத்தில் |
| வளாந்த | துயிலகொண்டிருந்தமையை |
| மெய் எனபர் | (யாவரும்) உணமையென்கிறாாகள் |
| அன்று | எல்லாபபொருள்களும நசித்திருந்த அககாலத்தில் |
| ஆல் | அந்த ஆலானது |
| வேலை நீா உள்ளதோ | பெருகிககிடககிற ஸமுத்திர ஜலத்திலிருந்ததோ? |
| விண்ணதோ | (அல்லது) ஆகாசத்திலிருந்ததோ |
| மண்ணதோ | (அல்லது) பிரளயங்கொண்ட பூமியிலிருந்ததோ |
| சோலை சூழ் குன்று எடுத்தாய் | சோலைகள நிறைந்த கோவாத்தன மலையைத்தூக்கினவனே |
| சொல்லு | இதற்கு நீ பதில சொல்லவேணும். |

இப்பாட்டில் எம்பெருமானைக் குறித்து ஒரு கேள்வி கேட்கிறார்.

பாலன்.— இப்பிரபஞ்சங்களை யெல்லாம் பிரளயங் கொண்ட காலததில, நீ உனது திருமேனியை ஒரு குழந்தையின் வடிவத்தைப் போல் மிகவும் சிறியதாகச் செயது கொண்டு உன் திருவயிற்றில் எல்லாப பொருள்களையும் ஒனறோடொன்று கலந்து கெடாமலிருக் குமபடி, வைததுக கொண்டு ஒரு சிறிய ஆலிலையில துயின்றாய் என்று முனிவர்கள் சொல்லுகிறார்கள். ஆப்தர்கள சொல்லுவதால் அது உண்மைதான், பொயயல்ல. ஆனால் நீ படுத்துறங்கின அந்த ஆல் அப்பொழுது ஸமுத்திர ஜலததிலிருந்ததா? அல்லது ஒரு அவ லம்பமுமில்லாத ஆகாசத்திலிருந்ததா? அல்லது பிரளயத்தில் கரை ந்து உருவழிந்த பூமியிலிருந்ததா? எங்கிருந்தது? இவ்விஷயத்தை, ஏழுவயதில் கோவர்த்தன மலையைத் தூக்கினவனான நீதான் சொல லவேணுமென்று கேட்கிறார். சோலைசூழ் என்கிற அடைமொழி யால், கிருஷ்ணாவதாரத்தில் ஏழுவயதான விளமைப் பருவத்தில் சோலைகள் நிறைந்த கோவர்த்தனமென்கிற பெருமலையைத தூக்கி யதுமெப்படி? என்றும் வினவினாரென்றும் தோன்றுகிறது. அந்த ஸர்வேச்வரன் அவனைத்தவிர மற்றவெல்லாப் பொருள்களையும் தம் வயிற்றில வைத்துக்கொண்டு ஒரு சிறுகுழந்தையாயிருப்பது மிகவும் பொருததமில்லாத செயல். இப்படிப் பிரபஞ்சத்தையெலலாம் விழு ங்கினவன் படுப்பதறகு இடம் போதாத ஓராலில் படுத்துறங்கினா னென்பதும் அந்த ஆல் அவனைத் தாங்கியது எனபதும் பொருத்த மற்றவை. அவனைத் தவிர மறறவஸ்துக்களெல்லாம் அழிந்துகிடக்க அந்த ஆல் மாததிரம எப்படி யிருக்கமுடியும்? ஆதலால் ஆலில் பள ளியமாந்தானெனபதும் அஸம்பாவிதம. ஆகையால் இவையனைத் துக்கும் சரியான விடையளிக்க வேணுமெனகிறார். இந்தக் கேழ் வியால் நாம் தீர்மானிக்க வேண்டிய விஷயமொன்றுண்டு. சில கார் யங்கள மனுஷ்யர்களான நம்போன்றவர்களிடம் அஸம்பாவிதம் போல தோன்றினாலும ஸர்வேச்வரன் விஷயத்தில் அவைகள் பொ ருந்தியவைகளாகவே இருக்கும். ஏழாவது பிராயத்தில் ஒரு மலை யைத்தூககுவது மனத்திற்கும விஷயமல்லாத காரியமாயிருப்பினும் ஸர்வேச்வரனிடம் அது அதிசயமில்லாத செய்கையாகவே யிருக் கும். அவனது திவ்ய சகதியால் எல்லாம் பொருத்தமுள்ள செய

லாகவே முடியும். அவனுடைய ஸாமாத்தியம் இப்பேர்ப்பட்டது என்று நாம் நினைத்து ஸந்தோஷிப்பதே நமக்கு ப்ராப்தம். கூரத்தாழ்வான் அதிமாநுஷஸ்தவத்தில் "ஒன்றுமறியாத குழந்தையைப் போல் உருவம் கொண்டு, மிகவும் சிறியவுடம்பினால் எல்லாவுலகையும் ஸவிகாஸமாகவே நீ வஹித்துக் கொண்டிருப்பது, மனத்திற்கும் எட்டாத உனது மஹிமை தங்கிய சக்தியைக் காட்டுகிறது" என்று முகத: சிசு: வடதளே என்கிற சுலோகத்தால் வெளியிட்டார். ஆதலால் அவனுடைய செய்கை யெல்லாம் அவனது விசித்ர சக்தியைக் காட்டுகிறது என்று தேறித் தெளியவேண்டும்.

**சொல்லுந்தனையும் தொழுமின், விழுமுடம்பு**
**செல்லுந்தனையும் திருமாலை—நல்லிதழ்**
**தாமத்தால் வேள்வியால் தந்திரத்தால் மந்திரத்தால்**
**நாமத்தா லேத்துதிரேல் நன்று. (70)**

| | |
|---|---|
| திருமாலை | லக்ஷ்மீபதியை |
| விழும் உடம்பு | அழியக்கூடிய இந்த சரீரம் |
| செல்லும் தனையும் | உள்ளவரையில் (மரணம்வரையில்) |
| நல் இதழ் | நல்ல புஷ்பங்களால் தொடுக்கப்பட்ட |
| தாமத்தால் | மாலைகளாலும் |
| வேள்வியால் | யாகங்களாலும் |
| தந்திரத்தால் | மந்திரமில்லாத கிரியைகளாலும் |
| மந்திரத்தால் | வெறும் மந்திரத்தாலும் |
| தொழுமின் | பணிவிடைசெய்யுங்கள் |
| | அல்லது |
| சொல்லும் தனையும் | நாவால் பேசுவதற்கு சக்தியுள்ளவரையில் |
| நாமத்தால் | அவன் திருநாமங்களைக்கொண்டு |
| ஏத்துதிரேல் | துதிசெய்தீர்களாகில் |
| நன்று | மிகவும் நன்று. |

கீழ்ப்பாட்டில் ஈச்வரன் விசித்திர சக்தியுக்தன் என்றார். ஆகையால் யாவரும் அவனுக்குப் பணி செய்யவேணுமென்று பரோபதேசம் செய்கிறாரிப்பாட்டில்

சொல்லும்:—"அத்ய வாப்தசதாந்தே வா ம்ருத்யுர்வை ப்ராணிநாம் த்ருவ:" என்றபடி ஜீவாத்மாக்கள் பரிக்ரஹித்த சரீரங்கள் என்றேனு மொருநாள் அழியக் கூடியவைகளாயிருப்பதால் சரீரம் அழி

வதற்கு முன்னமே திருமாலை ஏத்தித் திரியுங்கோள் என்கிறார். நல்ல வாஸனையுள்ள இதழ்கள் நிறைந்த புஷ்பங்களைக் கொண்டு பெருமானைப் பூஜை செய்யலாம். புஷ்பங்கள் அகப்படாவிடில் அவ ரவர்களுக்கு விதித்த கர்மங்களாலே அவனை ஆராதனம் செய்ய லாம். அதற்கும் சக்தியில்லாவிடில் மந்திரம் இல்லாமல் செய்கிற கைங்கரியங்களைச் செய்யலாம். அது செய்வதற்கும் சரீரத்தில் சக்தியில்லாவிடில் கேவலம் கிரியையில்லாத பகவத் வாசகமான மந்திரங்களைச் சொல்லிக் கொண்டிருக்கலாம். மந்திரங்களை உச்ச ரிப்பதற்கு சரீர சுத்திவேண்டும். அதற்காக ஸ்நானம் செய்யவே ணும், அது நம்மால் முடியாதென்றால் அவ்வீச்வரனுடைய பெயர் களையாவது சொல்லிக் கொண்டிரு. அதற்கு யாதொரு சுத்தியும் வேண்டாம். தாயாரை அம்மாவென்று கூப்பிடுவதற்கு ஸ்நானம் செய்து விட்டு வரவேண்டுமா? ஆகையால் சரீரம் அழிவதற்குள் ஸர்வேச்வரன் விஷயத்தில் ஏதாவதொரு கைங்கர்யத்தைச் செய்து கொண்டு போது போக்கி ஆத்மலாபத்தை அடையுங்கோள் என்கி றார்.

**நன்று பிணிமூப்புக் கையகற்றி நான்கூழி**
**நின்று நிலமுழுதுமாண்டாலும்—என்றும்**
**விடலாழி நெஞ்சமே வேண்டினேன் கண்டாய்**
**அடலாழி கொண்டான் மாட்டன்பு.** (71)

| | | | |
|---|---|---|---|
| ஆழி நெஞ்சமே | கம்பீரமான மனமே | ஆண்டாலும் | நிர்வஹித்தாலும் |
| பிணி | நோய்களையும் | அடல் ஆழி கொண்டான் மாட்டு | மிடுக்கையுடைய திருவாழியை தரித்த பெருமான் விஷயத்தில் |
| மூப்பு | கிழத்தனத்தையும் | அன்பு | ஸ்நேஹத்தை |
| நன்று கை அகற்றி | நன்றாக மீண்டுவாரா மலிருக்கும்படி விட்டுவிட்டு | என்றும் | எக்காலத்திலும் |
| நான்கு ஊழி | நாலு யுகங்களிலும் | விடல் | விடாமலிரு. |
| நின்று | அழியாமல் இருந்து கொண்டு | வேண்டினேன் கண்டாய் | உன்னை இரந்து கேட்டுக்கொள்கி றேன் காண். |
| நிலமுழுதும் | பூமியோடுகூடின அண்டங்களனைத் தையும் | | |

கீழ்ப்பாசுரத்தில் ஸம்ஸாரிகளைப்பார்த்து உடம்பு விழுமளவும் திருமாலை ஏத்துமின்: என்றார் அவர்கள் ஆழ்வார் பாசுரத்தை செவியில் வாங்காமலேயே விஷயங்களிலேயே ஆசையுள்ளவர்களாயிருந்தார்கள். அதுகண்டு ஆழ்வார், அந்த ஸம்ஸாரிகளுக்கு உபதேசிப்பது வீண் என்று நினைத்துத் தமது நெஞ்சுக்கு உபதேசிக்கிறாரிப்பாட்டில.

நன்று:—எனனுடைய நெஞ்சமே! உனக்கொன்று சொல்லுகேன் கேள்; நீ, வியாதிகள், கிழத்தன்மை, மரணம் முதலியவைகளை அடியோடு தொலைத்து கைவல்யத்தை அடைந்தாலும் சரி; அலலது நான்கு யுகங்களுடன் கூடின நீண்டகாலம் வாழப்பெறறு இவ்வுலகங்களையெலலாம் ஆட்சிசெயவதாகிற ஐச்வர்யத்தைப் பெற்றாலும சரி, அலலது இவையிரண்டையும் அடைந்தாலும் சரி; திருவாழியைக் கையில தரித்த பெருமானிடம் அன்பை மாத்திரம் நீ விட்டுவிடாதே; உன்னை இவ்விஷயத்திற்காக நான் மிகவும் கெஞ்சிக்கேட்டுக்கொள்கிறேன. நீ அவைகளில கண்வைக்காமல் திருமாலையே வேணடிக்கொண்டிரு என்கிறா.

ஜீவாதமாவை அனுபவிப்பதாகிற கைவல்யஸுகம உயர்நததேயாயினும் பகவதனுபவததைக் காட்டிலும் அலபமாகையால அதிலே ஆசையை வைக்கக்கூடாது. ஐச்வர்யம் எனபது மிகவும் அதிகமாகக் கிடைத்தால ஸுகத்தைக கொடுப்பதாயிருந்தாலும அது அழியும தனமையுளளதாயிருப்பதால் மீண்டும துயரத்தையே விளைவிக்கிறது. ஆதலால் ஐச்வர்யத்தை ஆசைபபடுவதும் தகுதியல்ல; ஐச்வாயகைவல்யங்கள உனக்குக கிடைத்தபொழுது "வாளும் செல்வமும் மண்ணரசும் யான்வேண்டேன்" எனறபடி அவைகளை உதைத்துத் தள்ளி திருமாலிடம் செனற சிந்தையாயிரு என்கிறா.

நன்று:—ஐச்வாயகைவல்யங்களில எந்ததோஷஙகளை வேதாந்திகள சொல்லுகிறார்களோ அவைகளை விலக்கி, ஐச்வர்ய கைவல்யங்களை நல்லதாகப்பண்ணி உனக்குக் கொடுத்தாலும் நீ அவைகளை வேண்டாதே. ஏனெனில் அவ்வீஸ்வரனல்லாத பொருள்கள் விட வேண்டியவைகள; அவன் ஸ்வீகரிக்கவேண்டியவன்; மறறவைகள் எப்படியிருப்பினும் அவைகளில் சிந்தையை வைக்காமலும் திருமாலை விடாமலும் இரு என்கிறார்.

ஆழி நெஞ்சமே:—நீ எப்பொழுதும் பகவத்குணாநுபவத்திலேயே ஆழ்ந்துகிடக்கிறாய்; உனக்கு நான் சொல்லவேண்டியதில்லை. ஆகிலும் ஐச்வர்ய கைவல்யங்கள பெருமானை மறக்கச் செய்யும்படி கொழுப்பை உண்டுபண்ணுமியல்புள்ளவைகள்: ஆதலால் அக்காலங்களிலும நீ எம்பெருமானை மறவாமலிரு என்று உணர்த்தினரென்பது தோன்றும.

அடலாழிகொண்டான் —நம்முடைய விரோதிகளைப் போககுவதற்கென்றே எப்பொழுதும் திருவாழியைக் கையிலே தரித்தவன். ஆச்ரித விரோதிகளை யழிக்கக்கருதினால் ஆயுதசாலைக்குப் போய் ஆயுதஙகளை எடுத்துவர காலதாமதமாகுமோ என்று கருதி கையிலேயே ஆயுதங்களை தரித்திருப்பவன். ஆதலால் அவனை விடாதே கொள் என்று உபதேசித்தார்.

அன்பாழி யானை யணுகென்னும் நாவவன்றன்
பண்பாழித் தோள்பரவி யேத்தென்னும்—முன்பூழி
காணானைக் காணென்னும் கண் செவி கேளென்னும்
பூணாரம் பூண்டான் புகழ் (72)

| | | | |
|---|---|---|---|
| அன்பு | பகவத பகதியே வடிவமாகக கொணட என் மனமானது | பரவி ஏதது எனனும் | "பரககப்பேசித்துதி செய" எனறு சொல்லுகிறது. |
| ஆழியானை | திருவாழியையுடைய பெருமானை | கண் | எனது கண்கள் |
| அணுகு- எனனும் | "ஸமீபததில் சென்று அநுபவிப்பாய் என்று" எனககுச் சொல்லுகிறது | முன்பு ஊழி காணானை | முந்தி நாம் அபராதியாய்ப்போந்த காலத்தை மனததால் நினையாத பெருமானை |
| நா | என்னுடைய நாககானது | காண் என்னும | பார் என்று சொல்லுகிறது. |
| அவன் தன் | அநத ஸவாமியினுடைய | செவி | எனது காதுகள் |
| பணபு ஆழி தோள் | லாவணய ஸமுதரமான திருததோள்களை | பூண் ஆரம பூண்டான புகழ | ஹாரம் முதலிய ஆபரணஙகளை அணிந்தவனுடைய குணஙகளை |
| | | கேள் என னும் | 'கேள்' என்று என்னைத தூண்டுகிறது. |

கீழே தனது நெஞ்சைக் குறித்து உபதேசம் செய்தார். தான் உபதேசிப்பதற்கு முன்பே தன்னுடைய கரணங்கள் அவ்வீச்வரனி டம் ஆழ்ந்து கிடந்தன. அவைகளைப் பார்த்தவுடன் அவைகள் தனக்கு உபதேசம் செய்வது போல் தோன்றிற்று. அதை அரு ளிச் செய்கிறு ரிப்பாட்டில்.

**அன்பு**:- என்னுடைய மனம் ஆழியானையே கிட்டி நெருங்கி அநுபவிக்கவேண்டும் என்று எனக்கு உபதேசிக்கிறது: என்னுடைய நாக்கு மிகுந்த அழகுவாய்ந்த திருத்தோள்களையுடைய அவனை எப் பொழுதும் துதித்துக் கொண்டிரு' என்று எனக்குச் சொல்லுகி றது: எனது கண்கள் நாம் குற்றவாளியாயிருந்த நாட்களையே மற ந்திருக்கிற பகவானைப் பார் என்று சொல்லுகின்றன' என் காது கள் பல திருவாபரணங்களை அணிந்துகொண்டிருக்கிற பெருமானு டைய குணங்களையே கேட்டுக்கொண்டிரு என்று எனக்குச் சொல் லுகின்றன: நான் அவைகளுக்கு உபதேசிக்க வேண்டியது போக அவைகள எனக்கு உபதேசிக்கின்றன என்று ஸந்தோஷிக்கிறார்.

அன்பு:- தன் நெஞ்சு பெருமானிடம் அளவிறந்த அன்புகொ ண்டிருந்த படியால் தனது நெஞ்சை நெஞ்சு என்று சொலலாமல் "அன்பு" என்ற சொல்லாலேயே சொல்லுகிறார்.

இப்பாட்டில் முதலிரண்டடிகளில் தன் நெஞ்சும் நாக்கும் தனக்கு உபதேசித்தமையை வரைந்தார். நெஞ்சும் நாவும் உபதே சித்தபின் ஆழ்வார் அவைகளைக் குறித்து, நான் இன்று முதல் நீங் கள சொன்னபடி செய்கிறேன்: ஆனால் கீழ் நாட்களில் நான் செ ய்த குற்றங்களை நினைத்து என்னை தண்டிக்க மாட்டானோ அப்பரம புருஷன்? என்று ஒரு கேள்வி கேட்கிறார். அவைகளைக் கேட்ட வுடன் தன்னுடைய கண், நெஞ்சும் நாவும் சொன்னபடி நீ அவ னைத் துதி செய்வாயாக; நீ அவன் விஷயத்தில் சிறிது இறங்கி நின் ருல் நீ முன்பு செய்த குற்றங்களை அவன் கண்ணில் படாது: நீ குற்றம் செய்த சென்ற அநாதிகாலத்தையே மறந்து விடுவன்: காலத்தையே மறக்குங்கால் உனது குற்றம் தென்பட நியாயமே இல்லை: உன்னைத் தேடிக் கொண்டு அவன் உன் எதிரே வருவான்: அப்பொழுது நீ அவனை ஸேவித்துக் கொண்டேயிரு என்று பதில்

சொலலுகிறது. உடனே ஆழ்வார் அக்கண்ணைப பார்தது அவன் எதிரே வருவான என்று நீ சொன்னது மெய்தான. அப்படியிருந்தா லும் அவன் என்னை அடிப்பதற்கு வந்தால நான் என்ன செய்வது என்ருர். அதற்கு கண் 'காண்' என்று சொலகிறது. அடிக்க வருகிறவனையும் அணைக்க வருகிறவனையும நேரில் பார்த்தால் தனகு தெரியும். ஆகையால வருமபொழுது அவனை கணகளால ஸேவித் தால் உனக்கே தெரியுமென்று சொலலுகிறது. ஆழ்வார நீ சொன னபடி அவன என்னை அணைக்கும் எண்ணத்துடனேயே வரலாம். ஆனல் வந்து எனனைப் பாரத்தும எனனுடைய தாழ்மையை நினைத்து மீண்டும் தான் திரும்பிபபோனல நான என்ன செயவது என்ருர். அதற்குத் தன் செவி பூணரம் பூணடான புகழ கேள் என னும். அவன திரும்பிப்போனலும அவனுடைய குணங்களைக் காதால் கேட்டுக்கொணடிரு என்றதாம், பூணரம என்பதால அவன் திரும்பிப்போகும்பொழுது அவன அணிநதுகொண்டிருக்கிற திருவாபரணங்கள் சபதிககும்; அந்த சப்ததகதைக் கேட்டுககொண டேயிரு என்றதாம். ஆகையால நாம் செயயவேண்டியதைச் செய்வோமென்று தனது கரணங்கள உபதேசித்தன. இபபாசுரங களில் இழைக்கப்பட்ட பதங்களால இபபடி ஒருஸமபாஷணை நடந் ததுபோல் தோன்றுகிறது. பண்பு + ஆழி— தோள் = அழகுக்குக் கடலாயிருக்கிற தோள்கள. அல்லது பண் + பாழி—தோள = அழ கையும் பலத்தையும் உடைய தோளகள்.

இப்பாட்டின் மூன்ருமடியால், ஒரு ஜீவன எமபெருமானை ஆச்ரயித்தால பெருமான், அவன் இதறகுமுன்பு என்ன செயதான்? பாபங்களைச் செய்தானு? புண்ணியங்களைச் செயதானு? என்று யோசிப்பதே இல்லை. முன்காலத்தையே மறநதுவிடுகிருனென்கிற பொருள் தோன்றுகிறது.

புகழ்வாய் பழிப்பாய் நீ பூந்துழாயானை
இகழ்வாய் கருதுவாய் நெஞ்சே—திகழ் நீர்
கடலு மலையு மிருவிசும்பும் காற்றும்
உடலு முயிரு மேற்ருன். (73)

| | |
|---|---|
| நெஞ்சே | என் மனமே! |
| | நீ |
| பூந்துழாயானை | அழகான திருத்துழாயை யணிந்த ஸ்வாமியை |
| புகழ்வாய் | ஸ்தோத்திரம் செய்தாலும் செய்; |
| பழிப்பாய் | நிந்தனை செய்தாலும் செய்; |
| இகழ்வாய் | அலக்ஷியம் பண்ணினாலும் பண்ணு, |
| கருதுவாய் | ஆதரித்தாலும் ஆதரித்திரு; |
| | (அந்த ஸர்வேச்வரனே) |
| திகழ்நீர் | பரகாசிக்கிற தீர்த்தத்தையுடைய |
| கடலும் | ஸமுத்திரத்தையும் |
| மலையும் | பர்வதங்களையும் |
| இரு விசும்பும் | பரந்த ஆகாசத்தையும் |
| காற்றும் | வாயுவையும் |
| உடலும் | தேஹத்தையும் |
| உயிரும் | ஆத்மாவையும் |
| ஏற்றான் | தரித்துக்கொண்டிருப்பவன். |

கீழ்ப்பாசுரத்தில் தன் நெஞ்சு முதலிய கரணங்கள் பகவத் குணாநுபவத்தில் படிந்து கிடப்பதைப் பேசினார். பிறகு சற்று நேரம் ஆலோசித்துப் பார்த்தார். நம்முடைய நெஞ்சு இப்பொழுது போலவே எப்பொழுதும் பெருமானையே சிந்தித்துக் கொண்டிருக்கும் என்று சொல்லமுடியாது. மனம் சஞ்சலஸ்வபாவமானது. நாளையதினம் வேறு ஒருவஸ்துவை விரும்பினாலும் விரும்பும் என்று தீர்மானித்துக் கடைசியாக ஒருவார்த்தை சொல்லுகிறேன் கேள் என்று மீண்டும் தன் நெஞ்சுக்கு ஒரு வார்த்தை சொல்லுகிறார் இப்பாட்டில்.

புகழ்வாய்:— அழகான திருத்துழாய் மாலையை அணிந்த ஸர்வேச்வரன், ஜலத்தினால் நிறைந்த கடல்களையும், மலைகளையும், விசாலமான ஆகாசத்தையும், காற்றையும், பஞ்சபூதங்களால் செய்யப்பட்ட ஸகல சரீரங்களையும் அவைகளுள் நுழைந்திருக்கும் ஜீவாத்மாக்களையும் எப்பொழுதும் தரித்திருக்கிறான். அவன் இவை யெல்லாவற்றிற்கும் ஆதாரமாயிருப்பவன். அவன் தான் ஜகத்காரணமான பரம்பொருள் என்று என்னுடைய தீர்மானம். எனது நெஞ்சே நீ அந்த திருத்துழாய மாலையணிந்த ஸர்வேச்வரனை ஸ்தோத்திரம் செய்து கொண்டு ஆதரித்திருந்தாலும் இரு: ராவணாதிகளைப்போல் அவனைப் பழித்துக் கொண்டு அலக்ஷியம் செய்து கொண்டிருந்தாலும் இரு. நீ புகழ்ந்தால் அவனுக்கு ஒரு மேன்மை உண்டாகப் போவ

தில்லை. நீ பழித்தால் அவனுக்கு ஒரு குறைவும் வரப்போகிறதில்லை. அவன் ஜகத்காரணமான புருஷோத்தமன் என்று என்னுடைய தீர்மானத்தைச் சொல்லிவிட்டேன். நீ செய்வன செய் என்று மத்யஸ்தன் சொல்வது போல் தன் நெஞ்சுக்கு உபதேசிக்கிறார்.

**ஏற்றான் புள்ளூர்ந்தா னெயிலெரித்தான் மார்விடந்தான்**
**நீற்றான் நிழல்மணி வண்ணத்தான்—கூற்றொருபால்**
**மங்கையான் பூமகளான் வார்சடையான் நீண்முடியான்**
**கங்கையான் நீள்கழலான் காப்பு.** (74)

| | |
|---|---|
| ஏற்றான் | ரிஷபவாஹனனும் |
| எயில் எரித்தான் | முப்புரத்தை எரித்தவனும் |
| நீற்றான் | சாம்பலை பூசிக்கொண்டவனும் |
| கூறு ஒருபால மங்கையான் | தனது உடம்பின் பாதியில் பார்வதியை தரிப்பவனும |
| வார்சடையான | நீண்ட சடையுடையவனும |
| கங்கையான | கங்கையைத் தலையில் தாங்கினவனுமான பரமசிவன் |
| புள்ஊர்ந்தான் | கருடவாஹநனும |
| மார்வு இடந்தான | இரணியனுடைய மார்வைபபிளந்தவனும |
| நிழல்மணி வண்ணத்தான் | குளிர்ந்த நீலரத்னம போன்ற நிறமுள்ளவனும |
| பூமகளான் | பூவில்பிறந்த திருமகளுக்கு வல்லபனும |
| நீண்முடியான் | உயர்ந்த கிரீடத்தையுடையவனும |
| நீள்கழலான் | ஆச்ரிதர்களுக்கும் இடமவரையில் நீண்டு செல்லும் திருவடிகளையுடையவனுமான விஷ்ணுவினுடைய |
| காப்பு | ரக்ஷணத்திலகப்பட்டவன். |

ஜகத்காரணமாயும உலகிற்காதாரமாயுமிருப்பவன் துழாய் மாலையான் என்றார் கீழ்ப்பாட்டில். அப்படி ஜகத்காரணமானவன் ருத்ரனாகவிருந்தாலென்? என்று சிலர் வினவ, அவர்களுக்கு அப்படிப்பட்டவன் ஸ்ரீய: பதியான புருஷோத்தமன் தான் என்று இப்பாசுரத்தால் விடையளிக்கிறார்.

ஏற்றான்:— ரிஷபவாஹநனாயும், திருபுராஸுர ஸம்ஹாரம் செய்தவனாயும், சாம்பலை உடம்பில் பூசிக்கொண்டவனும், தன்பாதி உடம்பில் பார்வதி என்னும் மடந்தையைக் கொண்டவனும், தலை

யில் சடை பூண்டவனுமான ருத்ரன், கருடவாஹனனும், ஹிரண்ய னைப் பிளந்தவனும், குளிர்ந்த நீல நிறத்தவனும, லக்ஷ்மிதேவியின் கணவனும், நீண்டகிரீடம் தரித்தவனும, நீண்ட திருவடிகளையுமு டையவனுமான நாராயணனுடைய ரக்ஷணத்தில் அகபபட்டவன். நாராயணனுடைய ரக்ஷ்யவர்ககத்தில் சேர்ந்தவன் என்பது கருத்து. இப்படி நாராயணன் பரன் என்பதையும், அரன் அவனுடைய ரக்ஷ ணத்திலகப்பட்டவன் என்பதையும் இப்பாசுரத்தில் இவ்விருவர் களுக்கும் இணைத்திருக்கும் அடைமொழிகளே நன்கு காட்டும். இருவருக்குமுள்ள வாசிதோன்றுவதற்கே இருவருக்குமிட்ட அடைமொழிகளை மாற்றி மாறறி எழுதுகிறார்.

வாஹநம் ஒருவனுக்கு ரிஷபம: மறறவனுக்கு வேதமயனான கருடன். ஒருவன் தன்னையாச்ரயித்தவர்களுக்கிருப்பிடமான முப் புரத்தை எரித்தவன்: மற்றொருவன் ஆச்ரிதனுடைய விரோதியை அழித்தவன். ஒருவன் தன் உடம்பில் பஸ்மாவைப் பாவம் தொலை வதற்காகப் பூசிக்கொண்டவன்: மற்றொருவன் இயறகையிலேயே குளிர்ந்த மணிவண்ணன்.

ஒருவன் மங்கையைத் தனக்காகத் தன்னுடம்பில் கொண்டு அர்த்தநாரீயானவன்: மற்றொருவன் ஜீவாத்மாக்களுக்குப் புருஷ காரமாகவிருக்கும் "அஸ்யேசாநா ஜகத" என்கிற பிராட்டியை திருமார்பில் கொண்டவன். ஒருவன், தான் ஒரு தருமத்தைச் செய்தே மேன்மைபெற்றேன் என்பது தோன்றும்படி ஜடையை தரித்திருக்கிறான்: மற்றொருவன் ஆதிராஜ்ய ஸூசகமான கிரீ டத்தை தரித்தவன். ஒருவன் தலையில் சுத்திக்காக கங்கை விழுகி றது: மற்றொருவன் ஆச்ரிதர்களை பரிசுத்தமாக்குவதற்கு அவர்க ளுள்ளவளவும் நீண்டு செல்கிற கங்கை பயந்த திருவடியையுடைய வன். நீங்களே யார் பரனென்று தேறித்தெளியுங்கோள் என்றபடி.

காப்புன்னை யுன்னக் கழியு மருவினைகள்
ஆப்புன்னை யுன்ன வவிழ்ந்தொழியும்—மூப்புன்னைச்
சிந்திப்பார்க் கில்லை திருமாலே நின்னடியை
வந்திப்பார் காண்பர் வழி. (75)

| | |
|---|---|
| திருமாலே | திருமகள் நாதனே! |
| உன்னை உன்ன | உம்மை ரக்ஷகன் என்று நினைத்து தியானித்தால |
| காப்பு | பிரதிபந்தகங்கள் |
| கழியும | தொலையும |
| உன்னை உன்ன | உன்னை தியானித்தால் |
| அருவினைகள | கொடிய பாபங்களாகிற |
| ஆப்பு | பந்தமும |
| அவிழ்ந்து ஒழியும | அவிழ்ந்து நழுவிப் போம |
| உன்னை சிந்திப்பார்க்கு | உன்னை நினைக்கிறவர்களுக்கு |
| மூப்பு இல்லை | கிழத்தனமை முதலான ஆறு பாவவிகாரங்கள்கிடையாது |
| நின் அடியை | உன் திருவடிகளை |
| வந்திப்பார | ஸேவிப்பவர்கள் |
| வழி | தேவயான மார்கத்தை |
| காணபார | பார்க்கிறார்கள். |

திருமாலைத் தெய்வமென்று தியானிப்பவர்களுக்கு ஸகல பிரதிபந்தகங்களும விலகி, திவ்யலோகப்ராப்தி பூர்வகமாக பரமஸாம்யமாகிற மோக்ஷானந்தமும் கிடைக்கு மென்கிறார்.

காப்பு — திருமாலே! உன்னை தியானித்துக் கொண்டிருந்தால் உன்னை யடைவதற்குத் தடங்கலாயிருக்கும் இடையூறுகளெல்லாம் விலகிப் போகும் அல்லது, காப்பு என்பதற்கு காவலாளர்கள் எனப்பொருள. பரமபுருஷன் ஜீவராசிகள் செய்யும் பாபங்களைத் தெரிந்து கொள்வதற்கு ஆதித்யன், சந்திரன், வாயு, அக்நி, த்யு, லோகம், பூமி, ஜலம், ஹ்ருதயம், யமன், பகல, இரவு, இரண்டு ஸந்த்யைகள், தர்மதேவதை, ஆக பதினுன்கு ஸாக்ஷிகளை நியமித்திருக்கிறுன். ஒருவன் இந்தப் பதினல்வர்களுள் ஒருவருக்காவது தெரியாமலிருக்கும்படி ஒரு காரியத்தையும் செய்ய முடியாது. இவர்கள நாம செய்யும பாபங்களை எண்ணிக் கொண்டே யிருக்கிறார்கள். ஆகவே நாம் ஸர்வேச்வரனை தியானித்தால நமக்குக் காவலாக நியமிக்கப்பட்டிருக்கும் பதினலவர்களும் நம் வினைகளை எண்ணுவதற்கு முன வரமாட்டார்கள என்றபடி.

உனனுடைய தியானத்தால அருமையான காமஙகளால் நேர்ந்திருக்கிற ஸம்ஸாரபந்தம் தானே அவிழ்ந்து போம.

உன்னைச் சிந்திக்குமவர்களுக்கு, உளன் எனப்படும் தன்மை, பிறப்பது, மாறுவது, வளர்வது, குறைவது, இறப்பது முதலிய ஆறு பாவவிகாரங்கள கிடையாது. அதாவது மீண்டும் சரீரஸம்பந்

தம் கிடையாதென்பதாம். உன் திருவடிகளை ஸேவிப்பவர்கள் உனக்கிருப்பிடமான நித்யமான பரமபதம் எனப்படும் உலகத்தை அடைவதற்கு மார்க்கமான அர்ச்சிராதி மார்க்கத்தைப் பார்க்கிறார்கள். மற்ற வுலகங்களுக்குச் செல்கிற மார்க்கங்கள் போல் இல்லாமல் பரமஸுககரமான மார்க்கத்தைக் கண்டு போகிறார்கள் என்று திருமாலை வணங்குகிறவர்களுக்கு உண்டாகும் பிரயோஜனத்தைப் பேசினார்.

**வழிநின்று நின்னைத் தொழுவார் வழுவா**
**மொழிநின்ற மூர்த்தியரே யாவர்—பழுதொன்றும்**
**வாராத வண்ணமே விண்கொடுக்கும் மண்ணளந்த**
**சீரான் திருவேங்கடம். (76)**

| | | | |
|---|---|---|---|
| வழி நின்று | பகவானை அடைய உபாயமான மார்க்கத்திலே நிலையாய் நின்று | மண் | பூமியை |
| நின்னை | உன்னை | அளந்த | அளந்துகொண்ட |
| தொழுவார் | ஸேவிப்பவர்கள் | சீரான் | கல்யாண குணங்களையுடைய ஸ்வாமி நித்யவாஸம் செய்கிற |
| வழுவா | அழிவில்லாத | திருவேங் கடம் | திருவேங்கட மலையே |
| மொழி | சொற்களாகிற வேதத்தில் | பழுது ஒன்றும் வாராத வண்ணமே | ஒருகுறைவும் வாராதபடி |
| நின்ற | சொல்லப்பட்ட | விண் கொடுக்கும் | பரமபதத்தைக் கொடுக்கும் |
| மூர்த்தியரே ஆவர் | ஸ்வரூப ஆவிர்பாவத்தைஉடையவராய் ஆவர்கள். | | |

எம்பெருமானுடைய ஸம்பந்தத்தைப் பெற்ற திருவேங்கடமே மோக்ஷத்தைக் கொடுக்கவல்லதாயிருக்க, அவனையே தொழுமவர்களுக்கு அவன் மோக்ஷத்தைக் கொடுப்பதில் ஸந்தேஹமுண்டோ? என்கிறார்.

வழி நின்று:—வேதங்களில் சொல்லப்பட்ட பக்திமார்க்கத்தில் நிலையாய்நின்று உன்னைத்தொழுகிறவர்கள், வேதங்களில் சொல்லப்பட்ட தன் ஸ்வரூபத்தின் ஆவிர்பாவத்தை அடைவதாகிற நிலையைப் பெறுவார்கள். "ஏஷ ஸம்ப்ரஸாதோ அஸ்மாத் சரீ

ராத் ஸமுத்தாய பரம் ஜயோதிருப ஸமபத்ய ஸ்வேந ரூபேண அபி நிஷ்பத்யதே” இங்ஙனம உபாஸநம செயகிற ஜீவன் இந்த சரீரத்தி லிருந்து எழுந்து மேலான ஜயோதிஸ்ஸான புருஷோததமனை அடைந்து தனககுச் சொந்தமான ஸ்வரூபாவிர்பாவத்தை அடைகி ருன். ஜீவனிடத்தில காமாவிளுல சுருக்கப்பட்டிருககிற ஞாநம ஆனந்தம முதலியகுணங்கள அாசிராதி மாாககத்தில சென்று புரு ஷோத்தமனை அடைந்து மலர்ச்சியை அடைகினறன என்று உபநிஷததுககளில் சொலலியபடி முக்தனுகிருன். அதாவது, வேதங்களில மோக்ஷத்தையடைநத ஜீவன எநத ஸவரூபததுடனி ருபபதாகச் சொலலப்பட்டிருக்கிறதோ அப்படியே உன்னை ஸேவி ப்பவர்கள், அபஹத பாபமா என்று ஆரம்பித்துச் சொல்லப்பபட்ட எட்டு குணஙகளுடைய ஆவிர்பாவத்தையடைந்து, நிதயாநநத பரித னுய நிற்கிருன். இவ்விஷயததில் ஸமசயமே இலலை. ஏனெனில் உனககு இருப்பிடமான திருவேஙகடமலையே ஒரு குறைவும் வாரா தபடி பரமபததைதைக்கொடுக்கிறது உனனுடைய ஸமபந்தம் பெற்ற ஒரு அசேதனமானமலை மோக்ஷத்தை யாவருக்கும் அளிக் குமாளுல, நீ அதை கொடுபபதில் ஐயமுண்டோ? என்று அப்பெரு மானைப்பார்தது அவனுடைய உபகாரத்தைப்பேசினுர்.

வழுவா மொழி:— குற்றங்களிலில்லாத வேதம். ஒருவனுல் செயயப்படாமல் பகவானைப்போல் நித்யமாயிருப்பதால தோஷங் களில்லாத மறை என்றபடி.

“பழுதொன்றும் வாராதவண்ணம்” இரண்டு விபூதிகளோடும் கூடிய ப்ரஹ்மத்தை அனுபவிப்பதில் கொஞ்சம்கூடக் குறைவில்லாத படி பரிபூர்ணப்ரஹ்மாநுபவத்தைக் கொடுக்கும என்றபடி.

மண்ணளந்த சீரான்”—உலகளந்த நற்குணங்கள நிறைநத ஸ்ரீநிவாஸன்.

**வேங்கடமும் விண்ணகரும் வெஃகாவும், அஃகாத**
**பூங்கிடங்கின் நீள்கோவல் பொன்னகரும் - நான்**
**[கிடத்தும்**
**நின்றுனிருந்தான் கிடந்தான் நடந்தானே**
**என்றுல் கெடுமாமிடர்.** (77)

| | | | |
|---|---|---|---|
| வேஙகடமும் | வடக்குத திருமலையும | நான்கு இடததும | ஆகிய விந்த நான்கு திவ்ய தேசஙகளிலும |
| விண்ணகரும | ஸ்ரீ வைகுணடமும | | |
| வெஃகாவும | திருவெஃகாவும | நினறான் | (முறையே) நின்றருளினான் |
| அஃகாத | அழகுமாறாத | இருந்தான் | வீற்றிருநதான |
| பூமகிடஙகின் | புஷ்பஙகளையுடைய அகழையுடைய | கிடந்தான் | சயனிததிருநதான் |
| நீள் | விசாலமான | நடந்தான் | அளநது சென்றான் |
| கோவல் | திருககோவலூரென்கிற | என்றால் | எனறு சொன்னாலே |
| | | இடா | துககங்கள் எல்லாம |
| பொன்னகரும் | அழகான திருப்பதியும | கெடுமாம் | ஓடிப்போய்விடும |

திருவேங்கடம் முதலிய பல திவ்யதேசங்கள இப்பூமியிலிருப்பதால் ஸம்ஸாரிகள் அந்தந்த திவ்யதேசங்களில் எம்பெருமானுடைய திருவிளையாடல்களைச் சொன்னால் எளிதாக முக்திபெறலாமென்கிறாரிப்பாட்டில.

வேங்கடமும்:— ஸ்ரீய: பதியான நாராயணன திருவேங்கடமலையில நின்ற திருக்கோலத்துடனிருக்கிறான். விண்ணகா என்கிற ஸ்ரீவைகுண்டத்தில் உட்கார்ந்திருக்கிறான். திருவெ கா எனகிற திவ்யதேசத்தில படுத்திருக்கிறான் திருக்கோவலூரில் அவன (உலகளந்த திருமேனியாதலால) நடக்கிறான்; எனறு ஒருவன் தன் வாயால் அவனையும் அவனுகந்தருளிய நிலஙகளையும பேசினால், அவனுடைய துயரங்களெல்லாம் தொலைந்துபோம: மோக்ஷானந்தத்தை அடைவன் எனறபடி. ஆழ்வார்கள மங்களாசாஸநம் செய்த நூற்றெட்டுத திருப்பதிகளில பரமபதமும் ஒனறு. ஆகையால் மற்றத் திருப்பதிகளோடு விண்ணகரையும் சேர்த்துச் சொன்னபடி. பிரகிருதிக்கப்பால் இருக்கிற விண்ணகரை, நம்மால் கண்டனுபவிக்கப்படுகிற திருவேங்கடம் முதலிய திவ்ய தேசங்களோடு சேர்த்து அனுஸந்திப்பதற்குக் காரணம், அவன் பரமபதத்தில் போலவே இப்புவியிலுள்ள திவ்யதேசங்களிலும் உகந்து வஸிக்கிறானென்பது பற்றியே.

நின்றானிருந்தான்:— அவன் நின்றதையும், கிடந்ததையும, இருந்ததையும், நடந்ததையும் பேசினால் நாம் நின்றும் இருந்தும்

கிடந்தும நடந்தும் செய்த பாபங்களெல்லாம் நசித்துப் போகும்' நம்மால் செய்யப்பட்ட பாபங்களனைத்தும் அழிந்துபோம் என்று' தோன்றுகிறது.

இடரார் படுவா ரெழு நெஞ்சே, வேழம்
தொடர்வான் கொடுமுதலை சூழ்ந்த - படமுடைய
பைந்நாகப பள்ளியான் பாதமே கைதொழுதும்
கொய்ந்நாகப் பூம்போது கொண்டு. (78)

| | |
|---|---|
| நெஞ்சே | என் நெஞ்சமே |
| வேழம் தொடர் | கஜேந்திராழ்வானைத் தொடர்ந்து பிடித்த |
| வான் | பெரிய |
| கொடு முதலை | கொடுமைநிறைந்த முதலையை |
| சூழ்ந்த | கொன்றவனும |
| படம் உடைய | படங்களை உடைய |
| பை நாகம் | பரந்த திருவனந்தாழ்வானை |
| பள்ளியான் | படுக்கையாகவுடையவனுமான பெருமானுடைய |
| பாதம் ஏ | திருவடிகளையே |
| கொயநாகம பூ போது கொண்டு | பறிக்கப்பட்ட புன்னைமரத்தின் அழகான புஷ்பங்களைக் கொண்டு |
| கைதொழுதும | தொழுவோம |
| எழு | எழுந்திரு (உயர்வை அடை). |
| இடர் | துக்கத்தை |
| ஆர் | எவர் |
| படுவார் | அநுபவிப்பார், பார்ப்போம், நான் அநுபவிக்கப் போவதில்லை |

இடர்:— நாம் துயரங்களில் அகப்பட்டால் என் செய்யவாவது என்று வருந்திய தன் நெஞ்சைத் தேற்றுகிறார். பொய்கையில் பூக்கொய்வதற்கென்று இறங்கின கஜேந்திரனைப் பிடித்து ஹிம்ஸித்த முதலையை முடித்தவனும், விஷத்துடன் கூடின பரந்த படங்களையுடைய வனந்தன்மேல் பள்ளி கொண்டவனுமான பரமனுடைய திருவடிகளில் நல்ல நாகமலர்களைக் கொண்டு பூஜை செய்வோம். எழுந்துவா நெஞ்சே! நம்பக்கல் துன்பங்கள் அணுகா. துன்பங்கள், நம்மிடம் நெருங்கினால் கஜேந்திரனைப் பிடித்த முதலைபட்டபாடு படும். நமக்குத் துன்பங்கள் வாரா. நம்மைப் பிடித்த துன்பங்களுக்குத்தான் துன்பங்கள் வரும். ஆதலால் எழுந்துவா; என்று நெஞ்சை அழைக்கிறார்.

நாகப்பூம்போது:— இவ்வாழ்வார் காட்டிலேயே விசேஷமாக வஸித்துப் போது போக்கினபடியால் காட்டில் அதிகமாகக்கிடைக்கும் புஷ்பங்களுள் ஒன்றாகிய புன்னாக புஷ்பத்தால் பூஜை செய்யலாம் என்றார். உயர்ந்த புஷ்பங்களை தேடிச் செல்லவேண்டாம். அகப்பட்ட புஷ்பங்களைக் கொண்டே ஆராதிக்கலாமென்றபடி.

**கொண்டானை யல்லால் கொடுத்தாரை யார் பழிப்பார்**
**மண்தா வெனவிரந்து மாவலியை - ஒண்தாரை**
**நீரங்கை தோய நிமிர்ந்திலேயே நீள்விசும்பி**
**லாரங்கை தோய வடுத்து.** (79)

| | | | |
|---|---|---|---|
| மண்தா என | மூன்றடி பூமியைக் கொடு என்று | அடுத்து நிமிர்ந்திலேயே | ஓங்கி வளரவில்லையோ |
| மாவலியை | மஹாபலியை | கொண்டானை | இப்படித் தன் வஸ்துவைப் பெறுவதற்கு மாறுவேடம் பூண்டு தன்னதாக்கிக் கொண்ட ஸ்வாமியை |
| இரந்து | யாசித்து | | |
| (அவனும் கொடுத்தேன் என்ன) | | | |
| ஒண் தாரை நீர் | அழகான தாரையான ஜலம் | அல்லால் | பழிக்கிறார்களே யல்லாது |
| அம்கை | தன்னுடைய அழகான கையில் | | |
| தோய | விழுந்து தோய்ந்த அளவில் | கொடுத்தாரை | தனக்கு ஸொந்தமில்லாத பொருளைக் கொடுத்த மாவலியை |
| நீள் விசும்பிலார் | விசாலமான ஆகாசத்தில் வஸிக்கிற தேவர்களுடைய | யார் பழிப்பார் | பழிப்பவர்கள் யார்? |
| அம் கை | அழகான கைகள் | ஒருவரும் பழிக்கமாட்டார்கள் இது என்ன நியாயம் என்றபடி. | |
| தோய | தோய்ந்து திருவடி விளக்கும்படி | | |

தன்னை ஆச்ரயித்தவர்களைக் காப்பாற்றுவதற்காக தன் ஸ்வரூபத்தை யழித்துக் கொண்டு அவன் உபகரிப்பதைப் பேசுகிறார்.

கொண்டானை:— இந்த ஜகத்தில் ஜனங்களுக்கு விபரீத புத்தியே நடையாடுகிறது போலும், குணங்கள் தோஷங்களாகவே தென்படுகின்றன. தோஷங்கள் குணங்களாகவே தென்படுகின்றன. இது என்ன ஸம்ஸாரத்தின் கொடுமை! ஸ்ரீய: பதியான

நாராயணனுடைய பொருளான உலகைத் தன்னதென்று அஹங்காரத்தால் அபிமானித்திருந்த மஹாபலியினிடம் தேவர்களுக்காக பகவான் வாமனனாய் வந்து, யாகசாலையில் சென்று, மூவடி மண்ணிரந்தபின், பெரிய வடிவெடுத்து உலகங்களனைத்தையும் அளந்து சராசரங்களைத் தன்னதாக்கிக்கொண்டான், என்கிற வரலாற்றை எல்லாரும் கேட்டிருக்கிறார்கள. கேட்டதும் அப்பகவனையே மஹாபலியை சிறிய திருவடியால் மூவடி கேட்டுப் பெரிய வடியால அளந்தான்: தன் ஸ்வரூபத்தை மறைத்துக் கொண்டுவந்தான். ஏமாற்றுகிற ஸ்வபாவமுள்ளவன்; தனக்குத் தானம் கொடுத்தவினை மாவலியைத தன் தாளால் பாதாளத்தில் அழுத்தினன். ஆகையால் க்ருதக்நன்" என்று பலவாறாகப் பழிக்கிறார்கள். தானம் கொடுத்த மாவலியை யாரா பழிக்கிறார்கள. பெருமானுக்குரியதான புவநங்களையெல்லாம தன்னுடையதென்று நினைத்தானே: அஹங்காரி. பெருமானுடைய பொருளைத் திருடிக்கொண்டவன், என்றும் யாராவது சொல்கிறார்களா? இது என்ன அநியாயம்! உலகத்தார்களுக்கு தோஷங்களெல்லாம் குணங்களாகத் தோன்றுகின்றனவே. இராவணன் சிசுபாலன முதலியவர்களைப்போல் மஹாபலியையும் வதைக்கவேண்டியதாயிருக்க அவனிடமுள்ள ஔதார்யம என்ற குணத்தை மிகவும மெச்சி, தன்னுடைய பரஸ்வரூபத்தையும் அழியும்படி மாற்றி உலகிலுள்ள யாசகர்களைப்போல் வந்து, உலகங்களெல்லாம் மஹாபலியின நினைவின் படியே அவனதாகவே வைதது யாசித்து, உலகங்களை ஸ்வாதீனப்படுததிக் கொண்டு, அவன் தலையிலேயும் திருவடிகளையும் வைத்தருளினவன் பரமஸௌலபன், பரமோபகாரகன் சரணாகதரக்ஷகன என்று புகழவேண்டியிருக்கப் பழிக்கிறார்களே! இது என்ன உலகின் இயல்பு என்கிறார்

ஒண்தாரைநீர்:— பூமிதானம் கொடுப்பதற்காக மஹாபலி வார்த்த சுத்தமான ஜலம.

அம்கை தோய நிமிர்ந்திலேயே:—ஜலம் கையில் விழுந்தவுடனேயே வளர்ந்தான். சிறிதுநேரம்கூடத் தாமதிக்கவில்லை யென்பதாம்.

நீள் விசும்பிலார் அம்கைதோய:— பகவான் வாமநனாய் மண்ணிரந்து கையில் நீரேந்தியதும், மிகவும் விரைவாக வளர்ந்தார். கை

யில் மாவலி வார்த்த ஜலம் திருவடியில விழுகிற பொழுதுக்குள்ளே மூவுலகையும் வ்யாபித்த வடிவமாய நின்றான். உடனே விண்ணுலகிலுள்ள தேவர்கள் எல்லாம மாவலி வார்த்த ஜலத்திலேயே திரிவிக்ரமனுடைய திருவடிகளைக் கழுவினார்கள என்று தோன்றுகிறது.

அல்லது, நீள விசும்பில் ஆரம கைதோய — தன மார்பிலணிந்திருந்த முத்துமாலையும், தன கையும் ஆகாசத்திலே தொடும்படியாக வளர்ந்தான் என்றும பொருள புகலவுமுண்டு.

அல்லது நீள விசும்பிலார் அமகைதோய:— விண்ணவர்கள் தன்னுடைய அழகிய திருத்தோள்களில இடிக்கும் படியாக வளர்ந்தான என்றும சொல்லலாம்.

அடுத்த கடும் பகைஞற் காற்றேனென் றோடி
படுத்த பெரும்பாழி சூழ்ந்த — விடத்தரவை
வல்லாளன் கைக்கொடுத்த மாமேனி மாயவனுக்கு
அல்லாது மாவரோ ஆள். (80)

| | | | |
|---|---|---|---|
| அடுத்த கடு பகைஞற்கு | நெருங்கின கொடுமையான சத்ருவான கருடனுக்கு | சூழ்ந்த | சுற்றிக்கொண்ட |
| ஆற்றேன் | நேரே நிற்க சக்தியற்றவனல்லேன் | விடத்து அரவை | விடமுள்ள ஸர்ப்பமுகன் எனகிற ஸர்ப்பத்தை |
| என்று | என்று சொல்லிக்கொண்டு | வல்லாளன்கை கொடுத்த | பலமுள்ள கருடன கையிலே அடைக்கலமென்று சொல்லிக்கொடுத்த |
| ஓடி | வேகமாய் ஓடிப்போய் | மாமேனி மாயவனுக்கு அல்லாதும் | உயர்ந்த திருமேனியையுடைய ஆச்சரிய சேஷ்டிதனை பெருமானைத்தவிர |
| படுத்த | பெருமான் பள்ளிகொள்ளுமாறு படுத்த | ஆள் ஆவரோ? | மற்ற தேவர்களுங்கு அடிமையாவர்களோ? |
| பெரும்பாழி | படுக்கையாகிய பெரிய ஆதிசேஷனை | | |

எம்பெருமானுடைய சரணாகதரக்ஷண ப்ரகாரத்தைப் பேசுகிறார்.

அடுத்த:— தேவலோகத்தில் தேவேந்திரனுடைய ஸாரதியான மாதலி யென்பவன் தன்னுடைய குணகேசி என்கிற பெண்ணுக்கு

விவாஹம் செய்விப்பதற்காகத் தகுந்த மாப்பிளேயைத் தேடப் புறப் பட்டு, பல லோகங்களுக்குச் சென்றுக் கடைசியாகப் பாதாள லோகத்தில் போகவதி என்கிற பட்டிணத்தைச் சேர்ந்து, அங்கு ஆர்யகன் என்கிறவனுடைய பேரனும் சிகுரன் என்பவனுடைய குமாரனுமான ஸுமுகன் என்கிற நாக குமாரனைக் கண்டு, அவனு டைய நற்குணங்களிலீடுபட்டு, அவனுக்குத் தன்புதல்வியை மணம் செய்விக்க ஆசைப்பட்டு அவனது பாட்டனை ஆர்யகனிடம் தன் னுடைய எண்ணத்தை வெளியிட்டான். ஆர்யகனும், இவ்விஷயத் தில் எனக்கு ஆக்ஷேபமில்லை. ஆனல் நாககுலத்திற்குப் பகைவனை கருடன் இன்னும் ஒரு மாதத்திற்குள் என்னுடைய புதல்வனையும் பேரனையும் கொன்றுவிடுவதாகச் சபதம் செய்திருக்கிறன். கருட னுடைய சபதம் பொய்யாகாது. ஆதலால் இப்பொழுது விவாஹம் செய்வது தகுதியல்ல: என்று சொல்லவே மாதலி நான் ஸுமுகனே கருடனிடமிருந்து எப்படியாவது காப்பாற்றிக்கொள்கிறேன் என் றுசொல்லி விட்டு, ஸுமுகனையும் அழைத்துக் கொண்டு தேவலோ கம் சென்று உபேந்திரபகவானேடு கூடவிருந்த தேவேந்திரனிடம் சென்று இந்த ஸுமுகனுக்கு மரணம் வாரதபடி காத்தருள வேணு மென்று வேண்டினன். உடனே உபேந்திர பகவான், இவனே அம் ருதம் சாப்பிடும்படி செய்தால் கருடனுல் துன்பம் நேராதபடி காக் கலாம என்ருர். அது கேட்ட இந்திரன் கருடனுடைய வலிமை யை நினைத்து அஞ்சி அவனுக்கு அம்ருதத்தைக் கொடுக்காமல் தீர் க்காயுளாக இரு; என்று வரமளித்தான். அதைக்கேட்டு ஸந்தோ ஷமடைந்த மாதலி ஸுமுகனுக்குத் தன் புதல்வியை மணம் செய்வி த்துக் கவலையற்றிருந்தான். உடனே கருடனும் பாதாளலோகம் சென்று ஸுமுகனைக் காணுமல் மீண்டும் தேவலோகம் வந்து ஸுமுகன் வரம் பெற்ற செய்தியைக் கேட்டு இந்திரனிடம் மிகுந்த சினம் கொண்டு இந்திரனிடம் மிகவும் க்ரூரமான வார்த்தைகளே மொழியவே, ஸுமுகனும் பயந்து, உபேந்திரபகவானிடம் சென்று அவனுக்குப் படுக்கையாகவமர்ந்திருக்கும் ஆதிசேஷனுகிற கட்டி லின் காலேச் சுற்றிக்கொண்டு பெருமானேச் சரணம் புகுந்தான். அதை அறிந்த கருடனும் அவ்வுபேந்திரனிடம சென்று என் இரை யைநான் உண்ணுதபடி நீ எப்படித் தடுக்கலாம். நான் தேவர் களனைவரிலும் மிகுந்த வலிமை வாய்ந்த உன்னை என் சிறகுகளால்

அநாயாஸமாக வஹிக்கவில்லையா? உன்னை வஹிப்பதற்கு என்னைப் போன்ற பலசாலி எந்தலோகத்திலாவது அகப்படுவார்களா? நான் இல்லாவிடில உன்னை வஹிபபவர் யார்? எனக்கே விரோதம் செய்கிறாயே! என்று பலவாறாகப்பேச, உபேந்திரனும் கருடனே! என்னை வஹிக்க ஒருவருமே உலகில கிடையாது. நீயும என்னை வஹிக்கவில்லை. நான் எல்லாவுலகங்களையும் தரிப்பது போல உன்னையும் தூக்கிக் கொண்டு செல்கிறேன். நீ உன் வலிமையால் என்னை வஹிக்கிறாய் என்று கருதினால், இப்பொழுது எனனுடைய கைவிரலைத் தூக்கு பார்பபோம் என்று சொலலி, கருடனுடைய தோளில் தன் கையின் சுண்டுவிரலை வைத்தான. கருடனும் அதைத் தூக்கச் சக்தியறறவனாய மூர்ச்சை யடைந்து கீழே விழுந்தான. உடனே பகவான் கருடனுக்குச் சில லோகங்களைக காண்பித்தார். அந்த லோகஙகளில் கருடனைப்போலவே பல்லாயிரம் கருடன்கள் தெனபட்டன உடனே கருடன வெட்கமடைந்து பகவானிடம் வணக்கத்துடன் அபராதங்களைப் பொறுத்தருள வேண்டுமென்று பிரார்த்திக்கப் பகவானும் கிருபைகூர்ந்து, ஸுமுகனை எடுத்து கருடனிடம் ஒப்புவித்து இவனுக்கு ஒருகேடும் வாராதபடி காப்பாற்றி வா என்று அடைக்கலமாய வைத்தான. கருடனும் ஸுமுகனை அது முதல தன் தோளிலே அணைத்துக் கொண்டு காப்பாற்றி வந்தான். பிறகு இருவரும் மிகவும் அன்புவாயந்த நண்பர்களா யிருந்தார்கள் என்ற வரலாறு இப்பாசுரத்தில் அநுஸந்திக்கவும்.

இப்படிப் பரிஹரிக்க முடியாத கருடன் போன்ற விரோதிகளிருபபினும் சரணாகதனை அவ்விரோதியைக் கொண்டே ரக்ஷிப்பது என்ற குணம் வாய்ந்த ஸர்வேச்வரனை யல்லது மற்றதேவர்களை யாராக அடைவார்களோ? என்கிறார்.

ஸ்ரீ ராமனைச் சரணமடைந்த விபீஷணனை சேர்த்துக் கொள்ளக் கூடாதென்று ஸுக்ரீவன் தடுத்தான். ஸ்ரீராமன் அவனுக்கு ஸமாதானம் சொல்லி அந்த ஸுக்ரீவனையே விபீஷணனைத் தன்னிடம் அழைத்து வரும்படி ஏவினான், அவனும் அழைத்து வந்து அவனோடு நண்பனான், அதுபோல் விரோதிகளையும் அநுகூலாக்கி ரக்ஷிப்பன் என்பதையும் கொள்க.

ஆளமர் வென்றி யடுகளத்து ளன்ஞான்று
வாளமர் வேண்டி வரை நட்டு—நீளரவைச்
சுற்றிக் கடைந்தான் பெயரன்றே, தொன்னரகைப்
பற்றிக் கடத்தும் படை. (81)

| | | | |
|---|---|---|---|
| ஆள் அமா | வீரர்கள் பொருந்தி யிருக்கிற | நீள் அரவை | நீண்ட வடிவையு டைய வாஸுகியென னும் பாமபை |
| வென்றி | ஐயததைக கொடுக கிற | சுற்றி | கயிறுகசசுற்றி |
| அடுகளத்துள் | கொலை நடககிற யுததஸ்தலததில் | கடைநதான | க்ஷீரஸமுததிரததை கடைநதவனுடைய |
| அஞ்ஞான்று | அசுரர்கள் தேவர் களை வெல்லகூடிய அககாலததில் | பெயாஅன்றே | திருநாமமல்லவா? |
| தேவாகளுககு ஐயததை விருமபி அதற்காக | | பறறி | பதத ஜீவாகளைப பிடிததுககொணடு போய |
| வாள் அமர் வேணடி | மிகுந்த சிறப்பையு டைய யுதத்த்தை ஆசைபபட்டு | தொல் நரகை | அநாதியாகவந்திரு ககும நரகததை |
| வரைநட்டு | (அதற்காக) மந்தர மென்கிற மலையை மததாக நாட்டி | கடததும | தாணடும்படி செய் விககும |
| | | படை | ஸாதனமான கருவி. |

பிரயோஜனாந்தரங்களை விரும்பும் அதிகாரிகளுக்கும் அருள்புரி யும் தன்மை இப்பாட்டில் சொல்லப்படுகிறது.

ஆளமர்:—துர்வாஸ முனிவரின் சாபத்தால் ஐச்வர்யத்தை யிழந்த தேவர்களை அஸுரர்கள் அடித்து ஹிம்ஸைசெய்யவே, தேவர்கள் அஸுரர்களை ஜயிப்பதற்காகவும், தேவர்களுக்கு தீர்க்கா யுளைக் கொடுப்பதற்காகவுமாகத் திருப்பாற்கடலில் மந்தரமலையை மத்தாக நாட்டி வாஸுகியெனகிற பாம்பைக் கடைகயிறுக்கட்டித தன் உடம்பு நோவக் கடைந்து தேவர்களுக்கு அம்ருதத்தையும் மதிப்பையும் ஆயுளையும் கொடுத்த பெருமானுடைய திருநாமத்தைச் சொல்லுங்கோள், அத்திருநாமம் ஸம்ஸாரத்தில அகப்பட்டிருக்கிற ஜீவன்களை வாரி எடுத்துக்கொண்டுபோய் பிரகிருதி மண்டலத்திற்கு

அப்பால் நித்யவிபூதியிலே கொண்டு சேர்க்கிறது. ஸம்ஸாரத்தைத் தாண்டுவதற்கு ஸாதனம், அம்ருத மதனம் செய்த பெருமானுடைய திருநாமங்கள்; என்றார்.

**படையாரும் வாள் கண்ணார் பாரசி நாள், பைம்பூம்**
**தொடையலோ டேந்திய தூபம்—இடையிடையின்**
**மீன்மாய மாசூணும் வேங்கடமே, மேலொருநாள்**
**மான்மாய வெய்தான் வரை. (82)**

| | | | |
|---|---|---|---|
| படை ஆரும் | வேலாயுதததிற்கு ஸமமான | மாசூணும | அழுககடையுமபடி செய்கிற |
| வாள்கண்ணார் | ஒளிபொருந்திய கண்களையுடைய மாதாகள் | வேஙகடமே | திருவேஙகடம் தான் |
| பாரசி நாள் | த்வாதசியனறைககு | மேல்ஒருநாள் | முன்னொருகால் (இராமாவதாரகாலத்தில் |
| பை பூ தொடையலோடு | அழகான புஷ்பமாலைகளோடு | மான் | மாரீசனென்கிற மான் |
| எந்திய | எந்திக்கொண்டுவநத | மாய | மடியும்படி |
| தூபம | தூபமானது | எய்தான | அம்புதொடுதத பெருமானுடைய |
| இடை இடையில் மீன் | வானில் நடுவே தோன்றுகிற நக்ஷத்திரங்கள் | வரை | மலையாகும |
| மாய | மறையுமபடியாக | | |

பெண்களுள்படவனைவர்க்கு மாச்ரயிக்கும்படியான அவனுடைய ஸௌலப்ய குணம் பேசப்படுகிறது.

படையாரும்:— வேலாயுதம்போன்ற பிரகாசத்தையுடைய கண்களையுடைய மாதர்கள் துவாதசிதினத்தில் அழகான புஷ்பங்களையும் தூபத்தையும் கொண்டுவந்து வேங்கடநாதனை ஆராதிக்கிறார்கள். அம்மாதர்களேந்திவந்த தூபத்தின்புகை ஆகாசத்தில் பரவிஃ நக்ஷத்திரங்களை மறைத்து ஆகாசத்தை அழுக்கடைந்ததாகஃ செய்கிறது. திருமலையின் மேல் பூவும் புகையுமாய் காணப்படுகிறதேயல்லது ஆகாயமும் நக்ஷத்திரங்களும் தென்படவில்லை. அப்படிப்

பெண்களுக்கும் ஆச்சர்யிக்கும்படிக் கிடாக, முன் இராமாவதாரத்தில பிராட்டிக்காக மாரீசனுகிற மாயமானை மடியும்படி செய்தபெருமான திருமலையில் நித்ய வாஸம் செய்கிறுன். ஈச்வரன் தனக்கு வரும் கேட்டையும் மதியாமல ஆச்ரிதர்களுக்குக காரியம செய்பவனென்றும ஸர்வ ஸுலபனென்றும் இபபாட்டில பேசபபட்டது.

பல்லாயிரக்கணககான மனிதாகள திருவேஙகடத்தை ஸேவிததுநிறக, இஙகு பெண்களை மாத்திரம சொன்னதறகடி. அறிவில்லாதவர்கள கூட திருமலைநாதனை ஸேவிக்கிறுர்கள என்று, அவனுடைய ஸர்வ ஸுலபத்வததைக் காட்டுவதறகாக.

த்வாதசி எனனும வடசொல தமிழில பாரசி என்று சிதைநததெனச் சிலா சொல்லுவாாகள.

பாரணைநாள்—பாரசிநாள என்று சிதைந்ததெனச் சிலா ஓதுவா.

வரைகுடைதோள் காம்பாக ஆநிரை காததது, ஆயர்
நிரைவிடையேழ் செற்றவாறென்னே—உரவுடைய
நீராழியுள் கிடந்து நேரா நிசாசரர்மேல்
பேராழி கொண்ட பிரான். (83)

| | | | |
|---|---|---|---|
| உரவு உடைய | பலமுள்ளதான | குடை | குடையாகவும |
| நீர் ஆழியுள் | நீர்நிறைந்த கடலில் | தோள் | தன தோளை |
| கிடநது | பள்ளிகொணடு | காமபாக | குடைககாமபாகவும (செயது) |
| நேரா | சததுருவாய வநத | ஆநிரை காததது | பசுககளின் திரளைக காப்பாற்றி |
| நிசாசராமேல் | மதுகைடபாகள் எனனும அசுராகளின்மேல் | ஆயா | இடையர் வைததிருநத |
| பேர் ஆழி கொண்ட | (அவர்களை அழிப்பதற்கு) பெரிய சக்ராயுததததை கையில தரிதத | நிரைவிடை ஏழ் | திரண்ட எருதுகள் ஏழையும் |
| பிரான் | உபகாரகனே! | செற்ற ஆறு | அழித்தவிதம |
| வரை | கோவர்ததனகிரியை | என்னே | எங்ஙனம் தான். |

ஆச்ரிதர்களுககாகத் தன்னையும் மறந்து காரியம் செயயும் ஸ்வ பாவம இபபாட்டில் எழுதப்படுகிறது.

வரைகுடை:— எம்பெருமான் ஸாதுக்களை ரக்ஷிபபதற்காகவே அவதாரம செயகிறுன. ஸாதுககளுககு இடையூறுகள செயவதால துஷ்டர்களை ஹிம்ஸிகக வேண்டியதாய் வருகிறது. ஒரு ஸாதுவுக்கு ஒருவன் விருந்து அளிக்கிறுன். அவன் உட்கார்ந்து உண்ணும் போது இலையை ஒரு நாய்வந்து இழுககிறது. அந்த நாயை அடிக்க வேணடியதாய நேர்ந்துவிடுகிறது. அதுபோல் ஸாதுக்களைக் காப பாற்ற வேண்டித் துஷ்டர்களை அடக்கவேணடியதாய இருககிறது. அதறகாகத் திருவாழியாழவானை எப்பொழுதும கையில் ஏந்திக்கொ ண்டிருக்கிறுய. நீ திருப்பாறகடலில் கிடந்து, ப்ரஹ்மதேவனை அடி தது வேதஙகளையபஹரிததுச் சென்ற மதுகைடபாகளை வதைக்கக் கருதி, படுததிருந்தபடியே யிருநது திருவாழியாழவானை அனுபபி அவர்களை முடிககவிலலையா? அதுபோல நீ ஆசரிதவிரோதிகளை அழிக்க நினைததால் உனனுடைய திவயாயுதஙகளை அனுப்பியோ; அலலது உனனுடைய ஸஙகலபததினுலோ காரியததை ஸாதிததுக் கொளளலாமே! கோவர்த்தன மலைககுச்செயத பூஜையைப் பொறு ககாத தேவேந்திரன திருவாயப்பாடியாரிடததில கோபங்கொண்டு பெருமழையை ஏவி இடையர்கள, பசுக்கள, கன்றுகள, எலலாருக் கும் துன்பத்தை விளைவிக்கவே, நீ உனது திருவாழியை அனுபபி தேவேந்திரனைத் தடுக்கலாமே; நப்பின்னையின் விவாஹத்திறகு இடையூறுக விருந்த ரிஷபங்களையும திருவாழியால கொல்லலாமே எதற்காக மலையைத்தூக்கிணுய், எதற்காக நேரே சென்று ரிஷபங்க ளோடு சண்டை செயதாய்? தன் உடம்பைக் கஷ்டப்படுத்திக் கொண்டு ஏன் இங்ஙனம் வேலை செய்கிறுய். சக்தியில்லாதவனன் றே அங்ஙனம் உடம்பைக் கஷ்டப்படுத்திக் கொள்ளவேணுமென்று பெருமானைக் கேட்கிறுர்.

இந்தக் கேள்வியால், எம்பெருமான் ஆச்ரிதர்களுக்காகக் காரி யம் செய்கிற பொழுது தன்னையும் மறந்து தன் சக்தியையும் மற ந்து திவ்யாயுதங்களையும் மறந்து தானே நேரில் செய்யவேண்டு மென்று தோன்றுகிறது. தானே காரியம் செய்தால த்ருப்தியா

யிருக்கிறது. வேறொருவனை அனுப்பினால் மனம் ஸமாதானத்தை அடைகிறதில்லை. இப்படித் தன்னுடம்பைக் கஷ்டப்படுத்திக்கொண்டாவது காரியம் செய்யவேணுமென்னும்படியான கரைபுரண்ட ஸ்நேஹம் அடியார்களிடம் உளது என்று நாம் அறியவேண்டும்.

**பிரானுன் பெருமை பிறராரறிவார்**
**உரா யுலகளந்த நான்று—வராகத்**
**தெயிற்றளவு போதாவாறென்கொலோ, எந்தை**
**அடிக்களவு போந்தபடி** (84)

| | | | |
|---|---|---|---|
| பிரான்! | உபகாரகனே! | வராகத்து | வராஹரூபியான உன்னுடைய |
| உராய் | சிரமமில்லாமலே | எயிறு | கோரப்பல்லின் |
| உலகு | லோகங்களை | அளவு | ஏகதேசமாகிற வளவிற்கும |
| அளந்த நான்று | அளந்த ஸமயத்தில் | போதா | போதாமலிருந்த |
| எந்தை | என் ஸ்வாமியான உனது | ஆறு | பிரகாரம |
| அடிக்கு | திருப்பாதங்களுக்கு | என்கொலோ | எங்ஙனமோ! |
| அளவு போந்த | அளப்பதற்குச் சரியாயிருந்த | உன்பெருமை | உனதுமேன்மையை |
| படி | பூமியானது | பிறர் ஆர் அறிவார் | வேறு யார்தான் அறிவார்கள்? (அறிவார் யாருமில்லை) |

ஆச்ரிதர்களுக்காகத் தன்னையுமறியாது பாடுபடுகிற ஸர்வேச்வரனுடைய பெருமை ஆராலும் அறியமுடியாது என்கிறார்.

பிரான்:— ஒரு நாள் நீ வாமநனாய் வந்து மண்ணிரந்து மிகவும் பெரியவடிவத்துடன் உலகங்களை அளக்கும் பொழுது உன்னுடைய திருவடிக்குள் அடங்கின இப்பூமியானது, மற்றொருகால் நீ வாராஹரூபத்துடன் பாதாளலோகம் சென்று ஹிரண்யாக்ஷனைக் கொன்று திரும்பி வரும்பொழுது உன்னுடைய கோரப்பற்களின் அளவுடன் கூடக் காணப்படவில்லையே! மிகவும் சிறியதாய் இருந்ததே! ஆதலால் உனது பெருமையை ஆர் அறிவார்? உன்னாலும் அறியமுடி

யாதென்றே தோன்றுகிறது; என்று அவ்வீச்வாணிடம் விண்ணப்பம் செய்தார். இப்பாசுரத்தால் வாராஹமூர்த்தியைக் காட்டிலும் திரிவிகரமன் சிறிய வடிவுளளவன் என்று கண்டு வாராஹ பகவானுடைய பெருமையை உணரததகும்.

உராய="உலாவிக்கொண்டு" எனப் பொருள். சிறிதும சிரமமின்றி உலகளந்தான் எனக்கொளக. அலலது உராய்=உரோசிக கொண்டு. திருவடியைப் பூமியில் பொருந்தவைத்துக் கொண்டு அல்லது எலலாப பொருளகளையும் மேலே உறையும்படி எல்லாவறறையும் தீணடிக்கொண்டு உலகளந்தான; என்பர்.

படி கண்டறிதியே பாம்பணையினான், புட்
கொடி கொண் டறிதியே கூறாய்—வடிவில்
பொறியைந்து முள்ளடக்கிப் போதொடு நீரேந்தி
நெறி நின்ற நெஞ்சமே நீ. (85)

| | | | |
|---|---|---|---|
| நெஞசமே | எனது மனமே! | பாமபணையினை | அரவத்தைப படுககையாகவுடையனுடைய |
| பொறி ஐந்தும | ஐந்துபுலனகளையும | புளகொடி | பக்ஷியாகிற தவஜத்தை |
| வடிவில் உள் அடக்கி | (டட்டிமேயாமல்) சரீரத்திற்குள்ளே அடங்கசசெய்து | கண்டு | பாாதது |
| போதோடு | புஷ்பங்களோடு | அறிதியே | அநுபவிததிருககிறாயோ? |
| நீர் ஏந்தி | தீர்தததையும் தரிததுக்கொண்டு | படி | (அலலது) அவனது திருவுடம்பை |
| நெறி நின்ற | அவனை அடையும வழியில் நினறுகொண்டிருககிற | கண்டு | ஸேவித்து |
| நீ | நீ | அறிதியே | அறிநதிருககிறாயோ? |
| | | கூறாய | சொல்லு. |

படிகண்டறிதியே:— கீழே பெருமானைப் பார்த்து உன் பெருமையை ஆர் அறிவார்; என்று கேட்கவே தனது நெஞ்சம் நான் அறிந்தேன் என்று சொல்லிற்று. உடனே ஆழ்வார் தன நெஞ்சைக் கேட்கிறார். நெஞ்சமே! நீ பகவானை அறிந்தேனென்று எப்

படிச் சொல்லுகிருய்? நீ மறற இந்திரியங்களை வெளியில் மேய வொட்டாமல அடக்கி புஷ்பங்களையும் தீர்த்தத்தையும் எடுத்துக் கொண்டு அவனைத் தொழும்படியான ஆச்ரயணத்தில ானபட்டிருக் கிருய் என்பது எனககுத் தெரியும். இதைத்தவிர நீ அவனை எப பொழுது ஸாக்ஷாதகரித்தாய சொல்லு. நீ ஸாக்ஷாதகரித்திருக்கும் பக்ஷத்தில அவன் திருவனந்தாழ்வானமேலபளளிகொண்டபடியைச் சொலலு பார்ப்போம். அல்லது அவன் பெரிய திருவடிமேல் எறி எழுந்தருளும பிரகாரத்தைச் சொல்லு பார்ப்போம். நீ அவனை அறிந்தேன் என்று சொல்லுகிருயே! நீ அவனை எந்தப்பிரகாரமாகப பார்த்தாய என்று கேட்கிருர.

இத்தால் இவ்வாழ்வாருக்குப் பெரிய திருவடிமேல் எறி எழுந்தருளும் பெருமானை ஸேவிபபதிலும் திருவனந்தாழ்வான் மேல் எறியருளும் பெருமானை ஸேவிப்பதிலும் மிகுநத ஆசையெனத் தெரிந்து கொளக.

நீயும் திருமகளும் நின்ருயால், குன்றெடுததுப்
பாயும் பனி மறைத்த பண்பாளா—வாசல்
கடைகழியா வுள்புகாக் காமர்பூங் கோவல்
இடைகழியே பற்றி யினி (86)

| | | | |
|---|---|---|---|
| குனறு | கோவாத்தன பாவ ததததை | கழியா | போகாமலும் |
| எடுதது | உயரே தூககி | உள்புகா | வீட்டிற்குள நுழை யாமலும |
| பாயும பனி | மேலே விழுகிற மழையை | இடைகழியே | நடுவிடமான இடை கழியையே (ரேழி யையே) |
| மறைதத | தடுதத | பற்றி | விரும்பி |
| பணபாளா! | குண முள்ளவனே! | நீயும திருமக ளும் | நீயும பிராட்டியு மாக |
| காமர் பூ கோவல் | ஆசைபபடுமபடி அழகுவாய்ந்த திரு ககோவலூரில் | இனி | இப்போது |
| வாசல் கடை | வீட்டுத திருவாச லுககு வெளியில் | நின்ருய் | நின்றருளினுய் |
| | | ஆல் | ஆச்சரியம் |

ஆழ்வார் தனது நெஞ்சைக் குறித்து நீ அவ்வீச்வரனை ஸாக்ஷாத் கரித்ததில்லை என்ருர் கீழ்ப்பாட்டில். அவ்வார்த்தைகளைக் கேட்டுப் பொறுக்கமாட்டாத ஸர்வேச்வரன் முன்போல் ம்ருகண்டு முனிவ ரின் திருமாளிகையின் இடைகழியில் (ரேழியில்) பிராட்டியுடன் எழுந்தருளி ஸேவை ஸாதித்தார். அப்பொழுது அவனை அநுப வித்த ப்ரகாரம் இப்பாட்டில் பேசப்படுகிறது.

நீயும்:— மலையைத் தூக்கி மாரிகாத்த பரமோபகாரகனே! நானும், பூதத்தாரும், பேயாரும் காடுகளில் தனித்தனியே திரிந்து கொண்டிருக்க, எங்களை இம்முனிவரது இல்லத்தில் ஒன்று சேர்த்து உன் திருமேனியையும் கண்டு ஸேவித்துக் களிக்கும்படி செய்தா யே; இது என்ன நீர்மை! இது என்ன ஆச்சரியம் என்று கொண் டாடுகிருர்.

நீயும் திருமகளும்:— அடியார்களிடம் பேரன்புகொண்ட நீயும் ந கச்சிந் நாபராத்யதி என்று அடியார்களுக்குப் புருஷகாரபூதை யான பிராட்டியும் எழுந்தருளினபடியை என் சொல்லவல்லேன் என்வாயகொண்டு என்கிருர்.

குன்றெடுத்து:— அவ்வாழ்வார்களின் நடுவே பெருமான் நெரு க்கி நிற்கிறது, மலையை எடுத்து மழைகாக்கும் காலத்தில் இடை யர்களுடைய கூட்டத்தின் நடுவே நின்றது போலிருக்கிறது என் கிருர். இத்தால் தாழ்ந்தவர்களுடன் நெருங்கி வஸிப்பதாகிற ஸௌசீல்யம் என்கிற குணத்தைப் புகழ்ந்தாராயிற்று.

வாசல் கடைகழியா:— ஸ்ரீய: பதியான புருஷோத்தமன் முதலாழ்வார்கள் நின்றுகொண்டிருந்த மிருகண்டு முனிவரது வீட் டின் இடைகழியிலேயே (ரேழியிலேயே) நின்ருர். வீட்டிற்குள் ளும் நுழையவில்லை. வீட்டின் வெளிப்புறத்திலும் எழுந்தருள வில்லை என்கிருர். இத்தால் ஆழ்வார்கள் போன்ற அநந்யப்ரயோ ஜநராயும் அநந்யசரணர்களாயுமிருக்கிற பாகவதர்களிருக்குமிடத்தை யே அவன் விரும்பி வருகிருன் என்பது தோன்றும். வீட்டிற் குள்ளே தவத்தால் பரகதியை ஸம்பாதித்துக் கொள்ளலாமென்ற நினைவுகொண்ட முனிவர்கள் வஸிப்பதால் அங்கே போகவில்லை. வீட்டிற்கு வெளியே தன்னையே நினையாத ஸம்ஸாரிகள் நிறைந்தி

ருப்பதால நெருப்புப்பிடித்து எரிகிறவிடம்போனற வெளிப்புறத்தி லும் செல்லவில்லை. ரேழியிலேயே நின்றுகொண்டிருந்தார். காமபுரு ஷார்த்ததநிஷ்டிடபட்டவர்கள் தாங்கள காதல்கொணட பெண்மணி களை கண்களில் படவே, அவ்விடத்தைவிட்டு அப்பால செல்லமாட் டாமல் திகைத்துநிற்பதுபோல், எமபெருமான் தனனடியார்களான அன்பர்களிருந்த ரேழியைவிட்டு விலகவில்லை எனறபடி. வடமொழி யில் தேஹளீ என்று ரேழியைச் சொலலுவார்கள. ஆதலால் இத திருக்கோவலூரெம்பெருமானுக்கு தேஹளீசன் என்றே திருநாம மும் வாயந்தது.

காமர் பூ கோவல்:— முதலாழவார்களைக் கிட்டி வந்து ஆட் கொண்ட பெருமான் நித்யவாஸம செயவதால, திருக்கோவலூரில பகதிமானகளனைவரும் ஆசைவைத்திருப்பார்கள. பாகவதர்கள ஆசைப்படும்படியான திவ்யதேசம் எனறபடி.

ஆல்:— இது எனன ஆச்சரியம் என்கிறார. இவ்வநுபவத்தை நம தேசிகனும் தேஹளீச ஸ்தோத்ரததில சித்ரம் நதத த்ரிஷு மிதாநி பதேஷு தத்தே விச்வாநயமூநி புவநாநி விசங்கடேஷு | பச்சைஸ்ஸஹ க்வசிதஸள பவநைகதேசே மாதிஸ்ம மூாத்தி ரமிதா ததிஹாதபுதம் ந | என்று அனுஸநதிததிருப்பது நோக்கத்தகும்.

இந்த இரண்டாமடியில் "பனிமறைத்த" என்ற விடத்தில் பனி மறுத்த என்றும் பாடமுண்டு. தடுதத என்று பொருள. கீழ்ப் பாட்டில் தனது நெஞ்சைக் குறித்து நீ அவனைக்கண்டதில்லை என்று ஆழ்வார் சொலலவே, நெஞ்சும், தேவரீர் மறறவர்களுடன் ரேழி யிலே நிற்கும் கால பெருமான் நெருங்கும்பொழுது நான் ஸேவித தேன் என்று பதிலசொல்ல, அவ்வநுபவம் ஞாபகத்திற்கு வந்தது. அதை இப்பாசுரததில தெரிவிககிறார் எனறும் இப்பாட்டிற்கு அவ தாரிகை மொழியலாம். முதலில இவ்வாழவாருடைய சரித் திரத்தில எமபெருமான் இடைகழியில் முதலாழ்வார்களை நெருக்கிய பின இவவாழ்வார்களும் அவனை நெஞ்செனனும் உட் கண்ணால் கண்டாரகளென்று எழுதியதற்கு இபபாசுரம் பிரமாணமாகும்.

இனியார் புகுவா ரெழுநரக வாசல்
முனியாது மூரித்தாள் கோமின்—கனிசாயக்
கன்றெறிந்த தோளான் கனைகழலே காண்பதற்கு
நன்கறிந்த நாவலஞ்சூழ் நாடு. (87)

| | | | |
|---|---|---|---|
| கனிசாய | விளாம்பழம் கீழே விழும்படி | நன்கு அறிந்த | நன்றாய அறிந்தவர்களாகள் |
| கன்று | வத்ஸாஸுரனை | | ஆதலால |
| எறிந்த | வீசியெறிந்த | இனி | இதற்குமேல் |
| தோளான் | தோள்களையுடைய கிருஷ்ணனுடைய | எழு நரகவாசல | எழுவிதமான நரகங்களுடைய வாசல்களில் |
| கனை கழல் | சலங்கையின் தவனியையுடைய திருவடிகளை | ஆர் புகுவார் | யார் நுழையப்போகிறார்கள் |
| காண்பதற்கு | ஸேவிப்பதற்கு உபாயத்தை | ஓ யமதர்மராஜனின் கிங்கரர்களே! | |
| | | முனியாது | கோபங்கொள்ளாமல் |
| அம் நாவல் சூழ் நாடு | அழகான ஜம்பூத்வீபம் என்கிற பாரதநாடு (நாட்டிலுள்ளார்கள்) | மூரி தாள் கோமின் | திறக்கமுடியாதபடி தாழ்ப்பாளைப்போட்டுப் பூட்டிக்கொள்ளுங்கோள். |

இனியார் புகுவார்:— கீழ்ப்பாசுரத்தில் ஆழ்வார், இடைகழியில பிராட்டியுடன் எழுந்தருளின பெருமானைக் கண்டு மகிழ்ந்ததைப் பேசினார். தான் அப்பெருமானுடன் நெருங்கி நின்றுகொண்டிருப்பதாகவே நினைத்தார பிறகு இவ்வுலகத்தாரனைவரும் நம்மைப் போலவே பெருமானை அநுபவித்து வாழலாமே, என்று நினைத்தார். அதற்குத் திருக்கோவலூர் போன்ற திவ்ய தேசங்களில் வாஸம் செய்வதே காரணமென்றும் நினைத்தார். இந்த ஜம்பூத்வீபத்திலேயே எம்பெருமான் உகந்து நித்யவாஸம் செய்கிற திவ்யதேசங்கள் பலவும் இருக்கின்றன வாதலால, இந்த ஜம்பூத்வீபத்திலுள்ளாரனைவரும் பெருமாளிடம் அடிமைப் பட்டு விட்டார்களென்றே பாவநாப்ரகர்ஷத்தால் கருதினார். உடனே தன்னைப்போல் நாட்டாரனைவரும் உய்ந்துவிட்டதாக நினைத்து யமதர்மராஜனுடைய கிங்கரர்களைக் கூப்பிட்டு நீங்கள் நரகவாசல்களின் கதவுகளை நன்றாக

மூடிவிட்டு ஒருவரும் திறக்கமுடியாதபடி நல்ல பூட்டுகளால் பூட்டி விடுங்கோள; இனி உங்களுடைய ஆட்சியிலகப்பட்ட நரகங்களில் நுழையப்போகிற பாவிகள் ஒருவரும் கிடையாது எல்லாரும் எம் பெருமானிடம் அடிபணிந்து விண்ணுலகிற்கு அதிகாரிகளானூர்கள் நீங்கள நம் உலகத்திற்குப் பாவிகள வரப்போகிறார்கள· வேண்டியபடி வதைக்கலாமென்று எண்ணியிருக்க வேண்டாம் கதவுகளை மூடுங்கோள; நான் இப்படிச்சொல்கிறேனே என்று நினைத்து என்னிடம் கோபம் கொள்ளவேண்டாம்; உளளதைச் சொல்பவர்களிடம் கோபித்து யாது பயன் என்று மொழிந்தார்.

எழுநரகவாசல்·— ஸம்ஸாரிகளடங்கலும் புகுந்து வஸிக்கும்படியான கீர்த்தியையுடைய நரகமென்பதாம். அல்லது ஏழு என்பதன் குறுக்கல் விகாரம் எழு என்பது ஏழு எண்ணிக்கையுள்ள நரகங்கள என்றபடி. நரகங்கள் பல்லாயிரம் இருப்பினும் மிகவும் கொடியனவாயும், ப்ரதானங்களாயுமுள்ள ஏழு நரகங்களைச் சொன்னபடி. அவைகளாவன:— ரௌரவம், மஹாரௌரவம், அதிசீதம், நிக்ருந்தனம், அப்ரதிஷ்டம், அஸிபத்ரம், தப்தகும்பம், என்பன. மற்றும் வடமொழி நூல்களில் வேறு பெயர்களுள்ள நரகங்கள் ஏழு என்று சொல்லப்படுகின்றன. தென்மொழி நூல்களிலும் தமத்தம்ப ப்ரபை, இரத்னப்ரபை, சருககாப்ரபை, வாலுகாப்ரபை, பங்கப்ரபை, சாமப்ரபை, தம்பப்ரபை என ஏழுவகையாகும். சில நூல்களில் வேறுவிதமாகவும் வரையப் பட்டிருக்கின்றன. ஆங்காங்கு கண்டு தெளிமின.

கனிசாயக கன்றெறிந்த:— விளாம்பழங்களை உதிர்ப்பதற்காக கன்றுக்குட்டியை உயரே எறிந்த கிருஷ்ணனுடைய திருவடிகளையடைவதற்கு, திருக்கோவலூர் போன்ற திவ்யதேசங்களில் வஸிப்பதுதான் உபாயமென்று, இந்த ஜம்பூத்வீபத்திலுள்ளவர்களெல்லாரும் தெரிந்து கொண்டுவிட்டார்கள் என்றபடி.

மூரித்தாள்=வலிமையுள்ள தாழ்ப்பாள், கோமின் = மூடுங்கோள்.

கனிசாயக் கன்றெறிந்த கதைச்சுருக்கம்

**கண்ணனைக் கொல்வதற்கென்று கம்ஸனால் ஏவப்பட்ட அஸுரர்களில் ஒருவன, ஒரு விளாமரத்தின் உருவமெடுத்துக்கொண்டு விளாம்**

பழங்களைப் பறிப்பதற்குத் தன்கீழ் கண்ணன் வரும்பொழுது மேல விழுந்து கொல்லலாமென்று நினைத்தான். அதுசமயம் மற்றொரு அஸுரன், ஒருகன்றுக்குட்டியின் வடிவமெடுத்து கண்ணனைஉதைத்துக் கொன்றுவிடலாமென்று எண்ணிவந்தான். அப்பொழுது கண்ணன அவ்விஷயங்களை அறிந்து, விளாம்பழங்களை உதிர்ப்பதற்கு அந்தக் கன்றுக்குட்டியை விட்டெறிந்தான. உடனே இருவரும் மோதிக்கொண்டு மாண்டு அஸுரவடிவத்துடன் கீழே விழுந்தார்கள்.

கனைகழல்:— வதஸாஸுரனை விளாமரத்தின் மீது எறியும்பொழுது கண்ணனுடைய திருவடிகளில் அணிந்துகொண்டிருந்த சலங்கைகள சப்தித்ததை அனுபவித்தார்.

நாடிலும் நின்னடியே நாடுவன், நாடோறும்
பாடிலும் நின்புகழே பாடுவன்—சூடிலும்
பொன்னாழி யேந்தினான் பொன்னடியே சூடுவேற்கு
என்னாகி லென்னே யெனக்கு. (88)

| | | | |
|---|---|---|---|
| நாடிலும | ஆசைப்பட்டுத தேடினாலும | பொன் ஆழி ஏந்தினான் | அழகிய சக்ரமேந்திய தேவனுடைய |
| நின அடியே | உன் திருவடிகளையே | பொன அடியே | அழகான திருப்பாதங்களையே |
| நாடுவன் | ஆசையுடன் தேடுவேன் | சூடுவேற்கு | தலைக்கணியாகக் கொள்கிற |
| நாள்தோறும் | தினந்தோறும் | எனக்கு | எனக்கு |
| பாடிலும | பாடும்போதும் | என் ஆகில் என் | ஏது எப்படியானால் தான் என்ன? (எனக்கொரு விசாரமில்லை |
| நின் புகழே | உன் குணங்களையே | | |
| பாடுவன் | பாடுவேன் | | |
| சூடிலும் | தலையை அலங்கரிக்க வேணுமென்று நினைததாலும் | | |

நாடிலும்:— கீழ்ப்பாட்டில் நாட்டாரனைவரும் நாரணனுக்காட்பட்டதாக பாவநாப்ரகர்ஷத்தால் நினைத்து இனி யார் நரகவாசலில் நுழையப்போகிறார்கள் என்றார். பிறகு ஆழ்வார் கண்களைத் திறந்து பார்க்கவே பிரபஞ்சத்தில் ஒருவராவது பகவத் ப்ரவணராக

இருக்கக் காணவில்லை. எல்லாரும் குடும்ப வாழ்க்கையிலேயே ஈடு பட்டு பகவானைச் சிந்தியாத பாவியாயிருந்தார்கள். அதைக்கண்டு ஆழ்வார் இந்த ஸம்ஸாரிகள் எக்கேடு கெட்டுப் போனால் நமக்கென்ன, என்று நினைத்துத் தன்னுடைய தன்மையைப் பேசுகிறார். நான் ஆசைப்பட்டாலும் அவ்வெம்பெருமான் திருவடியைத் தான் ஆசைப்படுவேன். நாள்தோறும் பாடினாலும் அவன் குணங்களையே பாடுவேன். தலைக்கு அலங்கரிக்க வேணுமென்று நினைத்தாலும் அவன் திருவடிகளையே தலையில் சூடுவேன். இப்படி மனம் வாக்கு காயம் என்கிற மூன்று கரணங்களாலும் பகவானையே பாவிக்கிற வெனக்கு எது எப்படிப்போனால்தான் என்ன? எனக்கென்ன கவலை. இந்த ஸம்ஸாரிகள் அவனை நினைத்தாலும் நினைக்கட்டும். இல்லாவிடில் விஷயப்ரவணராயிருக்கட்டும்; என் ஆத்மஸ்வரூபத்தைப் பற்றி எனக்குக் கவலையில்லை. கரணத்ரயத்தாலும் அவனுடைய சேஷ வ்ருத்தியைச் செய்கிறேனென்கிறார்.

என்னாகிலென்'— பரமபதத்தில் முக்தர்களும் நித்யர்களும், மனதில் அவனை வைத்து, அவன் குணங்களை வாயால் பாடிக்கொண்டு, சரீரத்தால் பணிவிடை செய்துகொண்டு போது போக்குகிறார்களேயன்றி வேறில்லை. அந்த நித்ய முக்தர்களுடைய செய்கையை நான் இங்கேயே கிடைக்கப் பெற்றேன். ஆனது பற்றி ஈச்வரன் என்னை இந்நிலத்திலேயே வைத்தாலும் எனக்கென்ன கவலை. பரமபதத்தில் வைத்தாலும் எனக்கு ஒரு விசாரமுமில்லை. ஆதலால் எது எப்படிப் போனால்தான் எனக்கென்ன என்றும் பொருள் விளக்குவதுண்டு. இங்கு இங்கே திரிந்தேற்கிழிகுற்றேன் என்கிற நம்மாழ்வார் பாசுரமும் சற்று நோக்கத்தகும்

"சூடுவேற்கு" என்பது எனக்கு என்பதற்கு விசேஷணம்.

எனக்காவா ராரொருவரே எம்பெருமான்
தனக்காவான் தானே மற்றல்லால்— புனக்காயாம்
பூமேனி காணப் பொதியவிழும் பூவைப்பூ
மாமேனி காட்டும் வரம். (89)

| | | | |
|---|---|---|---|
| எனக்கு | பகவத் கடாக்ஷம் பெற்றவெனக்கு | புனம் | தன் நிலத்திலிருக்கிற |
| ஆவார் | நிகராயிருப்பவர் | காயாம்பூ மேனி | காயாம் பூவின் நிறம் |
| ஆர் ஒருவரே | யார் ஒருவர் இருக்கிறார் | பேணை | பார்க்கப்பார்க்க |
| எம் பெருமான் | என் ஸ்வாமியான ஈச்வரனும் | போது அவிழும் | கட்டுக்குலைந்து மலரும் |
| தானே தனக்கு ஆவான் அல்லால் | ஸ்வயமாகவே தனக்கு நிகராவன் அல்லாமல் | பூவைப்பூ | பூவைப்புஷ்பத்தின் நிறமும் |
| மற்று | எனக்கு ஸமமாக முடியுமோ (ஏனென்றால்) | வரம் | உயர்ந்ததான |
| | | மாமேனி | அவ்வீச்வரனுடைய திருமேனியை |
| | | காட்டும் | எனக்குக்காட்டுகின்றது |

காரணத்ரயத்தாலும் எம்பெருமானை யேத்துகிற எனக்கு ஒப்பாக ஒருவரும் உலகில் கிடையாதென்கிறார்.

எனக்கு:— நான் கருவிலே திருவுடையனாய்க் கொண்டு அவனையே நினைந்து நிற்கிறேன். நான் எங்கேயாவது காயாம்பூ, பூவைப்பூ முதலிய புஷ்பங்களைக் கண்டால், அவைகளை நான் வணங்கி வழிபடுகிற தெய்வத்தின் திருவுருவம் என்று கருதி, பெருமகிழ்ச்சியடைகிறேன். மற்றவர்கள் அவைகளைப் பார்த்தால் ஏதோ காட்டுப் பூக்கள் என்று சொல்லிப் போவார்கள். இம்மாதிரி அவனுடைய திருமேனி, அல்லது திவ்யாவயவங்கள், இவைகளோடு சிறிது ஒப்புள்ள வஸ்துக்களைக் கண்டால், அப்பெருமானுடைய நினைவு எனக்கு வருகிறது. இப்படியிருக்கு மெனக்கு யார் ஒருவர் நிகராவர்; ஒருவருமில்லை என்கிறார். ஆனால் அப்பெருமான உமக்கு நிகராகமாட்டாரோ? என்று வினவினால், அவனுக்குஅவன நிகராவனே யல்லது, எனக்கு நிகராகச் சொல்லமுடியுமோ என்கிறார். நான் எப்பொழுதும் அவனை அநுபவிப்பதுபோல் அவவீச்வரன் தன்னை எப்பொழும் அநுபவிக்கவில்லையாதலால், அவனும் எனக்கு நிகரில்லை யென்றபடி. அல்லது அவன் பரமாத்மா வாதலால அவன அவனுக்குத்தான் ஒப்பாவன். ஜீவாத்மாக்களுள் எனக்கு ஒப்பாவர் யாருமில்லை யென்பதாம். ஸர்வேச்வரனுடைய அடிமையில் ஆழங்கால் பட்டும், அவனை ஆச்ரயித்த ஆசார்யர்களுடைய அடிமையில் ஆழ்

ந்து கிடந்தும், அதன் மூலமாக அஹங்காரப்படுவது மேன்மையை விளைவிக்குமே யல்லது ஆத்மஹாநியை விளைவிக்காது. ஆதலால் இங்கு ஆழ்வார் அஹங்காரப்படுவது ந்யாயமே. ஆனது பற்றியே "எனக்கெவ்வுலகம் நிகரே" எனக்காரும் நிகரில்லையே" என்று மற்றவர்களும், "நமக்கார் நிகர் நானிலத்தே" என்று தேசிகனும் அருளிச் செய்தார்கள்.

**வரத்தால் வலி நினைந்து மாதவ நின் பாதம்**
**சிரத்தால் வணங்கானு மென்றே—உரத்தினால்**
**ஈரரியாய் நேர்வலியோனாய விரணியனை**
**ஓரரியாய் நீ யிடந்த தூன். (90)**

| | | | |
|---|---|---|---|
| மாதவ | ச்ரிய: பதியே! | வரத்தால் | தேவர்கொடுத்த வரங்களால் உண்டான |
| ஈர் அரி ஆய் | இருகூறாய்ப்பிளக்கவேண்டிய பகைவனாகி | வலி | பலத்தை |
| நேர் வலியோன் ஆய | எதிர்த்து நிற்கவல்ல பலம் வாய்ந்த | நினைந்து | பெரிதாக வெண்ணி |
| இரணியனை | இரண்யனுடைய | நின் பாதம் | உன் திருவடியை |
| ஊன் | உடலை | சிரத்தால் | தலையினால் |
| ஓர் அரி ஆய் | விலக்ஷண சிங்கவடிவமுடனாகி | வணங்கானும் என்றே | வணங்கவில்லை என்ற காரணத்தாலோ? இல்லை. பிரஹ்லாதனுக்காகவே; என்றபடி |
| உரத்தினால் | பலத்தினால் | | |
| நீ இடந்தது | நீ கிழித்தது | | |

வரத்தால்— ஸர்வஸ்வாமியானவன் தன்னைச் சரணமடைந்தவர்களுக்காகப் பாடுபடுகிறானென்கிறாரிப்பாட்டில். ஈச்வரன் பலகால் இப்புவியில் அவதாரம் செய்வது தன் பக்தர்களைக் காப்பதற்கேயன்றி விரோதிகளை அழிப்பதற்கல்ல "நமே த்வேஷ்யோஸ்தி நப்ரிய:" என்று சொல்லுகிறவனுக்கு விரோதியும் கிடையாது. தன் பக்தர்களை யாராவது நலிந்தால் அவர்களை வதைப்பதற்கென்று வருவன். இவ்வர்த்தத்தை ஆழ்வார் இங்கு பெருமானை ஒரு கேள்வி கேட்டு நமக்குத் தெளிவிக்கிறார். பரமபுருஷனே! நீ இருபிளவாகப் பிளக்கும் படியாயும், உன்னோடு எதிர்த்து நின்று சண்

டை செய்யும்படியும் வலிமை வாய்ந்தவனுமான இரணியனுடைய உடலை கிழித்துப் பொகட்டது; அவன் பலத்தால் தன்னை வலியோனாக நினைத்து உன்னை ஸேவிக்காமலிருந்தான் என்கிற காரணத்தால் தானோ? சொல்லு, என்கிறார். இந்த கேள்வி கேட்டாரே தவிர அவனுடைய பதில் ஒன்றும் காணப்படவில்லை. இப்படி வினவிய இவ்வாழ்வாருக்குக் கருத்து என்னவென்றால், இரணியன் பலஸஹஸ்ர வருஷங்கள் பெருமாளை நினையாததுமன்றி விரோதியாயும் பாவித்தான். அப்படி யிருந்ததனால் அவனுக்குச் சிறிதும் வருத்த மில்லை. தன் அடியனான ப்ரஹலாதனைப் பல படியாகத் துன்பப் படுத்தினதுபற்றிப் பெருமானுக்கு சீற்றம் பிறந்து ஓர் அரியாய் வந்து தோன்றி இரணியனை இரு கூறாய்ப் பிளந்தான் ஆகையால் அவனிடத்தில் ஒருவன் அபசாரப்பட்டால் அதனை அவன் நினையான். பாகவதர்களிடம் அபசாரப் பட்டால் அது அவனுக்கும் அடங்காக் கோபத்தை விளைவித்து அப்பாபிஷ்டனை அழிக்கும் என்றது. இவ்வர்த்தம் கூரத்தாழ்வான் அருளிய "யதபராதஸஹஸ்ரமஜஸ்ரஜம் த்வயி சரண்ய ஹிரண்ய உபாவஹத | வரத தேந சிரம் த்வமவிக்ரிய: விக்ருதி மாபக நிர்பஜநா தகா' ||' என்ற வரதராஜஸ்தவ ச்லோகத்திலே தெளியக் காணலாம்-

'வரத்தால் வலி நினைந்து':— தனக்குக் கொடுக்கப்பட்ட வரங்களைநினைத்தானே தவிர வரங்கொடுத்தவர்களுடைய சக்தி அந்த நாராயணனதீனமா யிருக்கிறதே யென்று நினைக்கவில்லையாம். அப்படி நினைத்தால் அவ்வீசனை த்வேஷம் செய்துகொள்ளப் ப்ரஸக்தியில்லை யென்றபடி.

ஈர் அரியாய்=உடம்பை இரண்டு பிளவாக்க கிழித்துப்போடும் படிக்குத் தகுந்த குற்றம் செய்த சத்ருவான இரணியன். அல்லது ஈர அரியாய்=பெரிய சத்ருவென்றும் சொல்லலாம்.

ஓர் அரியாய—ஒப்பற்ற சிங்கம். அல்லது உலகத்திலுள்ள சிங்கங்களைப்போலிராது ஓர்—இச்சையால். முன் ஜன்மத்தில் செய்த கர்மங்களால பிறவாமல (தன்ஸங்கல்பத்தால்) அவதரித்த சிங்கம் என்பதாம். அல்லது "ஓர்"—த்யானம். பக்தர்களால் உபாஸிக்கப்படுகிற சிங்கம் என்னவுமாம்.

ஊனக் குரம்பையி னுள்புக் கிருள் நீக்கி
ஞானச் சுடர் கொளீஇ நாடோறும்—ஏனத்
துருவா யுலகிடந்த வூழியான் பாதம்
மருவாதார்க்குண்டாமோ வான். (91)

| | |
|---|---|
| ஊனக் குரம்பையின் | மாம்ஸமயமான சரீரமாகிய குடிசையினை |
| உள் புக்கு | உள்ளே பிரவேசித்து |
| இருள் நீக்கி | சரீரமே ஆத்மாவென்கிற அஜ்ஞானத்தை விலக்கி |
| ஞானம் | ஞானமாகிற |
| சுடர் | தீபத்தை |
| கொளீஇ | ஏற்றி |
| ஏனத்து உருவாய் | பன்றியுருவமாகி |
| உலகு இடந்த | பூமியைக் கீண்டு எடுத்த |
| ஊழியான் | பிரளயத்திலும் வர்த்திக்கிற பகவானுடைய |
| பாதம் | திருவடிகளை |
| நாள்தோறும் | எப்பொழுதும் |
| மருவாதார்க்கு | தொழாதவர்களுக்கு |
| வான் | பரமபதம் |
| உண்டாமோ? | கிடைக்குமோ? |

ஊனக்குரம்பையின்:— கீழே அடியார்களுக்காகப் பாடுபடுகிறவன் ஈச்வரன் என்றார். அப்படியானால் நாம் செய்யவேண்டிய தொன்றுமில்லையோ என்று சிலர் வினவ, அதற்கு இப்பாட்டில் விடையளிக்கிறார். நாம் மோக்ஷம் என்கிற ஒரு பெரிய புருஷார்த்தத்தை யடையவேண்டுமானால் வெறுமனே ஒன்றும் செய்யாமலிருந்தால் அது நமக்கு எப்படிக் கிடைக்கும். ஒரு நினைவுகூட நமக்கில்லையாகில் அவன் எப்படிக் கொடுப்பான். நாம் ஒழித்துத்தள்ள வேண்டியபொருள்களில் இவைகளை விட்டொழிக்கவேண்டும் என்கிற நினைவும், அடையவேண்டிய பொருளாகிய பரமபுருஷனிடத்தில் அவன் தான் அடையத்தகுந்த பொருள் என்கிற எண்ணமும் கொண்டால், நமக்கு மோக்ஷம் ஸுலபம். இந்த எண்ணம் கூட இல்லாவிடில், மோக்ஷமடைவது அரிது என்கிறார். புண்ணராக்கை என்றும் 'திண்ணமழுந்தக்கட்டிப் பலசெய்வினை வன்கயிற்றால் புண்ணை மறையவரிந்து' என்றும் சொல்லுகிறபடி மாம்ஸம், ரத்தம், சீழ் முதலிய நாற்றமுள்ள பதார்த்தங்களை மேலே அழகாய்த் தோன்றும்படி தோலால் மூடிக் கட்டியமைத்த இந்த சரீரத்தின்

தன்மையை நன்றாய ஆலோசித்துப் பார்த்து, இந்த சரீரம் அழியக் கூடியது: அநர்த்தங்களை விளைவிக்கக்கூடியது. விட்டொழிக்க வேண்டியது என்று நிச்சயத்தை அடைந்தால் இச் சரீரமே ஆத்மா என்கிற இருள் விலகும் பிறகு உள்ளிருக்கும் ஆத்மாவைப்பற்றிய ஞானம் கொழுந்துவிட்டுக் கிளம்பினால ஸர்வேச்வரனைச் சரணமடையவேண்டுமென்ற புத்தி உண்டாகும் அதாவது ஆத்மாவின் ஸ்வபாவமான சேஷத்வத்தை உணர்ந்தால் பரமபுருஷனை அடையவேண்டுமெனகிற நினைவு உண்டாகும் ஆனபின்பு இப்பூமியை கோரப்பற்களில வைத்துத் தூக்கிக்கொண்டுவந்த ஞானப்பிரானை யென்கிற வராஹமூர்த்தியின் திருவடியை யடையவேண்டும். இப்படி சரீரத்தில் இகழ்ச்சி தோன்றி, ஆத்மாவைப் பற்றிய ஞானம் தலையெடுத்து, வராஹபகவானை சரணமடையாவிடில பரமபதம் ஒருக்காலும் கிடைக்காது. ஆதலால் அடையவேண்டிய புருஷனிடம் ருசி பிறந்து அவனை ஆச்ரயிக்கவேண்டுமென்றாராயிற்று

கீழ்ப்பாட்டில நரசிங்கனை நினைத்ததால் அதற்கு முந்திய அவதாரம் நினைவிற்குவர இப்பாட்டில் வராஹ பகவானைப் பேசினார்.

**வானாகித் தீயாய் மறிகடலாய் மாருதமாய்**
**தேனாகிப் பாலாம் திருமாலே—ஆனாய்ச்சி**
**வெண்ணெய் விழுங்க நிறையுமே, முன்னொருநாள்**
**மண்ணை யுமிழ்ந்த வயிறு.** (92)

| | | | |
|---|---|---|---|
| வான் ஆகி | ஆகாசமாகியும | மண்ணை | அமுதுசெய்திருந்த பூமியை |
| தீ ஆய | தேஜோரூபனாகியும | உமிழ்ந்த | வெளிப்படுத்தின |
| மறி கடல் ஆய | அலையெறியும ஸமுத்ரமாகியும | வயிறு | உன் வயிறு |
| மாருதம ஆய | காற்றாய் ஆகியும | ஆன ஆய்ச்சி | பசுக்களை மேய்க்கும குடியில் பிறந்த இடைச்சிகளுடைய |
| தேன் ஆகி | தேன போலும | | |
| பால் ஆம | பால்போலும போக்யமான | | |
| திருமாலே | பரமபுருஷனே ! | வெண்ணை | வெண்ணெயை |
| முன்னொரு நாள் | முன்னொருகாலத்தில் | விழுங்க | சாப்பிடுவதால |
| | | நிறையுமே | நிறைந்துவிடுமோ? |

வாஞுகி :—இப்பாட்டில பகவான் தன்னை ஆச்ரயித்தவர்களு டைய ஸம்பந்தமபெற்ற வஸ்துவினுலேயே சரீரதாரணம் செய்கிரு ரென்கிருர். ஆகாசம முதலிய பூதங்களுக்கு நிர்வாஹகனுயிருந்து கொண்டு இந்த அண்டத்தில வாஸம செயகிற ஜீவராசிகளுக்கு ரக்ஷ கனுயிருப்பவனே ! ஸர்வரஸ:, ரஸோ வைஸ: என்கிறபடி பருகப் பருகத தேனபோல இன்பமாயிருப்பவனே ! பால்போல பரமபோ க்யமாகப் பிராட்டியுடன் கூடியிருபபவனே ! நீ கிருஷ்ணனுய் அவ தரித்து இடைச்சிகள வைத்திருந்த வெண்ணெயைக் களவுசெயது புசித்தாயே ; அது எதறகாக ? உனனுடைய பசியைப் போககவே ண்டுமென்கிற எண்ணத்தாலோ ? அப்படியாகில அவ் வெணணெ யால உனக்கு எப்படிப் பசி தீரும்? முனபு பிரளயகாலத்தில் உல கஙகளெல்லாவறறையும் உண்டு பிறகு வெளிநாடு காணவுமிழ்ந்து விட்ட உன்னுடைய வயிறு இந்த வெணணெயால் நிறைந்துவிடுமா ? ஆதலால நீ எதற்காக இடைச்சியாகளுடைய முடைநாறறமுள்ள வெணணெயை விழுங்கினுய் எனறு பகவானையே வினவினுர். இபபடி வினவிய ஆழுவாருடைய கருதது யாதெனில், ஸ்ரீய:பதியானவன உபயவிபூதிநாதனுயிருந்தபோதிலும் தனனிடம் அன்புகொணட அடியார்களுடைய ஸம்பந்தமபெறற பொருளாலதான ஆத்மதார ணம செயகிருன். அவன் வெண்ணெயுண்டது பசி தீர்த்துககொள் வதறகாகவலல தனனிடம் பேரன்புகொண்ட இடைச்சியர்களு டைய த்ரவயமான வெண்ணெயைச் சாப்பிடாமலிருந்தால் அவனு டைய தேஹம் தரியாது. அபபடித் தனனுடைய அடியார்களிடம அவனுக்கு ஒரு பேரவா குடிகொண்டிருக்கிறது. தன அடியார்க ளுடைய தரவயம் கிடைககாவிடில உபயவிபூதியையும் ஒரு ஐச்வர் யமாக நினைக்கிறதில்லை. தன்னையும் நொந்துகொள்ளுகிருன். இப் படி அடியார்களிடம் ஒரு விலக்ஷணமான ஆசையுள்ளவனென்பது.

வயிறழல வாளுருவி வந்தானை யஞ்ச
எயிறிலக வாய்மடுத்த தென் நீ—பொறியுகிரால்
பூவடிவை யீடழித்த பொன்னுழிக்கையா, நின்
சேவடிமே லீடழியச் செற்று. (93)

| | | | |
|---|---|---|---|
| பூவடிவை | புஷ்பத்தின் ஸௌகுமார்யத்தை | அஞ்ச | அவன் பயப்படும்படி |
| ஈடு அழித்த | அடியோடு நிரஸித்தான | நின் சே அடி மேல் | உனது சிவந்த திருவடிகளின்மேல் போட்டுக்கொண்டு |
| பொன் ஆழி கையா | அழகான சக்ரமேந்திய கையை யுடையவனே | பொறி உகிரால் | பலவானமான நகங்களால் |
| வயிறு அழல | என்னவிளையுமோ வென்று வயிறு எரியும்படி | ஈடு அழிய | கட்டுக்குலையும்படி |
| | | செற்று | கொன்று |
| | | எயிறு | (பின்னும்) பற்கள் |
| வாள் உருவி | கத்தியை உருவிக்கொண்டு | இலக | வெளியில் தெரியும்படி |
| வந்தானை | சண்டைசெய்யவந்த ஹிரண்யனை | நீ வாய் மடுத்தது | நீ வாயை மடித்துக்கொண்டு வீற்றிருந்தது |
| | | என் | எதற்காக? |

கீழ்ப்பாட்டில் அவனுடைய ஆச்ரிதவாத்ஸல்யம் என்கிற குணம் பேசப்பட்டது. அக் குணத்தால் உண்டாகும் பயனைப் பேசுகிறாரிப்பாட்டில்.

வயிறழல :—புஷ்பங்களுடைய ஸௌகுமார்யத்தை இல்லையென்று சொல்லலாம்படியான ஸௌகுமார்யத்தோடுகூடிய சக்ரமேந்திய கையையுடையவனே! நீ முன்னொருநாள் பிரஹ்லாதனுக்கென்று அரியாய் வந்தபொழுது, உன்னை எதிர்ப்பதற்கு, பார்ப்பவர்கள் நடுங்கும்படியாக வாளை யுருவிக்கொண்டுவந்த இரணியனை நீ மிகுந்த சினங்கொண்டு உனது மெல்லிய திருக்கைகளால் பிடித்திழுத்து மடியிலே போகட்டுக்கொண்டு கை நகங்களால் இருபிளவாய்க் கிழித்துக் கொன்ற பின்பும் கோபம் தோன்றும்படியாக பற்கள் வெளியே தெரியும்படி வாயை மடித்துக்கொண்டு வீற்றிருந்தாயே! அது எதற்காக? எதிரியைக் கொல்வதற்கு முன்பு கோபம் இருக்க வேண்டியது நியாயம். கொன்றபின்பு கோபம் எதற்காக? பயங்கரமான கோரப்பற்கள் வெளியே தோன்ற ஒருவரும் நெருங்க முடியாத கோபம் வீச உட்கார்ந்ததன்பயன் யாது; என்று வினவினார். இந்தக் கேள்வியால் நாம அறியவேண்டியது யாதெனில், விரோதிகளை நினைத்து அஞ்சுகிற ஒருவன் கோபமுள்ளவனை அடைந்தால்தான் நிர்ப்பயனாயிருக்கலாம். கோபமே கிடையாத ஒரு புரு

ஷன், தன்னை ஒரு மனிதன் சரணமடைந்தால், அவனைக் காப்பது முடியாதகாரியம், சரணாகதனுடைய விரோதிகள் தன்னை நலியவந்தால அவர்களை வெல்லவேண்டிக் கோபத்தைத் தேடவேண்டும்; கோபத்தாலன்றி சத்ருவை வெல்லமுடியாது. அதற்காகத்தான் கோபம் என்கிற குணம் ரக்ஷகனுக்கு அவசியம் வேண்டியதே. இராவணனால் அடிபட்ட ஹநுமான் மிகவும் நோவுபட்டு நிற்க, "ததோ ராமோ மஹாதேஜா ராவணேந க்ருத வ்ரணம் | த்ருஷ்ட்வா ப்லவகசார்தூலம் கோபஸ்யவசமேயிவான ||" என்று ஸ்ரீராமபிரான கோபமிட்டவழக்கானா என்றார். ஆதலால சரணமடைகிறவன தன்னுடைய சத்ருக்களை நசிக்கவல்ல கோபமுள்ள சரண்யனிடம சரணம்புகவேண்டும. ஆனதுபற்றி திருமங்கையாழ்வார்நம "கடிகொள பூம்பொழில காமருபொய்கை + கொண்ட சீற்றமொன்றுண்டுளதறிந்து உன அடியனேனும வந்தடியிணையடைந்தேன் அணிபொழில் திருவரங்கத்தம்மானே" என்று சத்ருக்களை அடக்கவல்ல கோபம ஒன்று உன்னிடமிருக்கிறதென்று தெரிந்துகொண்டு நான உன திருவடிகளை அடைந்தேன் என்கிறார்

ஆதலால் இரணியனை செற்ற பின்பும் பெருமான் கோபத்துடன் வீற்றிருந்ததற்குக் காரணம் நம்போன்றவரும் அடியார்களுடைய விரோதிகளை அழிக்கவல்லதான கோபத்தைக்கண்டு அவனை ஆச்ரயிக்கவேணுமென்று தெரிந்துகொளவதற்காகவென்பதே; ஆச்ரித விரோதிகளிடம் உண்டான கோபம் அடியார்களுக்குத் தஞ்சமென்று கொளக.

வயிறழல:— இரணியன யுத்தத்திற்கு வரும்பொழுது இப்பொழுது என்ன விளையப்போகிறதோ வென்று உனனைச் சேர்ந்தவர்கள வயிறுபிடிக்கிறார்கள பாவனுப்ரகர்ஷத்தாலே அப்பொழுது இரணியன் நருஸிஹ்மனோடு போர்புரிய வருவதாகவே நினைத்து ஆழ்வார வயிறெரிகிறார் என்பதும் தோன்றும்.

சேவடிமேல்:— உனது பக்தர்களுக்குப் புகலிடமான திருவடிகளில இரணியனை வைத்துக்கொணடாயென்றும வருந்துகிறார்.

செற்றெழுந்து தீ விழித்துச்சென்றவிந்த வேழுலகும்
மற்றிவை யா வென்று வாயங்காந்து—முற்றும்
மறையவற்குக் காட்டிய மாயவனை யல்லால்
இறையேனு மேத்தாதென் நா. (94)

| | | | |
|---|---|---|---|
| எழுந்து | லோகத்திலுள்ள பொருள்களையெல்லாம் ஸம்ஹரிக்கப் போகிறேனென்று எழுந்துகிளம்பி | சென்று | என்னுள் சென்றிருக்கின்றன என்று சொல்லி |
| தீ விழித்து | நெருப்பு விழும்படி பார்த்து | ஆ என்று வாய் அங்காந்து | ஆவென்று வாயை நன்றாய் திறந்து |
| இந்த ஏழு உலகும் | இந்த ஸப்தலோகங்களையும் | மறையவற்கு | வைதிகரான மார்க்கண்டேய முனிவருக்கு |
| செற்று | தொலையும்படி செய்து | முற்றும் | ஸகலலோகங்களையும் |
| மற்று | பிறகு | காட்டிய | காண்பித்த |
| இவை | அழிந்துபோனவையெல்லாம் | மாயவனை அல்லால் | மாயாவியைத்தவிர மற்றவனை |
| | | என் நா | எனது நாக்கு |
| | | இறையேனும் | கொஞ்சமேனும் |
| | | ஏத்தாது | துதிசெய்யாது |

விரோதிகளை விலக்குவதற்குப் பரிகாரமான கோபமும் அவனிடமிருக்கிறது. ஆதலால் விரோதிகளைக்கண்டு பயப்படுகிறவனைவரும் அவனை ஆச்ரயிக்கலாமென்றார் கீழ்ப்பாட்டில். அவனையல்லதொருவனை என் நாக்கு எழுந்து பேசாது எனகிறார். இப்பாட்டில்.

செற்றெழுந்து:— ஒருநாள், பிரளயத்தை நேரில் பார்க்கவேண்டுமென்று ஆசைப்பட்ட மார்க்கண்டேய முனிவருக்கு அவர் விரும்பியபடியே பிரளயத்தைக் காண்பிவித்த மாயவனைத் தவிர மற்றொருவனை என் நாக்குத் துதி செய்யாது என்கிறார்.

எம்பெருமான, உலகங்களில் அதர்மம் மிகவும் தலையெடுக்க, அதனால மிகுந்த சினங்கொண்டு எழுந்து தீப்பொறி பறக்கும்படி கண்களால் பார்த்து, எல்லாப்பொருள்களையுமழித்துத்தன் திருவயிற்றிலே அடக்கிவைத்திருக்கும் காலத்திற்குப் பிரளயகாலம் எனப்

பெயர். சிரஞ்சீவியான மார்க்கண்டேய முனிவன, பதரிநாதிக கரை யில தவமசெய்து நரநாராயணாகளை தர்சித்து "நான பிரளயத்தை நேரில் பாரககவேணும" என்கிற வரத்தை வேணடினூர். அவர் களும அப்படியே ஆகட்டும் என்று அருள்செயது சென்ருர்கள். பிறகு பகவானுடைய ஸஙகல்பததால பிரளயம தோனறிற்று. அலையெறியும் கடல இப்பரந்த பூமியெஙகும் பெருகி எல்லாவற்றை யும் அழிததுப் பெருததமுழக்கத்துடன் பொஙகிக்கொண்டிருந்தது. மார்ககண்டேய முனிவன மட்டும அலைகளால் அடிக்கபபட்டு மிக வும வருந்திக் கரைகாணமுடியாது தவிக்கவே, ஒரு ஆலிலையில படுத துறங்குமு ஒரு குழைந்தையைக கண்டார கண்டதும அக்குழந்தை தன் வாயைத திறந்தது முனிவனும அககுழநதையின வாயில புகுநது வயிறறிலே சென்று பார்ககும கால, உலகங்கனெல்லாம் அஙகு பரமஸூகமாக நெருக்கமினறி வஸிப்பதைக்கண்டார். உட னே பெருமகிழ்ச்சியடைந்து, அக்குழந்தை தான் ஸ்ரீமந் நாராயண னென்று நிச்சயிதது அவனுடைய பாதவத்திலீடுபட்டார் எனபது.

**நாவாயி லுண்டே நமோ நாரணா வென்று**
**ஓவா துரைக்கு முரையுண்டே—மூவாத**
**மாக்கதிக்கண் செல்லும் வகையுண்டே, என்ஞெருவர்**
**தீக்கதிக்கண் செல்லும் திறம்.** (95)

| | | | |
|---|---|---|---|
| நா | பகவந்நாமஙகளை ச சொலலுவதற்குக கருவியான நாககு | மூவாத | திருமபிவராதபடி |
| வாயில உணடே | எலலா ஜனஙகளுக கும வாயிலேயே ஸ்ருஷ்டிககபபட்டி ருககிறதே | மாகதிககண | பரமபுருஷாாதத மானமோக்ஷத்தில் |
| ஓவாது | ஓயவினறி | செலலுமவகை | சேரவதற்குரிய மார்ககமு ம |
| உரைககும | சிரமமின்றி சொல் லககூடிய | உண்டே | இருககிறதே (இஙஙனமிருகக) |
| நமோ நாரணா எனனுமஉரை | திருமநதிரமாகிற சொலலும | ஒருவா | சிலா |
| உணடே | உலகில இருககி றதே | தீ கதிககண | தாமாாககங்களிலே |
| | | செல்லும திறம | போகிறவிதம |
| | | என | என்னகாரணம பற் றியோ ? (தெரியவி ல்லை.) |

கமளவான உலகங்களும நமக்குத்தடையின்றி ஒழியும் என்று கருத்தாக்கொண்டு அருளிச்செயகிறார

தன்னுடைய நெஞ்சு, இப்பொழுது நாம் பகவதபரர்களாக வேயிருக்கபோதிலும், இனிமேல நாம பாபங்களைச் செய்து கெட்டுப்போனால் என் செயவது என்று வருநத "அறம்பாவ மென்றிரண்டுமாவான" என்றார் (ஏஷஏவ ஸாதுகாம காரயதியமே ப்யோ லோகேபயோ உநநிநீஷதி) எவனை உயாந்த லோகங்களுக்கு போகவேண்டுமென்று தான் நினைக்கிறானோ அவனை புண்யங்கள் செய்யும்படி செய்கிறான், எவனை கீழே தள்ளவேணுமென்று விரும்புகிறானோ அவனை பாபங்கள செய்யும்படி செயகிறான் என்றபடி, அவனே புண்ய பாபங்களைச் செயயும்படி ஏவுகிறான் நாம ஸர்வ ஜகத்துக்கும் ஸ்வாமியை எப்பொழுதும் நினைததிருக்க நம்மை நரகத்தில் தளளவேணுமென்று அவன் விரும்புவனோ? ஆதலால் நமக்கு இனிமேல் பாவம் ஸம்பவியாது என்று கொண்டு அருளிச் செய்தார் என்று சிலர் கொள்கை

புண்யபாபங்கள் அவ்வீச்வரனதீனமாதலால, இது வரையில் செயதவினைகளுக்கும் இனிமேல் செயயப்போகும வினைகளுக்கும் நாம் அஞ்சவேண்டியதிலலை. நாம் அவனையே நினைததிருப்போம் என்று கொண்டு அறம்பாவமென்றிரண்டும் அவனென்றார் என்றும் சொல்லலாம்.

பிடிசேர் களிறளித்த பேராளா! உன்றன்
அடிசேர்ந்தருள் பெற்றாளன்றே—பொடிசேர்
அனற்கங்கை யேற்றா னவிர்சடைமேல் பாய்ந்த
புனற் கங்கை யென்னும் பெயர்ப்பொன். (97)

| | | | |
|---|---|---|---|
| பிடிசேர | பெண்யானையுடன் சோநது வாழ்ந்த | பொடி சேர் | சாமபலாகும விபூதி யில்சாயகினற |
| களிறு | கஜேநதிரனுகிற யானையை | அனற்கு அம் கை ஏற்றான | நெருப்புககு தன் கையை அழகாயஎந் தின ருதரனுடைய |
| அளிதத | ரக்ஷிதத | | |
| பேராளா | பெருந்தன்மை யனே | அவிா சடை மேல் | ஒளிககின்ற சடைமேல் |

| | | | |
|---|---|---|---|
| பாய்ந்த | பாய்கிற | உன் அடி சேர்ந்து | உன்னுடைய திருவடியை அடைந்து |
| புனல் | ஜலத்தையுடைய | அருள் பெற்றாள் அன்றே | உலகத்தைப் பரிசுத்தமாக்கும்படி அருளை அடைந்தாள் அல்லவா |
| கங்கை என்னும் பேர் பொன் | கங்கை என்னும் பெயர் கொண்ட பெண் | | |

கீழ்ப்பாட்டில் "அறம் பாவமென்றிரண்டுமாவான்" என்றதை விவரித்துக் காட்டுகிறார் இப்பாட்டில்.

பிடிசேர் — பாவமும் அறமும் அவனதீனமாயிருக்குமென்கிறார். அதை எளிதில் அறிந்துகொள்வதற்கு இரண்டு உதாஹரணங்களைக் காட்டுகிறார். இந்த்ரத்யும்நன் என்பானொரு அரசன் பரம யோகநிரதனாயிருந்தான். ஒரு நாள் அகஸ்த்ய முனிவர் அவனருகே செல்ல, அரசன் யோகாப்யாஸத்திலே ஆழ்ந்திருந்தபடியால் அம்முனிவரை வரவேற்று உபசரிக்கவில்லை. அதனால் முனிவர் கோபங்கொண்டு நீ யானைபோல் மதாந்தனாயிருந்தமையால் யானையாய்ப் பிறப்பாய் என்று சபிக்க அரசனும் யானையாய்ப் பிறந்து, காட்டில் பல பெண்யானைகளோடு திரிந்துகொண்டிருந்தான். இது இங்ஙனமிருக்க ஹூஹூ என்கிற கந்தர்வன் ஜலத்தில் தவம் செய்துகொண்டிருந்த தேவலர் என்ற முனிவரைப் பார்த்து ஜலத்திலுள்ளே சென்று அம்முனிவருடைய காலைப்பிடித்து இழுத்தான். அதனால் சினங்கொண்ட முனிவர் அவனை முதலையாய்ப் பிறப்பாய் என்று சபித்தார். அவனும் முதலையாய்ப் பிறந்தான். அம்முதலை பொய்கையில் வாசஞ்செய்துகொண்டிருந்தது. காடுகளில் சாபத்தால் பெண்யானைகளோடு திரிந்துகொண்டிருந்த அந்த யானையும் பூர்வ ஜந்ம வாஸனையால் பகவானைப் பூஜிக்கவேண்டுமென்று கருதிப் பொய்கையில் பூக்கொய்யும்பொழுது அம்முதலையால் இழுக்கப்பட்டுத் துன்பப்பட்டுப் பரதேவதையை அழைக்க, அத்தேவதையும் வைகுண்டத்திலிருந்து விரைந்துவந்து சக்ராயுதத்தால் அம்முதலையை வென்று யானைக்கு அருள் புரிந்தது என்கிற வரலாறு மிகப் ப்ரஸித்தமே. பாவத்தின் பயனாகப் பிறந்த கஜேந்த்ரனுக்கு அருள்புரிந்தானென்றால் பாபம் அக்கஜேந்த்ரனுக்குப் ப்ரதிபந்தகமாகவில்லை என்பது தோன்றும். ஆதலால் பாவம் அவனுக்கதீனமாயிருக்குமென்பது நன்கு விளங்கும். அக்நியை கையிலேந்தினவனும்

ருத்ரனுடைய சிரஸ்ஸிலே பாய்ந்த கங்கை, "பாவநார்த்தம் ஜடாமத்யே த்ருதா சிரஸா ஹர:" என்னும்படி அவனையும் சுத்திசெய்யும்படிக்கும், மற்றும் தன்னில் ஸ்நானம் செய்பவர்களையும் பரிசுத்தராக்கும்படிக்கும், சுத்திகாரகத்வமென்கிற ஒரு பெருமையடைந்தது உன் திருவடியைச் சேர்ந்ததாலல்லவோ என்கிறார். கங்கையில் ஸ்நானஞ் செய்பவர்களை மஹாஸுக்ருதிகள் என்று உலகத்தில் சொல்லுகிறார்கள். எல்லாரையும் ஸுக்ருதிகளாகச் செய்யும் தன்மை அக்கங்காநதிக்கு உன் திருவடி ஸம்பந்தத்தாலல்லவா? உன் திருவடியில் பிறந்ததனாலன்றோ இப்பெருமை கங்கைக்கு; என்றார். ஆதலால் ஸுக்ருதமும் அவனதீனமென்று எளிதில் தெரிந்து கொள்ளலாம்.

இப்பாட்டின் நான்காமடியில் "கங்கையென்னும் பேர்ப்பொன்" என்றும் சிலர் பாடமுரைப்பர்.

பொன் திகழு மேனிப் புரிசடையம் புண்ணியனும்
நின்றுலகம் தாய நெடுமாலும் — என்றும்
இருவரங்கத்தால் திரிவரேலும், ஒருவன்
ஒருவனங்கத் தென்றுமுளன். (98)

| | | | |
|---|---|---|---|
| பொன் திகழும் | பொன்னைப்போல் விளங்குகிற | என்றும் | எப்பொழுதும் |
| மேனி | சரீரத்தையும் | இருவர் அங்கத்தால் திரிவரேலும் | இரண்டு பேர்களாய தனித்தனியான வடிவுடன் திரிந்த போதிலும் |
| புரிசடை | பின்னப்பட்ட ஜடையையும் உடையவனுமாய | ஒருவன் | அவர்களுள் ஒருவனான ருத்ரன் |
| அம் புண்ணியனும் | நல்ல ஸாதனரூப ஸுக்ருதத்தைச் செய்த ருத்ரனும் | ஒருவன் அங்கத்து | மற்றொருவனாகிய திருமாலுடைய திருமேனியில் |
| நின்று உலகம் தாய | நின்றுகொண்டு பிரபஞ்சங்களை அளந்த | என்றும் | எக்காலத்திலும் |
| நெடுமாலும் | திருமாலும் | உளன் | வாஸம் செய்பவன். |

பெருமான் திருவடியிலிருந்து பெருகிய கங்கை சிவபெருமானையும் பரிசுத்தனாக்கச் செய்தது என்று கீழ்ப்பாட்டில் சொன்னது பொருந்தாது. அரனும் ஒரு தெய்வமென்று உலகில் வழங்கப்படு

கிறது காணப்படவில்லையா என்று சிலர் வினவ, அரனுடைய பெருமையும் அவனுடைய சரீரம் என்கிற வாகாரத்தால்தான் என்று காட்டுகிறார்.

பொன்'—பொன்போல பிரகாசிக்கிற மஞ்சள் நிறத்தவனும் சடைதரித்தவனுமான ருத்ரனும் திரிவிக்ரமாவதாரம் செய்து உலகங்களை அளந்த நாரணனும் தனித்தனியே வெவ்வேறு ரூபங்களுடன் வெவ்வேறு தெய்வங்களாகக் கொண்டாடப்பட்டாலும், ஒருவன் ஒருவனுடைய திருமேனியில் வாஸம் செய்கிறான். ருத்ரன் நாரணனுடைய திருமேனியைப் பற்றியே நிற்கிறான். ஆனது பற்றியே அவனுக்குப் பெருமை. (பச்யைகாதசமே ருத்ராந் தக்ஷிணம் பார்ச்வமாச்ரிதாந), வலத்தனன் திரிபுரமெரித்தவன்" என்பவைகளையும் காண்க.

புரிசடையம் பண்ணியனும்'—என்பதால் ஒரு ஸாதனத்தைச் செய்தே ருத்ரன் இப்பெருமை படைத்தான் என்பது அவனுடைய சரீரமே காட்டும் என்கிற பொருள் விளங்கும். மகாதேவஸ் ஸர்வமேதே மஹாத்மா ஹுத்வாத்மாநம் தேவதேவோபபூவ என்பதையும் காணலாம். தபோபலத்தால் பெருமை படைத்தவன் ஒருவனது உடம்பைப் பிடித்துக்கொண்டிருப்பவன் என்பதுபற்றி ருத்ரன் பரதேவதையன்று என்றபடி.

உலகம் தாய நெடுமாலும்'—இத்கால நம்முடைய தலையோடு அரன் தலையோடு வாசியற எல்லார் தலையிலும் திருவடியை வைத்தவன் என்பதுபற்றி நாரணனுடைய பரத்வம் பரக்கத் தெரியவரும்.

"அங்கத்து என்றுமுளன்" ஒருவனுடைய (ச்ரிய: பதியினுடைய) திருமேனியில் வஸிப்பவன். அல்லது ஒருவனுக்கு சரீரம் என்றே சொல்லப்படும் தன்மையனுமாம்

உளன் கண்டாய் நன்னெஞ்சே உத்தமனென்றும்
உளன் கண்டாய், உள்ளுவாருள்ளத்--துளன்கண்டாய்
வெள்ளத்தினுள்ளானும் வேங்கடத்துமேயானும்
உள்ளத்தினுள்ளா னென்றோர். (99)

| | | | |
|---|---|---|---|
| நல் நெஞ்சே | எனக்கு அநுகூல மான நெஞ்சே! | உள்ளத்து | நெஞ்சில் |
| உத்தமன் | புருஷோத்தமன் | உளன் கண்டாய | நித்யவாஸம் செய்கிறான் காண்; |
| உளன் கண்டாய | நம் ஸத்தைக்காக இருக்கிறான் காண்; | வெள்ளத்தின் உள்ளானும் | பாற்கடலில் பள்ளி கொண்டவனும் |
| என்றும் | எக்காலத்திலும் | வேங்கடத்து மேயானும் | திருமலையில் வஸிப்பவனும் |
| உளன் கண்டாய | நம்மைக் காப்பதற்காக இருக்கிறான் பார், | உள்ளத்தில் உள்ளான் | நம் நெஞ்சில் வந்திருக்கிறான் |
| உள்ளுவார் | தன்னை நினைப்பவர்களுடைய | என்று ஓர் | என்று அறிந்து கொள் |

கடைசியாக இரண்டு பாசுரங்களால் தமது நெஞ்சுக்கு ஸ்ரிய: பதியின் பரத்வத்தையும் நித்யத்வத்தையும் உபதேசித்தருளிட்டுப் பிரபந்தத்தைத் தலைக்கட்டுகிறார்.

உளன் கண்டாய்—நான் சொல்வதை உண்மை என்று நம்புகிற நல்ல நெஞ்சே! ஸர்வேச்வரன் நம ஸத்தை பெறுவதற்காக எப்பொழுதும் முளன். அஸந்நேவ ஸ பவதி அஸத்ப்ரஹ்மேதி வேத சேத் | அஸ்தி ப்ரஹ்மேதி சேத்வேத ஸந்தமேநம் ததோ விது: பரஹ்மத்தை எவன் உளன் என்று அறிந்தானோ அவன் தான் ஸத்தை பெற்றவன் என்றபடி நாம் ஸத்தை பெற வேண்டி அவன் உளனாகையைப் பார், "ஆள்கின்றாழியான்" என்றபடி நம்மை ரக்ஷிப்பதற்கென்றே அவன் எப்பொழுதும் ஸத்தைபெற்றிருப்பதையும் பார், அத்துடன் "அணைப்பார்க் கருத்தனாவான்" என்றபடி அவனை யார் நினைக்கிறார்களோ அவருடைய நெஞ்சிலே வஸிக்கிறான் காண், அவன் திருப்பாற்கடலிலும் திருவேங்கடத்திலும் வஸிப்பதும் ஒரு பாகவதனுடைய நெஞ்சில் வாஸம் செய்வதற்கென்றே ஒரு பாகவதனுடைய நெஞ்சு அகப்பட்டால் திருப்பாற்கடலையும் விட்டுவிடுவன் போலும். ஆதலால் பாற்கடலில் பள்ளியமர்ந்தவனும் வேங்கடத்தில் நின்றவனுமான ஸர்வேச்வரன் நம்முடைய உள்ளத்தில் வஸிக்கிறானென்று நினை; வேங்கடத்தில் நின்றுகொண்டும் பாற்கடலில் படுத்துமிருக்கிறான். நம்முள்ளத்தில் இருவிதமாகவும் இருப்பவனென்று கொள், ஆச்ரிதர்களுடைய நெஞ்சில் ஸர்வப்ரகாரத்தாலும் வஸிப்பான் என்பது தோன்றுகிறது.

ஆழ்வார் தமக்கு நெஞ்சு என்கிற ஒரு கருவியிருப்பதுபோல, தம்முடைய நெஞ்சுக்கும் ஒரு நெஞ்சு இருப்பதாகக்கொண்டு "உள்ளத்தினுள்ளானென்று ஓர்" என்று உபதேசிக்கிறது ஆகாமற்றோ சொல் என்று சிலர் நினைப்பார்கள். அதற்குப் பரிஹாரம் தன்னுள் அடைப்பட்ட நெஞ்சை, வேறு ஒரு மனிதனாக ஆரோபம் செய்து அதை விளித்துச் செவிசாய்க்கச்செய்து உபதேசிப்பதுபோல இது ஒரு ஆரோபித்துச் சொன்ன வார்த்தையென்று கொள்க.

இப்பாட்டில் ஈச்வரன் நம்முடைய ரக்ஷகத்வமே விரதமாகக் கொண்டவனென்றும், நம்மை என்றைக்கும் காப்பவனென்றும், தன்னை நினைப்பவர்களுடைய நெஞ்சில் வாசம் செய்கிறவனென்றும், திவ்ய தேசங்களில் நித்யவாஸம் செய்யும் பெருமானும் அடியார்களின் உள்ளானும் ஒருவனே என்றும், நெஞ்சுக்கு உபதேசிக்கிறார்.

ஓரடியும் சாடுதைத்த வொண்மலர் சேவடியும்
ஈரடியும் காணலா மென்னெஞ்சே—ஓரடியில்
தாயவனைக் கேசவனைத் தண்டுழாய் மாலைசேர்
மாயவனையே மனத்துவை. (100)

| | | | |
|---|---|---|---|
| என் நெஞ்சே | என் உள்ளமே! | மனத்து வை | ஹ்ருதயத்தில் வைத்துக்கொள் |
| ஓர் அடியில் | ஒரு திருவடியின் வைப்பினால் | (இப்படி வைத்துக்கொண்டால்) | |
| தாயவனை | உலகங்களை அளந்தவனும் | ஓர் அடியும் | உலகையளந்த திருவடியும் |
| கேசவனை | கேசியைக் கொன்றவனும் | சாடு உதைத்த | சகடாஸுரனை உதைத்த |
| தண் துழாய் | சீதளமான திருத்துழாயால் கட்டிய | ஒண் மலர் | அழகிய புஷ்பம் போன்ற |
| மாலை சேர் | மாலையோடு கூடினவனுமான | சே அடியும் | சிவந்த திருவடியும் |
| மாயவனையே | மாயாவியான ஸ்ரீமந்நாராயணனையே | ஈர் அடியும் | ஆகவே இரண்டு திருவடிகளையும் |
| | | காணலாம் | ஸாக்ஷாத்கரிக்கலாம் |

ஓரடியும்:—இப்பாட்டில், முன்னடிகளில் அவன் திருவடிகளை ஸாக்ஷாத்கரிப்பதாகிற பரம புருஷார்த்தமும், பின்னடிகளில் அப் புருஷார்த்தத்தைப் பெறுவதற்குவேண்டிய உபாயமும் சொல்லப் படுகிறது. ஒரு திருவடியால் எல்லாவுலகங்களையும் அளந்தவனும்,

கேசி என்னுமஸுரனைகொன்றவனும், திருத்துழாய மாலை யணிந்தவனுமான மாயாவியையே மனதது வைககவேண்டும். அவனை மனததால் எபபொழுதும் த்யானிப்பது தான் உபாயம் என்றபடி. தாயவனை என்றதால் உலகத்தாரனைவா தலையிலும் திருவடியைவைத்து தூயச் செயததுபறறி நமககு விருமபப்பட்ட பொருள்களைக் கொடுப்பவன என்பது விளஙகும். கேசவனை எனபதால் விரோதிகளைப போக்குகிறவனெனறுகொணடு நம் அநிஷ்ட நிவ்ருத்தியைச் செயகிறவனென்று கொள்க. "தண்டுழாய மாலைசோ" என்பதால் குணமில்லாவிடினும் கூட, விடமுடியாத போக்யதை பேசப்படுகிறது. மாயவனை எனபதால அவதாரங்களில் பல விசித்திரவயாபாரங்களைச செயது, ஆச்ரிதரக்ஷணம் செயகிறுனென்பது தோன்றுகிறது ஆகவே இஷ்டபராபதியையும், அநிஷ்ட நிவ்ருததியையும் செயதுகொடுக்குப் பரமபோக்யனுமாய ஆச்ரிதரக்ஷணமே வ்யாபாரமுமாகவுளள பரமபுருஷனை மனததில் வைத்தால் (பக்தியோகம் செயதால) அவனது இரண்டடிகளையும காணலாம் என்றதாயிற்று.

உலகெல்லாவற்றையுமளந்த திருவடியும சகடாஸுரனை உதைத்த மறறொரு திருவடியுப் நாம காணப்பெறலாம் எனறபடி. இங்கு ஈரடியும என்கிற பதம் இல்லாவிடினும் இரண்டு திருவடிகளையும் என்கிற பொருள கிடைககுமாயினும், அத்திருவடிகளுடைய போக்யதையிலே ஈடுபட்டு மீண்டும் ஈரடியும் என்றபதத்தை ப்ரயோகித்தார். ஆகவே, இப்பாட்டில எம்பெருமானுடைய திருவடிகளை ஸாக்ஷாத்கரிப்பதுதான் புருஷார்த்தமென்றும், அவனை மனத்தில் வைப்பதுதான் உபாயமென்றும், அவனே நமக்கு ஸித்த உபாயமாயிருந்துகொண்டு நமக்கு இஷ்டப்ராப்தி அநிஷ்ட நிவருததிகளைச் செய்துகொடுககிறுனென்று மிவ்வர்த்தங்களை தமது நெஞசுக்குபதேசித்துப் பிரபந்தத்தைத தலைகட்டினர்.

சுபமஸ்து.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

எம்பெருமானர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ தேசிகன் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன்

அருளிச்செய்த

# பிரபந்த ஸாரம்.

---

அருண் மிகுத்த தொருவடிவாய்க் கச்சி தன்னி
லைப்பசி மாதத்திருவோணத்து நாளில்
பொருண் மிகுத்த மறைவிளங்கப் புவியோருய்யப்
பொய்கைதனில் வந்துதித்த புனிதா! முன்னாள்
இருளதனிற் றண்கோவலிடை கழிச்சென்
றிருவருடனிற்க மாலிடை நெருக்கத்
திருவிளக்காமென வையந்தகளி நூறும்
செழும் பொருளை யெனக்கருள்செய் திருந்த நீயே.

| | |
|---|---|
| பொருள் மிகுந்த | அர்த்தபுஷ்டியுள்ள |
| மறை விளங்க | வேதங்கள் (இவ்வுலகில்) பிரகாசிக்கும்படியாகவும் |
| புவியோர் உய்ய | பூமியிலுள்ளவர்கள் உஜ்ஜீவிக்கும்படியாகவும் |
| கச்சி தன்னில் | காஞ்சீ நகரத்தில் |
| பொய்கை தனில் | தாமரைத் தடாகத்தில் |
| ஐப்பசி மாதத் திருவோணத்து நாளில் | ஐப்பசிமாதத்தில் திருவோண நக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் |
| அருள் மிகுந்தது ஒரு வடிவாய் | கிருபையினாலே பரிபூரணமான ஒரு வடிவத்துடன் |
| வந்து உதித்த | வந்து அவதரித்த |
| புனிதா | பரிசுத்தரான பொய்கை முனிவரே! |
| நீ | தேவரீர் |
| முன்னாள் | முன்னொருநாள் |
| இருள் அதனில் | இருள் சூழ்ந்த இரவில் |
| தண் | குளிர்ந்த |
| கோவல் | திருக்கோவலூரில் |
| இடைகழி சென்று | (ஒரு முனிவருடைய வீட்டின்) ரேழியிலே போய் |
| இருவருடன் நிற்க | பூதத்தார் பேயார் என்கிற இருவர்களோடு நிற்குமளவில் |
| மால் | ஆசிரிதர்களிடம் வ்யாமோஹமுள்ள திருமால் |

| | | | |
|---|---|---|---|
| இடை நெருக்க | நடுவிலே வந்து நெருக்கிட | செழும் பொருளை | உயர்ந்த வேதார்த்தங்களை |
| திருவிளக்காமென | உயர்ந்த விளக்குப் போன்ற | எனக்கு | அடியேனுக்கு |
| வையந்தகளி நூறும் | வையந்தகளி என்று ஆரம்பித்துப் பாடிய நூறு பாசுரங்களாகிற | திருந்த | ஸம்சயமின்றித் தெரியும்படி |
| | | அருள் செய் | அநுக்ரஹம் செய்ய வேணும். |

ஸ்ரீ காஞ்சீ நகரத்தில் ஒரு தாமரைத்தடாகத்தில் ஐப்பசித் திருவோணத்திலவதரித்தருளின பொய்கை முனிவரை ஸ்ரீ தேசிகன் வணங்கி, அவர் அருளிய முதல் திருவந்தாதியையும் அதில் சொல்லப்பட்டிருக்கும் உயர்ந்த பொருள்களையும் தான் ஐயமறத் தெரிந்துகொள்ளுமாறு அருள்புரிய வேண்டுமென்று பிரார்த்திக்கிறார் இப்பாட்டில்.

அருள்மிகுத்த:—தத்வஹித புருஷார்த்தங்களைத் தெளிவாகச் சொல்லுகிற ப்ரபந்தத்தை அருளிச்செய்து உலகை உஜ்ஜீவிக்கச் செய்தபடியால் அருள் என்பதே ஒரு சரீரத்தை எடுத்துக்கொண்டு வந்தாற்போல் இவ்வாழ்வார் தோன்றினார் என்பதாம்.

கச்சி தன்னில்:— காசி முதலாகிய நன்னகரியெல்லாம் கார் மேனியருளாளர் கச்சிக்கொவ்வா என்று புகழ்வாய்ந்த காஞ்சீ நகரத்திலே என்றபடி.

ஐப்பசி:— ஐப்பசி மாதத்தில் சிரவண நக்ஷத்திரத்தில்.

பொருள்மிகுத்தமறை—ஸ்ரிய: பதியான நாராயணனே பரதேவதையென்கிறவுயர்ந்தபொருளை உட்கொண்ட வேதங்கள் முதல் திருவந்தாதி என்கிற பிரபந்த ரூபமாகவுலகில் விளங்குகிறது என்பது.

புவியோருய்ய:—இவர் அவதரித்துப் பிரபந்தங்களைப்பாடியதால் உலகிலுள்ளார் உய்ந்துபோனார்கள்.

பொய்கைதனில் + புனிதர்:— சொன்னவண்ணம் செய்தபெருமாளுடைய திருக்கோயிலுக்கருகேயுள்ள புஷ்கரிணியில் அயோநிஜராய்த் தோன்றியபடியால் புனிதரென்று வழங்கப்படுவர்.

இருள்தனில்:— ஒருநாள் இரவில் நல்லமழைபெய்யுங்கால் முதலாழ்வார்கள் மூவரும் கோவலூரில் ஓரிடைகழியில் நிற்கத் திரு

மால் நெருக்கவே அவரை நெஞ்சென்னுமுட்கண்ணால் கண்டனுபவித்து (அப்படி அநுபவித்ததையே பேசுகிற) பாசுரங்களைப்பாடியருளினரென்பது. திருமால இடைகழியில நெருக்கியது "நீயும் திருமகளும்" என்கிற இவ்வாழ்வார் பாசுரத்திலேயே காணலாம்.

திருவிளககாமென:—உலகத்தில ஒரு விளக்கு மறைந்திருக்கும பொருளைக்காட்டுவதுபோல் ஸாவேச்வரனாகிற பொருளை இவரருளிய பிரபந்தம் காட்டுகிறது என்றபடி.

எனககருள் செய:—அநநய கதிகளையும் ஆழ்வாருடைய சரணங்களே ப்ராப்ய ப்ராபகங்களென்று எணணியிருககிற அடியேனுக்கு அருளபுரியவேணுமென்றபடி

ஸ்ரீ தேசிகன் திருவடிகளே சரணம்.

---

திருககுடநதை ஸ்ரீ ஆராவமுதாழ்வான் ஸந்நிதி வீதி

சி ரோ ம ணி

ப. ஸ்ரீநிவாஸராகவாசாரியர்

இயற்றிய

முதல திருவந்தாதி உரை

முற்றிற்று



ஸ்ரீ:

பொய்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

# முதல் திருவந்தாதியின் செய்யுளகராதி.

| பாசுரங்களின் லக்கம். | செய்யுள். | பக்கங்களின் லக்கம். |
|---|---|---|
| 5 | அரன்நாரணன் நாமம் | 12 |
| 14 | அவரவர் தாந்தாம் | 33 |
| 17 | அடியும்படி கடப்ப | 38 |
| 22 | அறியுமுலகெல்லாம் | 47 |
| 54 | அரவமடல் வேழம் | 100 |
| 55 | அவன் தமரெவ்வினையர் | 102 |
| 57 | அயனின்றவல்வினையை | 106 |
| 59 | அடைந்தவருவினையோடு | 108 |
| 72 | அன்பாழியானை | 130 |
| 80 | அடுத்த கடும்பகைஞற்கு | 143 |
| 50 | அரியபுலனைந்தடக்கி | 95 |
| 35 | ஆறியவன்பிலடியார் | 70 |
| 45 | ஆமேயமரர்க்கறிய | 88 |
| 81 | ஆளமர்வென்றி | 146 |
| 13 | இயல்வாகவீன்றுழாயான் | 31 |
| 29 | இறையும் நிலனும் | 60 |
| 32 | இமையாத கண்ணால் | 64 |
| 39 | இடந்தது பூமி எடுத்தது | 79 |
| 78 | இடரார் படுவார் | 140 |
| 87 | இனியார் புகுவார் | 155 |
| 25 | உரைமேற்கொண்டு | 51 |
| 61 | உலகு முலகிறந்த | 112 |
| 68 | உணர்வாராருன்பெருமை | 124 |
| 99 | உளன்கண்டாய் | 174 |
| 91 | ஊனக்குரம்பையின் | 162 |

சுபமஸ்து.

---

